# நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்

அலெக்ஸாண்டர் மெக்கால் ஸ்மித்

தமிழில்: சுசரிதா பாலு




மண்ணால் வேறுபட்டிருந்தாலும் மனத்தால் உலகெங்கும் பெண்களின் துன்பங்களும் தைரியங்களும் ஒன்றேதான் என்பதற்கு அழுத்தமான ஆதாரம் நம்பர் 1 லேடீஸ் டிடெக்டிவ் ஏஜென்சி என்ற ஆங்கில நாவல். அலெக்ஸாண்டர் மெக்கால் ஸ்மித் எழுதியிருக்கும் இந்த நாவலின் நாயகி - எம்மா ரமோட்ஸ்வே! இவள், ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் இருக்கிற சாதனைத் துடிப்பின் பிம்பம்.

எம்மா ரமோட்ஸ்வே பிறந்து, வளர்ந்து, வாழ்வதெல்லாமே ஆப்பிரிக்கக் கண்டத்தின் சின்னஞ்சிறு நாடான போட்ஸ்வானா மண்ணில்.

நிறத்தாலும் மொழியாலும் உருவ அமைப்பாலும் வேறுபட்டிருந்தாலும்கூட, போட்ஸ்வானா மக்கள்

கிட்டத்தட்ட நம் கலாசாரத்தை அப்படியே நினைவுறுத்துகிறார்கள். மகளுக்கு சீதனமாகத் தர மாடுகளை வளர்க்கும் தந்தை, முழுக்க நம்பியவன் கைவிடும்போது ஏமாற்றத்தில் துடிக்கிற மகள், தொலைந்துபோன மகனை எண்ணி தவித்து நிற்கும் பெற்றோர்.. என்று ஒவ்வொரு பாத்திரத்தின் உள்ளேயும் ஊறுகிற உணர்வுகள், நம் கலாசாரத்தையும் வாழ்க்கைத் துடிப்பையும் அப்படியே நினைவூட்டுகின்றன.

துன்பங்கள் ஆயிரம் வந்தாலும், தைரியத்தோடு மட்டுமல்ல.. சின்னதொரு நகைச்சுவை உணர்வோடும் அவற்றை எதிர்கொண்டு தூளாக்க வேண்டும் என்பதில், எம்மா ரமோட்ஸ்வேக்கு நிகர் அவளேதான்!

ரமோட்ஸ்வே பயணிக்கிற பாதையில் வரும் அப்பாவிகள் நம்மை கண்கலங்க வைக்கிறார்கள். வினோத வில்லன்கள் நடுங்க வைக்கிறார்கள். கொடுமைக்காரர்கள் கொதிக்க வைக்கிறார்கள்.

தனியாக ஒரு தைரியப் பயணத்தைத் தொடங்குகிறாள் ரமோட்ஸ்வே. துணைக்கு நாமும் அவளுடன் கிளம்புவோம்..

எ ம்மா ரமோட்ஸ்வே ஆப்பிரிக்காவின் போட்ஸ்வானா நாட்டின் அழகான கலே மலை யடிவாரத்தில் சொந்தமாக ஒரு வீடு வைத்திருந்தாள். அதுவே தான் அவளது துப்பறியும் நிறுவனமும்.

நிறுவனம் என்ன பெரிய நிறுவனம், ஒரு சின்ன வெள்ளை நிற கார், இரண்டு மேஜை, நாற்காலிகள், ஒரு டெலிபோன். ஒரு பழைய மாடல் டைப் ரைட்டர்.. இதுதான் அந்த நிறுவனத்தின் மொத்த ஆஸ்தியே! போட்ஸ்வானா வின் ஒரேயரு துப்பறியும் நிபுணியும் ரமோட்ஸ்வேதான்.

இந்த மலையடிவாரத்தின் தேநீர் பார்க்க சிவப்பாகவும், நல்ல மணமாகவும் இருக்கும். இதைக் காய்ச்ச ஒரு கெட்டிலும், மூன்று கோப்பைகளும்.. ஒன்று அவளுக்கு. இன்னொன்று அவளுடைய காரியதரிசி எம்மா*மகுட்ஸிக்கு, மூன்றாவது அவளைத் தேடிவரும் வாடிக்கையாளருக்கு.

தனிப்பட்ட டிடெக்டிவ் ஏஜென்சிக்கு இதை விட, வேறு என்ன வேண்டும்? இதுபோன்ற

வேலைகளுக்கு மூலதனமே புத்திக்கூர்மையும், உள்ளுணர்வும்தான். எம்மாவுக்கு இவை இரண்டும் தேவைக்கு அதிகமாகவே இருந்தது. இவைதான் அவளை இந்தத் துப்பறியும் தொழிலைத் தொடங்கச் செய்தது.

அவள், இதை விடவும் பெரிய நாட்டில்.. பெரிய நகரத்தில் போய், இதே தொழிலை ஆரம்பித்திருக்கலாம். பெரிய நகரங்களில் வாழும் மனிதர்களிடம் பணமும் அதிகம், பிரச்னைகளும் அதிகம்.. அதற்கேற்ற ஊதியமும் நிறையவே கிடைக்குமாயிருக்கும்.

ஆனால் அவளோ, நான் ஒரு ஆப்பிரிக்க பிரஜை என்பதில் வெட்கப்படவே இல்லை. சோதனைகள் நிறைந்த இந்த நாட்டையும், கடவுள் படைத்த எல்லா மக்களையும் மிகவும் நேசிக்கிறேன். முக்கியமாக இங்கு வசிப்பவர்கள் என் சகோதர, சகோதரிகள். அவர்களுக்கு உதவுவது என் கடமை. அவர்களது பிரச்னைகளை தீர்ப்பதுதான் என் வேலை என்பாள்.

ரமோட்ஸ்வே, தன் அப்பா விட்டுச் சென்ற ஆடு மாடுகளை விற்று, அதில் கிடைத்த பணத்தில்தான் இந்த நிறுவனத்தைத் தொடங்கினாள்.

ரமோட்ஸ்வேவின் தந்தை மிக மோசமான உடல் உபாதைகளுக்கு ஆட்பட்டிருந்ததால், அவரால் எந்த முடிவும் எடுக்க முடியவில்லை. உனக்கென்று ஒரு தொழிலை அமைத்துக் கொள் ரமோட்ஸ்வே. இப்பொழுது ஆடு, மாடுகளுக்கு நல்ல விலை கிடைக்கும். விற்ற பணத்தில் ஒரு கசாப்பு கடை அல்லது பாட்டில் ஸ்டோர், எது உனக்கு இஷ்டமோ அது.. அப்பா மரணப் படுக்கையில் இதைச் சொல்ல, ரமோட்ஸ்வே உருகிப் போனாள்.

உயிருக்கு உயிரான அப்பா, புழுதி நிறைந்த சுரங்கத்தில் வாழ்நாள் எல்லாம் பாடுபட்டு, தன் மகளுக்கு ஒரு நல்ல வாழ்க்கையை அமைக்க உழைத்த மனிதர். அவரது கரங்களைப் பிடித்துக் கொண்டு, கண்ணீர் மல்க அவரைப் பார்த்தாள் ரமோட்ஸ்வே. துக்கத்தில் பேச்சு வரவில்லை. ஆனாலும் திக்கித் திணறி தன் எண்ணத்தை வெளிப்படுத்தினாள்..

அப்பா.. நான் ஒரு டிடெக்டிவ் ஏஜென்சி ஆரம்பிக்கப் போகிறேன். போட்ஸ்வானாவின் மிகச் சிறந்த நிறுவனமாக அது இருக்கும்.

அதைக் கேட்ட அவளின் தந்தை, மிகுந்த சிரமத்துடன் விழிகளை விரித்து அவளைப் பார்த்தார். குழறியபடி பேச முயற்சித்தார்.

ஆனால்.. ஆனால்..

ஆனால், அவர் எதையும் சொல்வதற்கு முன்பே இறந்து போய்விட்டார். எம்மா ரமோட்ஸ்வே, அவரது மார்பில் முகத்தைப் புதைத்தபடி விசும்பினாள். அவரது பாசத்தையும், கௌரவமான வாழ்க்கையையும், தனக்காக அவர் பட்ட பாடுகளையும் இப்பொழுது நினைத்தாலும் மனம் கனத்துப் போகும் ரமோட்ஸ்வேக்கு.

இந்த வாழ்க்கை அவர் கொடுத்தது. அப்பாவை நினைத்தால் மட்டுமே துயரம் பொங்குமே தவிர, தான் கடந்து வந்த கரடுமுரடான வாழ்க்கையை நினைத்து ஒருபோதும் அவள் சலித்துக் கொண்டதே இல்லை.

போராட்டமும், காதலும், கசப்பும் நிறைந்ததுதான் வாழ்க்கை.. என்றாலும் இதையே நினைத்து மூலையில் உட்கார்ந்திருப்பது ஒரு டிடெக்டிவ்வுக்கு அழகில்லை.

நம்பர் ஒன் பெண்கள் துப்பறியும் நிறுவனம்! ரகசியமான தகவல்கள், விசாரிப்புகள் எல்லோருக்கும் திருப்தி தரும் முறையில் நேரடி மேற்பார்வையில் சேகரித்துத் தரப்படும் வர்ணம் தீட்டப்பட்ட இப்படி ஒரு விளம்பரப் பலகையை தனது அலுவலகத்தின் முன்பும், தன் உதட்டில் மெல்லிய முறுவலையும் ஒரு சேர மாட்டினாள் ரமோட்ஸ்வே.

அவளது துப்பறியும் நிறுவனம், பலருக்கும் வியப்பை அளித்தது. இருக்காதா பின்னே.. ஒரு பெண் துப்பறி கிறாளாமே!

ரேடியோவில் அவளது பேட்டி வேறு வந்தது. போதாக்குறைக்கு தினசரி ஒன்றிலும், நாட்டின் ஒரேயரு பெண் டிடெக்டிவ் ஏஜென்ட் என்கிற செய்தி வெளியாகி இருந்தது.

ரமோட்ஸ்வே இந்தச் செய்தியை கத்தரித்து, நகலெடுத்து, தன் ஆபீசின் பார்வையான இடத்தில் ஒரு நோட்டீஸ் போர்டு மாட்டி, அதில் ஒட்டி வைத்தாள்.எந்தவொரு சிறு விஷயத்தையும் அலட்சியப்படுத்துவதில்லை அவள்.

ஆ ரம்ப நாளில், தனது வாடிக்கையாளராக வந்த ஹேப்பி பபெட்ஸியை அத்தனை சுலபத்தில் மறக்க முடியுமா? பாவம்.. என்றைக்கோ காணாமல் போன தகப்பன் திரும்பி வந்து, மறுபடியும் காணாமல் போய்..

எனது வாழ்க்கை மிகவும் சந்தோஷமாக இருந்தது. அப்போதுதான் இது நேர்ந்தது. அதற்கு மேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இப்படிச் சொல்லி உதட்டைப் பிதுக்கினாள் பபெட்ஸி. ரமோட்ஸ்வே, அவளைக் கூர்ந்து பார்த்தபடியே தேநீரை உறிஞ்சினாள்.

ஒருவருடைய முகத்தைப் பார்த்தாலே, அவரைப் பற்றிய சகல விஷயங்களையும் அனுமானித்துவிடுவாள் ரமோட்ஸ்வே. தலையின் வடிவம் முக்கியமான ஒன்று என்று பல புத்திசாலி துப்பறிவாளர்கள், தங்களது அனு பவத்தில் எழுதியிருந்தாலும், ரமோட்ஸ்வே, அதையெல்லாம் நம்பவில்லை.

முகத்தின் பொதுவான தோற்றமும், கண்களும், கண் களின் ஓரத்தில் நெளியும் சிறு கோடுகளும் மனிதரின் மனதைத் துல்லியமாகச் சொல்லிவிடும். அதிலும் இந்தக் கண்கள்தான் ஜன்னல். அதனால்தானோ என்னவோ, நிறைய பேர், வீட்டில் இருக்கும்போது கூட கறுப்புக் கண்ணாடி அணிவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை ஜாக்கிரதையாகக் கண்காணிக்க வேண்டும்.

ஹேப்பி பபெட்ஸி பெயரில் மட்டுமல்லாமல், உண்மையிலேயே சந்தோஷமான வாழ்க்கை வாழ்பவள் தான் என்பது முதல் பார்வையிலேயே தெரிந்தது. ஆனாலும் ஏதோ ஓர் ஆணால் ஏற்பட்ட பிரச்னையாகத்தான் இருக்கும் என்று ரமோட்ஸ்வே எண்ணினாள்.

எவனுடைய நடத்தையினாலோ இவள் பாதிக்கப் பட்டிருக்கிறாள் அவளது சிந்தனையை பபெட்ஸியின் குரல் கலைத்தது.

முதலில் என்னைப் பற்றிச் சொல்கிறேனே..

ம்! சொல்..

நான், ஒகாவாங்கர் அருகில் உள்ள மான் என்கிற இடத்திலிருந்து வருகிறேன். என் அம்மா ஒரு சிறிய கடை வைத்திருந்தாள். அதன் பின்புறமுள்ள வீட்டில்தான் நாங்கள் வசித்து வந்தோம். வீட்டில் நிறைய கோழிகள்.. நிறைய மகிழ்ச்சி..

.........

என்னவோ தெரியாது. நான் சிறு குழந்தையாக இருக்கும்போதே என் அப்பா எங்களை விட்டுப் பிரிந்து சென்று விட்டார். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் சரியான புரிதல் இல்லை என்று அம்மா சொல்லுவாள்.

ரமோட்ஸ்வே புன்னகைத்தாள்.

ஆனால், புல்லவாயோ என்ற ஊருக்கு வேலைக்கு சென்று விட்டதாக மட்டும் தகவல் வந்தது. எங்கள் ஊர்க்காரர் ஒருவர் புல்லவாயோவுக்கு குடிபெயர்ந்தார். அங்கே, அவர் தனக்கு வேண்டிய ஒருவரை ஆஸ்பத்திரியில் சந்திக்க வேண்டியிருந்தது. போனால்.. அங்கேதான் ஆஸ்பத்திரி வெராந்தாவில் ஒரு தள்ளு வண்டியில் இறந்து போன ஒருவரின் சடலத்தைத் தள்ளிக் கொண்டு போனதாகவும், அந்த சடலம் அசப்பில் என் தந்தையைப் போலிருந்ததாகவும், ஆனால் அவர்தானா என உறுதியாகச் சொல்ல முடியவில்லை என்றும் அவர் கூறினார்.

.........

அம்மா இதைப் பற்றி பெரிதாக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. காரணம், அவள், என் அப்பாவை நேசிக்கவில்லை. நான், எனக்கு நினைவு தெரிந்து அவரைப் பார்த்ததே இல்லை. அதனால் அப்பாவின் மரணம் என்னையும் பாதிக்கவே இல்லை.

தனது சிமிழ் மூக்கை, கைக்குட்டையால் அழுந்தத் துடைத்துக் கொண்டே, ரமோட்ஸ்வேவைப் பார்த்து மெலிதாக சிரித்தாள் பபெட்ஸி.

நான் ஒரு கத்தோலிக்க பள்ளியில் படித்தேன். எனக்கு கணக்கில் இருந்த திறமை, ஆசிரியர்களையே அசரச் செய்தது. இத்தனை திறமையாகக் கணக்கு போடும் ஒருத்தியை நாங்கள் பார்த்ததே இல்லை என்ற ஆசிரியர்கள், என்னை மேலே படிக்க வைக்கப் பெரிதும் உதவினார்கள். எந்தவொரு சிரமமும் இல்லாமலேயே, எத்தனை வரிசை எண்களைக் கொடுத்தாலும் பளிச்சென அடுத்த நிமிடமே சரியான விடையைச் சொல்லி விடுவேன். தேர்வுகளில் அபாரமாக வெற்றி பெற்ற எனக்கு, வங்கி ஒன்றில் வேலை கிடைத்து. பல பதவி உயர்வுகளைப் பெற்று, பல பேருடைய பொறாமையைத் தூண்டி விட்டவள்தான் இன்று உங்கள் முன் நிற்கிறேன். இதை சொல்லும்போது மட்டும் பபெட்ஸியின் குரலில் மெலிதான பதற்றம்.

நல்ல சம்பளம்.. மாலை மூன்று மணிக்குள் அலுவலக வேலை முடிந்து விடுகிறது. அப்புறம் கடைகளுக்குச் சென்று, வீட்டுக்கு வேண்டியதை வாங்கி வர முடிகிறது. நான்கு அறைகள் கொண்ட காற்றோட்டமான வீடு. அம்மா இருந்து, இந்த வசதியான வாழ்க்கையை அனுபவிக்கவில்லையே என்பதைத் தவிர, முப்பத்தியெட்டு வயசு பபெட்ஸிக்கு வேறு என்ன குறையாம்?

இந்த வயதுக்குள் இவ்வளவு கிடைப்பது என்பது எத்தனை பேருக்குக் கிடைக்கும். என்னோடு வேலை செய்பவர்களுக்கு, எங்கே நான், மேலும் பதவி உயர்வு பெற்று, அவர்களை எல்லாம் முட்டாளாக்கி விடுவேனோ என்பதுதான் பெரிய கவலை..

நீ சொல்வது ரொம்பவும் சுவாரஸ்யமாக இருக்கிறது - ரமோட்ஸ்வே சொன்னாள்.

அப்படிப்பட்ட உனக்கு என்னதான் பிரச்னை என்று அவள் கேட்கவில்லை. யாராக இருந்தாலும், அவர்களது பிரச்னையை, அவர்களே சொல்லி முடிக்கும் மட்டும் ரமோட்ஸ்வே காத்திருப்பாள். இடையே குறுக்கிட மாட்டாள். இந்தத் தொழிலுக்கு பொறுமை மிகவும் அவசியம் என நினைப்பவள் அவள்.

ஆதலால் பபெட்ஸி பேசுவதைக் கேட்கக் காத்திருந்தாள்.

நான் ரொம்பவும் கொடுத்து வைத்தவள் என்கிற மகிழ்ச்சியில், மிக சுதந்திரமாக, ஆனந்தமாக, வாழ்க்கையின் ஒவ்வொரு துளியையும் அனுபவித்துக் கொண்டிருக்கும்போதுதான் அது நடந்தது.

.......

அதாவது, இறந்து போனதாகச் சொல்லப்பட்ட என் அப்பா திரும்பி வந்து விட்டார்!

ரமோட்ஸ்வே, நிமிர்ந்து உட்கார்ந்தாள். உண்மையிலேயே ரமோட்ஸ்வேக்கு இது வியப்புக்குரிய செய்தி.. ஹேப்பி பபெட்ஸியின் விவகாரத்தில் நிச்சயம் ஒரு காதல் வில்லங்கம்தான் இருக்கும் என அவள் நினைத்திருந்தாள்.

ஏனெனில் அவள் வயது, தோற்றம், வசதி எல்லாம் அப்படி. ஆனால், அப்பா திரும்பி வந்து விட்டதாகச் சொல்கிறாளே!

பபெட்ஸி தொடர்ந்தாள்..

அது ஒரு சனிக்கிழமை மாலை.. நான், படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். திடீரென அவர், கதவைத் தட்டி விட்டு உரிமையுடன் உள்ளே நுழைந்தார். ஆனாலும் வாசற் கதவருகேயே நின்றார், கையில் தொப்பியுடன்! வயது அறுபது இருக்கும்.

........

அவர் பல வருடங்களாக புல்லவாயோவில் வசித்து வந்ததாகவும், இப்பொழுது போட்ஸ்வானாவுக்குத் திரும்பி விட்டதாகவும், என்னைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றியதால் வந்ததாகவும் சொன்னார்.

இதைச் சொல்லும்போதே ஹேப்பி பபெட்ஸியின் நாதழுதழுத்தது.

எனக்கு எவ்வளவு அதிர்ச்சியாக இருந்திருக்கும் என்று உங்களுக்குப் புரிகிறதா? நின்று கொண்டிருந்தவள், இந்த ஷாக்கில் உடனே உட்கார்ந்து விட்டேன். இல்லையென்றால்.. இல்லையென்றால்.. மூர்ச்சையாகி யிருப்பேன். .......

அவர், என் அம்மாவின் பெயரை மிகச் சரியாகச் சொன்னார். அது நாள் வரையில் தொடர்பு கொள்ளாமல் இருந்ததற்கு மன்னிப்பு கேட்டார். இப்போது போக்கிடம் இன்றி வந்திருப்பதாகச் சொல்லி, உன் வீட்டின் ஒரு மூலையிலாவது இடம் கொடுப்பாயா? என்று அவர் கேட்டபோது, நான் அழுதே விட்டேன். ........

இத்தனை வருடங்களுக்குப் பிறகு என் தந்தையை மறுபடியும் பார்த்த மகிழ்ச்சி. மேலும், அம்மா இறந்த பிறகு, எனக்கென்று வேறு யார் இருக்கிறார்கள். அதனால், அவருக்கு ஒரு அறையை ஒதுக்கி, படுக்கை போட்டுக் கொடுத்தேன். இந்த வயதிலும் அவர் நிறைய சாப்பிடுபவர் என்பதை புரிந்து கொண்டேன். நிறைய மாமிசம்.. உருளைக்கிழங்கு போட்டு சமைத்துக் கொடுத்தாலும், திருப்தியில்லாமல் இன்னும் இருக்கிறதா? என்று கேட்பார். தவிர தினமும் ஒரு பீர் பாட்டில்..

ரமோட்ஸ்வே புன்னகைத்தாள்.

அவருக்குச் செய்வதில் நான் அலுக்கவே இல்லை. ஆனால், இது போல மூன்று மாதங்களுக்கும் மேலாக, ஒரு விருந்தினர் போல, அறையிலேயே இருக்கிறார். எல்லாமே, அவரைத் தேடி வர வேண்டும் என எதிர்பார்க்கிறார். நான் அவருக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. துணிமணிகள் ஆசையாக வாங்கித் தந்தேன். ஷூ கூட. தினமும் காலை, மதிய உணவைச் செய்து வைத்துவிட்டு ஆபீசுக்கு ஓடுவேன். இரவு திரும்பி வந்து, டின்னருக்கு ஏற்பாடு செய்வேன்.

கண்களில் துளிர்த்த நீரை, நாசூக்காகத் துடைத்துக் கொண்டாள் பபெட்ஸி.

இத்தனைக்கும் அவர் வாசலில் உள்ள நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, அடுத்தடுத்து ஏதாவது

வேலை சொல்லிக் கொண்டே இருப்பார். அவரது துணிகளை முதற் கொண்டு நான் துவைத்து உலர்த்த வேண்டும்.

ஆண்களில் பலர் அப்படித்தான் இருக்கிறார்கள். - ரமோட்ஸ்வே கூறினாள். பபெட்ஸி, அதை ஆமோதிக்கும் வகையில் தலையாட்டினாள்.

அவர், வந்ததிலிருந்து இப்படித்தான் இருக்கிறார். இதுவரையில் அவர், சாப்பிட்ட தட்டைக் கூடக் கழுவி வைத்ததில்லை. அவர் பின்னால் ஓடி ஓடிச் செய்து, எனக்கு உடம்பு அசந்து போகிறது. அது மாத்திரம் இல்லை. என் சம்பளத்தில் பெரும் பகுதி, அவருடைய வைட்டமின் மாத்திரைகளுக்கே போகிறது.

அவள் மீண்டும் மூக்கை அழுந்த உறிஞ்சினாள்.

நான் இப்படி செய்வதை வெறுக்கவில்லை. ஆனால், எனக்கு அவர், உண்மையான அப்பாதானா, என்கிற சந்தேகம் வந்து விட்டது. இதை எப்படி தெளிவாக்கிக் கொள்வது என்றும் தெரியவில்லை. அவர் என் சொந்த அப்பாவாக இருந்தால், நான் இத்தனை கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாரா? ஒருவேளை, என் தந்தை இறப்பதற்கு முன், என் குடும்பத்தைப் பற்றித் தெரிந்து கொண்டு, என் தந்தையைப் போல நடிக்கிறாரா?

எம்மா ரமோட்ஸ்வே, அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். என்னவோ தெரியவில்லை. அவளுக்கு, தனது பாசமிகு அப்பாவின் நினைவு வந்தது.

வயசான காலத்தில், நிம்மதியாக தங்கி ஓய்வெடுக்க என் வீட்டை அவர் தேர்ந்தெடுத்திருக்கிறாரோ என நினைக்கிறேன்.

பபெட்ஸியை வியப்புடன் பார்த்தாள் ரமோட்ஸ்வே. அவளது புத்திக்கூர்மை ரமோட்ஸ்வேக்குப் பிடித்திருந்தது. அவள் உண்மையைத்தான் சொல்கிறாள். அதில் துளியும் சந்தேகமில்லை. ஆண்களின் அராஜகம் பற்றி, ரமோட்ஸ்வே நன்றாகவே உணர்ந்திருந்தாள்.

அதை நினைக்க நினைக்க, வெறுப்பே மேலிட்டது.

எத்தனை துணிச்சல் இருந்தால், நல்ல மனம் கொண்ட, சந்தோஷத்துடன் வளைய வந்து கொண்டிருந்த பெண்ணின் முதுகில் சுமையாக ஏறி உட்காருவார் அந்தக் கிழவர். எத்தனை சூழ்ச்சியும், வஞ்சகமும் நிறைந்த ஏமாற்று வேலை இது..

உங்களால் எனக்கு உதவ முடியுமா எம்மா ரமோட்ஸ்வே? அவர், என் உண்மையான தந்தையா, இல்லையா என்று உங்களால் கண்டுபிடிக்க முடியுமா? அவர் நிஜமாகவே என் தந்தையாக இருந்தால், அவரை ஆயுள் முழுவதும் காப்பாற்ற நான் கடமைப் பட்டிருக்கிறேன். இல்லை என்றால், அவரை நான் சகித்துக் கொள்ள வேண்டிய அவசிய மில்லை.

எம்மா ரமோட்ஸ்வே துளிக் கூடத் தயங் காமல் பொறுப்பை ஏற்றுக் கொண்டாள்.

மூன்று அல்லது நான்கு நாட்கள் அவகாசம் கொடு பபெட்ஸி. நான் கண்டு பிடித்துவிடுவேன் என்று தீர்க்கமாகச் சொன்னாள் ரமோட்ஸ்வே.



'சொல்வது சுலபம்; ஆனால், செயலாக்குவதுதான் கடினம். ரத்தப் பரிசோதனை இருக்கிறது. ஆனால், அதற்கு அந்த மனிதர் சம்மதிப்பாரா என்பது சந்தேகம்தான். ஆகவே வேறு வழிதான். தந்திரமாகவும் சாமர்த்தியமாகவும் தீர்மானமாகவும் கண்டுபிடிக்க வேண்டும். எப்படி? எம்மா ரமோட்ஸ்வே யோசனையில் ஆழ்ந்தாள்.

இதுபோல ஒரு குழந்தைக்கு இரண்டு தாய்மார்கள் உரிமை கொண்டாடினார்களே! அதற்கு சாலமன் அரசர் என்ன தீர்ப்பளித்தார்? - அவள் மனம் எங்கெங்கோ ஓடியது.

எம்மா ரமோட்ஸ்வேக்கு நர்ஸ் சிநேகிதி ஒருத்தி உண்டு. அவளிடமிருந்து, நர்ஸ் யூனி.ஃ.பார்ம் ஒன்றை இரவலாக வாங்கிக் கொண்டாள். இவளை விடவும், அந்த நர்ஸ் கொஞ்சம் ஒல்லியானவள். ஆதலால் உடை கொஞ்சம் இறுக்கமாகத்தான் இருந்தது. சிரமப்பட்டு அந்த உடையைப் போட்டுக் கொண்டு, சே.ஃ.ப்டி பின்களை போட்டு முடித்த பின் மெரினா ஹாஸ்பிடல் நர்ஸ் மாதிரி தோற்றமளித்தாள் எம்மா ரமோட்ஸ்வே.

அட! பரவாயில்லையே.. வேஷம் பொருத்தமாக இருக்கிறது. இந்த உடையைக் கூட அவசியத்துக்குப் போட்டுக் கொள்ளலாம்.

அவள், தன்னுடைய சிறிய வேனில் புறப்பட்டு விட்டாள்.

உறவினர்களைப் பாதுகாத்து, அவர்களுக்கு உதவி செய்து காப்பாற்ற வேண்டும் என்கிற எண்ணம் ஆப்பிரிக்க மக்களிடையே பரம்பரையாக வந்த பழக்கம்..

இது எத்தனை மனிதர்களைத் துன்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது? அவளுக்குத் தெரிந்த ஒரு போலீஸ் சார்ஜன்ட்.. ஒரு மாமா, இரண்டு அத்தைகள், ஒன்று விட்ட சகோதரன் ஒருவன் என, இத்தனை பேரையும் காப்பாற்றி வந்தார்.

உறவினர்கள் வேறு வழியில்லாமல் அடைக்கலம் தேடி வந்தால், வரவேற்பது நல்ல குணம்தான். ஆனால் இதையே ஒரு சாக்காக வைத்துக் கொண்டு எத்தனை ஒட்டுண்ணிகளும், அட்டைப் பூச்சிகளும் அடுத்தவர் வாழ்வில் புகுந்து நாசம் செய்கிறார்கள். இவர்களைப் போன்றவர்களால்தான், கூட்டுக் குடும்ப அமைப்புக்கும், பரம்பரைக்கும் கெட்டபெயர்.

பபெட்ஸியின் வீட்டை நெருங்கும்போது, எம்மா ரமோட்ஸ்வே வண்டியின் வேகத்தை அதிகரித்தாள். பபெட்ஸி சொன்னபடி, அவள் தந்தை வாசலில் ஒரு சாய்வு நாற்காலியில்தான் அமர்ந்திருந்தார். 'இந்த வேகத்தைப் பார்த்து அவர் பதற வேண்டாம்' என அவள் நினைத்தாள்.

அவளது எண்ணம் வீண் போகவில்லை. காலைப் பொழுதை சுகமாக அனுபவித்தபடி

அமர்ந்திருந்தவர், வண்டியின் வேகத்தைப் பார்த்து, நிமிர்ந்து உட்கார்ந்தார். வண்டியை பெரும் குலுக்கலுடன் நிறுத்தியவள், கதவை திறந்து கொண்டு, காரிலிருந்து குதித்து ஓடினாள்.

நீங்கள்தான் பபெட்ஸியின் அப்பாவா? அவள் மூச்சிரைக்கக் கேட்டாள்.

ஆமாம். நான்தான்.. அவரது குரலில் பெருமை தொனித்தது.

எம்மா ரமோட்ஸ்வே பதட்டமாகச் சொன்னாள்.. ஒரு விபத்து நடந்து விட்டது. பபெட்ஸி இப்பொழுது மருத்துவமனையில் மிகவும் கவலைக்கிடமான நிலையில் இருக்கிறாள். அவளுக்குப் பெரிய அறுவை சிகிச்சை உடனடியாக நடத்த வேண்டும்.

ஐயோ! என் அருமை மகளே.. அவர் அலறினார்.

நல்ல நடிகர்தான்! எம்மா ரமோட்ஸ்வே ரகசியமாக அவரது நடிப்பை ரசித்தாள் என்றே சொல்லலாம்.

ஒருவேளை இவர்தான், அவளுடைய.. மனம் கொஞ்சம் பேதலிக்க உடனேயே தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டாள்.

இல்லை.. இல்லை.. பபெட்ஸியின் உள்ளுணர்வு சரியாகத்தான் இருக்கும். பார்க்காத அப்பா என்றால் கூட, பெண்ணுக்கு, இதுபோன்ற விஷயங்களில் புத்திக்கூர்மை அதிகமாகவே இருக்கும்.

இப்பொழுது எம்மா, மிகவும் கவலையுடன் கூறினாள். பபெட்ஸியை நாம் இழந்து கொண்டிருக்கிறோம். அவள் மிகவும் மோசமான நிலையில்.. நிறைய ரத்தம் சேதமாகி விட்டது. உடனடியாக அதிக ரத்தம் செலுத்தியாக வேண்டும்.

அதற்கு எவ்வளவு செலவாகும்? பெரியவர் இழுத்தார்.

பணம் ஒரு முக்கிய விஷயமில்லை. அவளுடைய பிளட் குரூப் ரொம்பவும் அபூர்வமானது. அவள் தந்தையான உங்களுக்கும் அதே குரூப்தானாமே!

யார் சொன்னது..? கிழவரின் குரல் நடுங்கியது.

பபெட்ஸியின் டைரியில் இருந்தது. நீங்களும், அவளும் ஒரே பிரிவு ரத்தம் என்று.. உங்களைத் தவிர வேறு யாரும் தற்சமயம் இந்தப் பிரிவில் இல்லை. சிரமத்துக்கு மன்னியுங்கள். உடனே புறப்படுகிறீர்களா?

எழுந்து நின்றிருந்த மனிதர் பொத்தென அமர்ந்தார்.

நான் வயதானவன்.. இந்த வயதுக்கு மேல் ரத்தம் எடுப்பது சரியில்லை.

எம்மா ரமோட்ஸ்வேயின் பார்வை, அவர் மீது மிக ஆழமாகப் பதிந்தது.

பபெட்ஸிக்கு மிக அதிக அளவில் ரத்தம் செலுத்தியாக வேண்டும். இந்தப் பிரிவு ரத்தமோ உங்கள் ஒருவரிடம் தான் இருக்கிறது. வயதானவராக இருந்தாலும் நீங்கள், அவளுடைய அப்பா இல்லையா? மகளைப் பிழைக்க வைக்க, நீங்கள் உயிரையும் கொடுக்க சித்தமாயிருக்...

ஐயோ.. நான் இறந்து விடுவேனா..?

சொல்ல முடியாது, அப்படி ஒரு நிலை ஏற்பட்டாலும், மகளைக் காப்பாற்ற, தன் உயிரையும் விட்ட தந்தை இப்படி பபெட்ஸி உங்கள் கல்லறையில் எழுதி வைக்க மாட்டாளா? சீக்கிரம் கிளம்புங்கள். டாக்டர் காத்திருக்கிறார்.

கிழவர் வாயைத் திறந்து மூடினார்.

சீக்கிரம்.. நான் வேண்டுமானால் உதவட்டுமா?

எம்மா ரமோட்ஸ்வே, அவரது கையைப் பிடித்து இழுக்க, அவரோ அழுத்தமாக உட்கார்ந்து விட்டார்.

ஊஹூம்.. என்னால் முடியாது.

சேச்சே.. அப்படி சொல்லக் கூடாது.. நீங்கள் கண்டிப்பாக உங்கள் மகளுக்கு உதவத்தான் வேண்டும்.

அவர் மெதுவாகத் தலையை அசைத்தார். மிகவும் நைந்த குரலில், மிரட்சியுடன் கூறினார்.

நான் கொடுக்க முடியாது. நான் அவளுடைய தந்தை இல்லை. ஏதோ தவறு..

எம்மா ரமோட்ஸ்வே, தன் பிடியைத் தளர்த்தினாள். பின், இரு கைகளையும் மார்பின் குறுக்காகக் கட்டிக் கொண்டு, அவர் எதிரில் நின்றாள்.

ஓஹோ! நீ அவள் தந்தை இல்லையா? அப்படியானால் எதற்காக, இங்கே நாற்காலியில் சாய்ந்து, அவளது உணவைச் சாப்பிடுகிறாய்? உன் மாதிரி ஆள் மாறாட்ட கேஸ்களுக்கு சட்டத்தில் என்ன தண்டனை தெரியுமா?

அவர் தலை குனிந்து, தெரியும் என்கிற மாதிரி தலையை அசைத்தார்.

உனக்கு ஐந்து நிமிடங்கள் தருகிறேன். உன் உடமைகளை எடுத்து வா. நானே உன்னை பஸ்

ஸ்டாண்டில் விடுகிறேன். பஸ்ஸில் ஏறி, உன் ஊருக்குப் போகிற வழியைப் பார்.

எனக்கு என் ஊர் பிடிக்கவில்லை.

சும்மா நாற்காலியில் உட்கார்ந்து இருப்பதை விட்டு, ஏதாவது வேலை செய்.. உழைத்தால் எந்த ஊரும் பிடிக்கும். அங்கே பூசணிச் செடிகள் வளர்க்கின்றனர். அங்கு போய், கூலிக்கு வேலை தேடு.. இன்னும் நாலு நிமிடங்கள்தான் இருக்கிறது.

ப பெட்ஸி வீடு திரும்பியபோது அப்பாவும் இல்லை. அவரது பொருட்களும் இல்லை. மாறாக, எம்மா ரமோட்ஸ்வே எழுதி வைத்த துண்டுச் சீட்டு, அவளது சமையலறை மேடையில். அதைப் படித்து பபெட்ஸியின் முகம் மலர்ந்தது இருக்கிறதே.. அடடா!

அவர் உன் தந்தை இல்லை. அவர் வாயிலிருந்தே அந்த உண்மையை வரவழைத்தேன். உன் உண்மையான தந்தை ஒருவேளை திரும்பி வரலாம்.. வராமலும் போகலாம். அதுவரையில் சந்தோஷமாக இரு.

த ன் அப்பா ஓபட் ரமோட்ஸ்வே பற்றி நினைக்கும்போதெல்லாம் ரமோட்ஸ்வேயின் கண்கள் கலங்கும். நான்.. பிரஷியஸ் (இதுதான் நம் நாயகி ரமோட்ஸ்வேயின் இயற்பெயர்).. போட்ஸ்வானாவின் பிரஜை. சுரங்கத்தில் வேலை செய்து, சுவாசிக்க முடியாமல் இறந்த ஓபட் ரமோட்ஸ்வேயின் ஒரே மகள்.. ஒரு சாதாரண மனிதனின் வாழ்க்கை வரலாறு எழுதப்படாத ஒன்று.. அப்பா, தன் வாழ்க்கையை, ஒரு சுயசரிதையாக எழுதியிருந்தால், இப்படித்தான் எழுதியிருப்பார் என்றும் அவள் நினைத்துப் பார்ப்பதுண்டு.

'1930ஆம் ஆண்டு மஹாலப்பேக்கு அருகில் ஒரு கிராமத்தில் பிறந்தேன். சிறு வயதிலேயே நாங்கள் மஹாலப்பேயிலிருந்து, என் தாயாரின் உறவினர்கள் வசிக்கும் மொச்சுடிக்குக் குடிபெயர்ந்தோம். எனக்கு அந்த இடம் பிடித்திருந்தது. சந்தோஷமாக அங்கேயே வாழ்ந்திருப்பேன். ஆனால், என் அப்பா என் நிலத்தில் வரும் வருமானம் எனக்கும் என் மனைவிக்கும் போதுமானதாக இல்லாததினால், நீ சுரங்க வேலைக்குப் போய்த்தான் ஆக வேண்டும்' என்று என்னிடம் கூறினார்.

மறுநாளே, போட்ஸ்வானாவிலிருந்து தென் ஆப்பிரிக்காவின் ஜோஹனஸ்பர்க் நோக்கி என் பயணம் தொடங்கியது. இந்தியக் கடையில் வாங்கிய ஒரு டிரங்கு பெட்டிதான் என் ஆஸ்தி. என்னிடம் ஒரு ஜோடி காலணி, ஒரு சட்டை, பேன்ட் இவைதான் உபரியாக இருந்தது. சாலை மிகவும் மோசமாக இருந்ததினால், ஜோஹனஸ்பர்க் போய்ச் சேர பனிரெண்டு மணி நேரம் பிடித்தது.

நான், பல வருடங்கள் இந்த சுரங்கங்களில் உயிரைப் பணயம் வைத்து வேலை செய்து, என் சம்பாத்தியத்தை எல்லாம் சேமித்து வைத்தேன். எல்லாரும் பட்டணத்துப் பெண்களிடமும், குடியிலும், விலையுயர்ந்த துணிமணிகளை வாங்குவதிலும் காசைக் கரியாக்கினார்கள். நான் எதுவுமே வாங்குவதில்லை. எல்லாப் பணத்தையும் சேமித்துக் கொண்டு, சொந்த ஊரில் நிறைய ஆடு, மாடுகளை வாங்கினேன். ஒவ்வொரு வருடமும் சில பசுக்களை வாங்கி, என் உறவுக்காரப் பையனின் மேற்பார்வையில் விட்டேன். அவை கன்று ஈன்று, என் மந்தையை மேலும் விரிவடையச் செய்தது.

1960-ல் சுரங்கங்களை விட்டு வெளியேறி, என் சொந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன். ஊரிலிருந்து வந்து, பஸ்ஸை விட்டு இறங்கியவுடன் அங்குள்ள இடங்களையும் ஆடுகளையும் பார்த்தவுடன் நான் சந்தோஷத்தில் அழுதே விட்டேன். எனக்கு முன்பின் தெரியாத ஒரு மனிதன், என்னருகில் வந்தான். புன்னகையுடன் என் தோளைத் தொட்டான். 'சுரங்கத்திலிருந்து வருகிறீர்களா?' என்றான். 'ஆமாம்' என்றேன். என் அழுகை நிற்கும் வரையில், என் தோளிலேயே கையை வைத்திருந்தவன், பின்பு புன்சிரிப்பு மாறாமலேயே நகர்ந்து சென்றான்.

என் மனைவி வந்து கொண்டிருப்பதைப் பார்த்து எங்களுக்கு இடையில் தொந்தரவு தரக் கூடாது என்று விலகிச் சென்றான் போல..

நான், அவளை மணந்து மூன்று வருடங்கள் ஆகியிருந்தன. இருந்தாலும் நாங்கள் சந்தித்து, சேர்ந்து இருந்த நாட்கள் மிகவும் குறைவு. ஜோஹனஸ்பர்க்கிலிருந்து வருடத்துக்கு ஒருமுறை, ஒரு மாத விடுப்பில் வருவேன். அவ்வளவுதான். நான் கடைசி முறை வந்து, சென்ற போது அவள் கருவுற்றாள். நான் இல்லாதபோது, என் சின்னஞ்சிறு மகள் பிறந்தாள். அந்தக் குட்டி தேவதையை, நான் இப்போதுதான் முதன் முதலில் பார்த்தேன்.

பின் ஒருநாள் திடீரென என் மனைவி இறந்து விட்டாள். துக்கத்தை மறக்க, என் மந்தைகளைப் பார்க்கவும், அதை மேற்பார்வையிடும் பையன்களுக்கு சம்பளம் தரவும் சென்றேன். இப்பொழுது,

என்னிடம் நிறைய ஆடு, மாடுகள் இருந்தன. ஒரு கடை திறக்கலாமா என்றுகூட யோசித்தேன். ஆனால், ரமோட்ஸ்வே பெரியவளாகும் வரையில் காத்திருந்து, என் இறப்புக்குப் பின் அவளது விருப்பப்படி செய்து கொள்ளட்டும் என நினைத்தேன்.

என்னுடைய ஒன்று விட்ட சகோதரிதான் ரமோட்ஸ்வேயைப் பார்த்துக் கொள்ள வந்தாள். சமைத்துப் போட்டு, அவளைப் பள்ளிக்கு அழைத்துச் செல்வது, துணிகளைத் தைப்பது போன்ற எல்லாக் காரியங்களையும் அவள் செய்தாள். என்னால், எதையும் கவனிக்க முடியவில்லை. என் துக்கம்தான் எனக்கும் பெரிதாகப் பட்டது.

சுரங்கங்கள் மனிதர்களை அழிக்கின்றன.. அவைகளை விட்டு, அவர்கள் நெடுந்தூரம் வந்த பின்பும், அவை அழிப்பதை விடுவதில்லை..

உண்மைதான்.. பாறைகள் இடிந்து விழுவதால் புதையுண்டு இறக்கலாம். எத்தனை வருடங்களுக்குப் பிறகும், சுரங்கத்தில் வேலை செய்ததை ஒரு கெட்ட கனவாக நினைத்துப் பார்க்கும்போது, அந்த நினைவே, நம்மை அழித்து விடலாம். அந்தச் சுரங்கங்கள் தங்கள் கடனைத் தீர்த்துக் கொள்வதென்னவோ நிச்சயம். அதுதான் இப்போது எனக்கும் நேர்ந்து கொண்டிருக்கிறது.

மரணம், என் முதுகுக்குப் பின்னால் எப்போதும் தொடர்வதாக நான் நினைப்பதுண்டு. காரணம், சுரங்கத்தில் வேலை செய்ததினால், அந்தப் புழுதி மண், என் சுவாசப் பைகளை மிகவும் பாதித்திருந்தது. என்னால் வேகமாக நடக்கவோ, கனமான பொருட்களைத் தூக்கவோ முடியவில்லை.'

ர மோட்ஸ்வேயின் அத்தை, தன் அண்ணன் மகளை மிகுந்த புத்திசாலியாக வளர்க்க விரும்பினாள். ஒருவேளை, அவளின் ஆசைதான் இன்றைக்கு ரமோட்ஸ்வேயை இந்த நிலைக்கு உயர்த்தியிருக்கிறதோ!

அத்தைக்கு, படிப்பறிவு கொஞ்சம்தான். எழுத்துக்களைப் படிப்பதற்கு சற்று தாமதமானாலும், விடாப்பிடியாக எழுத்துக் கூட்டிப் படிப்பாள். ரமோட்ஸ்வே, தன்னைப் போல இருக்கக் கூடாது என்பதில் மிகவும் உறுதியாக இருந்தாள்.

முதலில் ரமோட்ஸ்வேக்கு எண்களை எண்ணுவதற்குச் சொல்லிக் கொடுத்தாள். விளையாட்டாக, மந்தையில் உள்ள ஆடு, மாடுகளை எண்ணினார்கள். புழுதியில் விளையாடும் பையன்களையும் எண்ணினார்கள். ஒவ்வொரு மரத்தையும் ஏதோ ஒரு பெயரிட்டு, வளைந்த மரம், இலையேயில்லாத மொட்டை மரம், புழுக்கள் ஒளிந்து கொள்ளும் மரம், பறவைகள் சீந்தாத மரம்.. இப்படி எண்ணினார்கள்.

சில சமயங்களில், பக்கத்தில் உள்ள மளிகைக் கடை வாசலில் அமர்ந்து கொள்வார்கள். அந்தப் பாதையில் போகும் கார், டிரக் முதலிய வாகனங்கள், பள்ளத்தில் குதித்தெழுந்தும் போகும்போது, காரின் பின்புறம் எழுதியுள்ள எண்ணை அத்தை சொல்ல, ரமோட்ஸ்வே அதை நினைவில் வைத்துக் கொண்டு மறுநாள் அத்தை கேட்கும்போது, சொல்லிவிட வேண்டும். சிலசமயம் மறுநாள் கேட்கவே மாட்டாள். நினைத்தாற்போலிருந்து இரண்டு நாட்கள் கழித்துக் கேட்பாள்.

ரமோட்ஸ்வே, ஆறு வயதில் பள்ளிக்குச் செல்லும் முன்பே ஆங்கில எழுத்துக்களை எழுதவும், படிக்கவும், இருநூறு வரையில் எண்களை எழுதவும், பைபிளின் முதல் பகுதியை (மொழிபெயர்ப்பில்) சொல்லவும் தெரிந்து வைத்திருந்தாள். சில ஆங்கில வார்த்தைகளும், கடல், கப்பல் பற்றியும், கவிதைகளின் நான்கு பாராக்களும் மனப்பாடமாகத் தெரியும் அவளுக்கு.

ரமோட்ஸ்வே, தேவாலயத்தில் ஞாயிறுதோறும் நடக்கிற ஞாயிறு பள்ளிக்கும் சென்றாள். மக்களுக்கு தெளிவான வழிமுறைகள் தெரிய வேண்டுமானால், சுமார் பனிரெண்டு வருடங்களாக ஞாயிறு பள்ளியை நடத்தி வரும் மோத்திபியை விடச் சிறந்தவர் யாருமில்லை. அசாதாரணமான குரல்வளம். பார்க்க குள்ளமாக, பருத்திருப்பாள். குழந்தைகளுக்கு ஆங்கிலத்திலும் அவர்களுடைய தேசிய மொழியான 'ஸெட்ஸ்வானா'விலும் பல பாடல்களைக் கற்றுத் தந்திருக்கிறாள். அவள் கற்றுக் கொடுத்ததினாலோ என்னவோ.. அத்தனை குழந்தைகளும், கீழ் சுருதியில் தவளைகள் கத்துவதுபோல கத்துவார்கள்.

மோத்திபியின் உபதேசம் பெரும்பாலும் இப்படித்தான் இருக்கும்.. ஒருவன் நல்லவன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும். விடிகாலையில் எழுந்து கடவுளை பிரார்த்திக்க வேண்டும். தனது காலணிகளைச் சுத்தம் செய்து வைத்து விட்டு, காலை உணவு செய்ய தாயாருக்கு உதவ வேண்டும். பிறகு, பள்ளிக்குச் சென்று ஆசிரியர் சொல்வதை கவனமாகக் கேட்க.."

- மோத்திபி இப்படி சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, இதையெல்லாம் பெண்களான நாங்கள் வேண்டுமானால் மதித்துக் கேட்போம். பையன்களுக்கு இதெல்லாம் புரியாது.. என ரமோட்ஸ்வே நினைப்பாள். அவள் அப்படி நினைப்பதற்கு மிக முக்கியமான காரணமே ஒன்பது வயதேயான ஜேஸய்யா என்கிற பொல்லாத பையன்தான்.

ரமோட்ஸ்வே எவ்வளவுதான் அவனைத் தவிர்க்கப் பார்த்தாலும், அவன், அவளருகில் நெருக்கியடித்துத் தான் உட்காருவான். இத்தனைக்கும் ரமோட்ஸ்வே அவனை விடவும் இரண்டு வயது பெரியவள். எப்போதும், இவளைப் பார்த்து இளிப்பதுதான் அவன் வேலை. அடிக்கடி, கால்களால் இடித்துக் கொண்டே இருப்பான். ரமோட்ஸ்வே சங்கடத்துடன் நெளிந்து, நகர்ந்து கொள்வாள்.

இது மாத்திரம் இல்லை, தன்னுடைய கால் சட்டையின் பொத்தானை அவிழ்த்து விட்டு, ரமோட்ஸ்வேயைக் குனிந்து பார்க்கச் சொல்லி வற்புறுத்துவான். ரமோட்ஸ்வேக்கு இது துளிக்கூடப் பிடிக்கவில்லை. கடைசியில் தொல்லை தாங்காமல், மோத்திபியிடம் புகார் செய்தாள். ஆசிரியை கவனமாகக் கேட்டாள்.

பையன்கள் மாத்திரம் இப்படியில்லை. எல்லா ஆண்களுமே இப்படித்தான். இது ரொம்பவும் அசிங்கமான, கேலிக்குரிய விஷயம் என்று அவர்களுக்குத் தெரியவில்லை இப்படி கூறினாள் மோத்திபி.

அடுத்த தடவை அவன் அப்படிச் செய்யும்போது, ரமோட்ஸ்வே.. நீ கையைச் சற்று உயர்த்தினால் போதும். அதுதான் எச்சரிக்கை என்றும் ஆசிரியை கூறினாள்.

அடுத்த வாரம் அது நடந்தது. மோத்திபி, பின் வரிசையில் உள்ள குழந்தைகளின் புத்தகங்களைச் சரிபார்த்துக் கொண்டிருந்தாள். ஜேஸய்யா வழக்கம் போல, ரமோட்ஸ்வேயைக் குனிந்து பார்க்கச் சொல்லி ரகசியமாகச் சொன்னான். ரமோட்ஸ்வே, தனது பாடப் புத்தகத்திலிருந்து கண்களை எடுக்காமல், இடது கையை சற்று உயர்த்தினாள். அவன் இதைப் பார்க்கவில்லை. ஆனால் மோத்திபி பார்த்து விட்டாள்.

பின்புறமாக வந்து, வலது கையில் உள்ள பைபிள் புத்தகத்தினால், அவனது தலையில் பலமாக ஒரு அடி போட்டாள். குழந்தைகள் திடுக்கிட்டு, திரும்பிப் பார்த்தனர். அந்தப் பையன் அதிர்ச்சியில்

நிலைகுலைந்து போனான். மோத்திபி அவனெதிரில் வந்து நின்று, அவனுடைய கால் சட்டையைச் சுட்டிக் காட்டி, முன்னை விடவும் பலமாக இன்னொரு அடி கொடுத்தாள்.

அவ்வளவுதான்! இதற்குப் பிறகு அவன், ரமோட்ஸ்வேயையோ, வேறு எந்தப் பெண்ணையுமோ தொந்தரவு செய்வதில்லை. ஆண்களை எப்படி நடத்த வேண்டும் என்பதை அந்த வயதிலேயே அறிந்து கொண்டாள் ரமோட்ஸ்வே. இந்தப் பாடம் அவளுக்கு பல வருடங்களுக்கு உதவியாக இருந்தது.

------------------------------------------------------------



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 3

------------------------------------------------------------

ஆ ப்பிரிக்காவில் உள்ள போட்ஸ் வானா நாட்டின் ஒரே துப்பறியும் பெண் எம்மா ரமோட்ஸ்வே. தன்னை உயிருக்குயிராக நேசித்த தன் தந்தை பற்றியும் தாயின் இழப்பு தெரியாமல் கண்ணுக்குள் வைத்து வளர்த்த தன் அத்தையைப் பற்றியும் தன் இளமைப் பருவம் பற்றியும் நினைத்துப் பார்க்கிறாள் ரமோட்ஸ்வே.

முதல் எட்டு ஆண்டுகள் அத்தையின் பராமரிப்பில் ரமோட்ஸ்வே வளர்ந்தாள். இப்படியே காலம் முழுக்க அவள் தொடர்ந்து இருந்திருந்தால், ரமோட்ஸ்வேயின் தந்தை ஓபட்டுக்கும் வசதியாக இருந்திருக்கும். வீட்டைப் பார்த்துக் கொண்டாள். அடிக்கடி பணம் கேட்டும் தொந்தரவு செய்வதில்லை. ஆனால், தன் சகோதரி, ஒருவனை காதலிப்பதை அறிந்த பின், அவளுக்கு நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பதே ஓர் அண்ணனின் கடமை.. இதை தங்கையிடம் ஓபட் சொன்னதும், அவள் வெட்கத்துடன் தலைகுனிந்தாள்.

ஓபட் ரமோட்ஸ்வே திருமண ஏற்பாடுகளை தானே முன் நின்று கவனித்தார். வேறு யார் அவளுக்கு உறவு என்று சொல்லிக் கொள்ள இருக்கிறார்கள்?

ரமோட்ஸ்வேக்கு, சிறு வயதிலிருந்தே ஓவியம் வரைவதில் விருப்பம் உண்டு. அதை அவளுடைய

அத்தையும் ஊக்குவித்தாள். அவளது பத்தாவது பிறந்த நாளுக்கு, அவளுக்கு படம் வரைய கலர் பென்சில்களும், நோட்டுப் புத்தகமும் பரிசாகக் கொடுத்தார் ஓபட். சீக்கிரமே அவளுடைய திறமை வெளிப்பட ஆரம்பித்தது.

ஓபட், மகள் வரையும், கிராமத்துக் காட்சிகளைக் கண்டு, பெருமை தாங்காமல் தனக்குத் தெரிந்தவர்களிடம் எல்லாம் ஓவியங்களைக் காட்டி மகிழ்ந்தார். ரமோட்ஸ் வேக்கு இது கூச்சத்தைத் தந்தாலும், அப்பாவின் பெருமை அவளுக்குப் பிடித்திருந்தது.

அவளது பள்ளி ஆசிரியர்களும், அவளது ஓவியத் திறமையை பாராட்டி, 'ரமோட்ஸ்வே, பெரிய ஓவியராக வளர்வாள். அவளது ஓவியங்கள், போட்ஸ்வானா காலண்டரின் முகப்பில் வெளியிடப்படும் காலம் விரைவில் வரும்' என்று கூறினர். இதைக் கேட்டு, ரமோட்ஸ்வே உற்சாகத்தின் உச்சிக்கே போனாள்.

அவளது பள்ளி, குழந்தைகளுக்கான ஓவியப் போட்டி ஒன்றைப் பற்றிக் கேள்விப்பட்டது. காபரோன் மியூசியம், ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் ஓர்

ஓவியம் அனுப்பும் படியும், அப்போட்டியில் தேர்ச்சி பெற்ற இளம் ஓவியருக்குப் பரிசுகள் வழங்கப்படும் என்றும் அறிவித்திருந்தது. படத்தின் தலைப்பு போட்ஸ்வானாவின் இன்றைய வாழ்க்கை நிலை..'

யாருடைய படம் அனுப்பப்படும் என்பதில் சந்தேகமே இல்லை. ரமோட்ஸ்வே வரையும் ஓவியம், காபரோன் மியூசியத்துக்கு அந்தப் பள்ளியின் சார்பில் அனுப்பப்படும் என்று கூறினர்.

ரமோட்ஸ்வே ஒரு சனிக்கிழமை தன்னுடைய ஸ்கெட்ச், நோட்டுடன் சென்று, வெகு நேரம் கழித்து வீடு திரும்பினாள். படத்தின் இறுதிக்கட்ட வேலைகளை வீட்டிலேயே செய்து முடித்தாள்.

இது மிகவும் நன்றாக இருக்கிறது' என அவள் நினைத்தாள். உண்மையிலேயே அந்த ஓவியம், அற்புத மாக இருந்தது. திங்கட்கிழமை அவளது ஆசிரியை, அதைப் பார்த்து விட்டு, தலைகால் புரியாத அளவுக்கு ஆனந்தமடைந்தார்.

இந்த ஓவியம் நிச்சயம் பரிசு பெறும். இந்த ஊரில் உள்ளவர்களுக்கு எல்லாம் பெருமை தேடித் தரும் என்று உறுதியாகக் கூறினார்.

அந்த ஓவியம், இரண்டு அட்டைகளுக்கு நடுவில் பத்திர மாகக் கட்டப்பட்டு, பதிவுத் தபாலில், மியூசியத்துக்கு அனுப்பப்பட்டது. ஐந்து வாரங்களுக்கு பேச்சு மூச்சில்லை. அநேகமாக எல்லோருமே, போட்டியைப் பற்றி மறந்தே போய் விட்டனர். தலைமை ஆசிரியர், தனக்கு வந்த கடிதத்தை, மலர்ச்சியுடன்.. பள்ளி ஆரம்பிக்கும் முன், இறை வணக்கத்துக்குப் பின் படித்தபோதுதான் எல்லோருக்கும் நினைவு வந்தது.

ரமோட்ஸ்வே, உனக்கு முதல் பரிசு கிடைத் திருக்கிறது. c, நான், உன் ஆசிரியை, உன் தந்தை ஆகியோருடன் காபரோன் சென்று, கல்வித் துறை அமைச்சரிடமிருந்து பரிசை வாங்க வேண்டும் - தலைமையாசிரியர் கூற, ரமோட்ஸ்வே உணர்ச்சி மிகுதியில் அழுதே விட்டாள்.

ரமோட்ஸ்வேயின் ஓவியம் ஒரு தனியான, பிரத்யேகமான இடத்தில் மாட்டப்பட்டிருந்தது. அதனுடன் ஒரு சிறிய அட்டையும் இணைக்கப் பட்டிருந்தது. ரமோட்ஸ்வே, ஆசிரியையுடன் சென்று அருகில் பார்த்தாள். அவளுடைய பெயர் அழகாக அச்சிடப்பட்டிருந்தது. மதிப்பு வாய்ந்த 'எம்மா ரமோட்ஸ்வே - மொச்சுடி அரசாங்க நடுநிலைப் பள்ளி' என்று அதன் அடியில் குறிக்கப்பட்டு அணைக்கட்டு அருகில் மந்தை' - இப்படி, கண்காட்சி அமைப்பாளர்களாலேயே தலைப்பும் கொடுக்கப்பட்டிருந்தது.

ரமோட்ஸ்வேயின் உற்சாகமெல்லாம் அப்படியே வடிந்து விட்டது. ஆடாமல், அசையாமல் சிலை போல நின்று விட்டாள். ஆடுகளின் படத்தை அவர்கள் மந்தை என நினைத்து விட்டார்கள். பொய்யான ஒரு எண்ணத்துக்கு அவள் பரிசு வாங்கப் போகிறாள். இந்த நினைவே, அவளை குப்புறத் தள்ளியது போல உணர்ந்தாள்.

ஒரு மந்தையின் படம் என்று அந்தப் பரிசைப் பெற அவள் விரும்பவில்லை. அமைச்சர், அவள் அருகே வந்து நின்றார். பேச ஆரம்பிக்கும் முன், அவளைப் பார்த்துப் புன்னகைத்தார்.

'நீ மிகச் சிறப்பான ஓவியர். உன்னால், உங்கள் ஊர் மிகவும் பெருமை யடையும்.

அவள் தலைகுனிந்து நின்றாள். இவரிடம் சொல்லியே ஆக வேண்டும் என்று எண்ணினாள்.

அந்தப் படம் மந்தையின் படம் இல்லை. ஆடுகளின் படம். ஒரு தவறுக்கு நான், பரிசு வாங்க முடியாது.

அமைச்சர், முகத்தைச் சுளுக்கியவாறு அட்டையைப் படித்தார்.

அதை எழுதியவர்கள் தான் தவறு செய்திருக் கிறார்கள். எனக்கும் அவை, ஆடுகள் மாதிரிதான் தெரிகிறது. அது மந்தை அல்ல.

அவர் பேச ஆரம்பித்தார். மியூசியத்தின் தலைவர் அவையினரை அமைதி காக்கும்படி வேண்டினார்.

ஆடுகளின் மிகச் சிறந்த இந்த ஓவியம், நம்முடைய இளைஞர்கள் எவ்வளவு திறமை உள்ளவர்கள் என்பதை நிரூபிக்கிறது. இந்தச் சிறுமி மிகச் சிறந்த குடிமகளாகவும், சிறந்த கலைஞராகவும் ஆவாள் என்பதில் சந்தேகமில்லை. இந்தப் பரிசுக்கு இவள் மிகவும் தகுதியுடையவள். ஆகவே நான், இவளுக்கு இப்பரிசை தருகிறேன்.

அவள், அழகாகக் கட்டப்பட்டிருந்த அந்தப் பரிசுப் பெட்டியை வாங்கிக் கொண்டாள். அமைச்சர், அவளது தோளில் தன் கரத்தை வைத்து, யாருக்கும் கேட்காத அடிக்குரலில் கூறினார்.. நான் பார்த்ததிலேயே மிகவும் நேர்மையான குழந்தை நீதான். மிக நல்லது.

விழா முடிந்ததும், எல்லோரும் தலைமை ஆசிரியரின் தடபுடா வண்டியில் மொச்சுடிக்குத் திரும்பினர்.

ஆம்.. நம் கதாநாயகி தனது ஓவியத்துக் காக மட்டுமின்றி, நாணயத்துக்காகவும் பரிசை வாங்கிக் கொண்டு திரும்பினாள். எம்மா ரமோட்ஸ்வே, தனது பதினாறு வயதில் படிப்பை முடித்தாள். இந்தப்

பள்ளியின் மிகச் சிறந்த மாணவி, போட்ஸ்வானாவிலேயே சிறந்த பெண் இப்படி ரமோட்ஸ்வேயின் தலைமை ஆசிரியர், அவளைப் புகழ்ந்தார். அவள் தந்தை ஓபட்டுக்கு, மகள் மேலும் படிக்க வேண்டும். அதுவும் கேம்பிரிட்ஜ் பள்ளியில் படித்து, அதற்கு மேலும் படிக்க வேண்டும் என்று ஆசை.. ஆனால், ரமோட்ஸ்வேக்கு மொச்சுடியில் இருப்பது மிகவும் சலிப்பாக இருந்தது. அவளுக்கு ஒவ்வொரு சனிக்கிழமையும் மளிகைக் கடையில் வேலை பார்ப்பதும், கணக்கு வழக்குகளைச் சரி பார்ப்பதும் மிகவும் அலுப்பாக இருந்தது. எங்கே யாவது சென்று, புதிதாக வாழ்க்கையைத் தொடங்க வேண்டும் என்று ஆசைப் பட்டாள்.

நீ வேண்டுமானால் உன் அத்தை வீட்டுக்குச் சென்று வா. அங்கே, எல்லாமே மாறுதலாக இருக்கும். வீட்டிலும் விருந்துகள், கேளிக்கைகள் இப்படி ஏதாவது இருந்து கொண்டே இருக்கும். இதைச் சொல்லும்போது, ஓபட்டுக்கு மனசு வலிக்கத் தான் செய்தது. மகள் தன்னுடனேயே இருந்து, தன்னை கவனித்துக் கொண்டாலே போதும் என்றுதான் அவர் நினைத்தார். ஆனால், அவளை அப்படி தன்னுடன் இருக்கச் சொல்லி வற்புறுத்துவது சுயநலம் என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தது. ஆனால், ரமோட்ஸ்வேக்கு சுதந்திரம் தேவைப்பட்டது. வாழ்க்கையில் உருப்படியாக எதையாவது செய்ய வேண்டும் என்கிற எண்ணம் அவளுக்கு இருந்தது. மகளுக்குத் திருமணம் செய்து பார்க்க வேண்டும் என்கிற எண்ணமும், சீக்கிரமே அவளைப் பெண் கேட்டு ஆண்கள் வருவார்கள் என்கிற விஷயமும் ஓபட்டுக்கு தோன்றியது.

அதை நிச்சயம் அவர் தடுக்க மாட்டார். ஆனால், அவளை மணப்பவன் குடிகாரனாகவோ, கொடுமைப் படுத்துபவனாகவோ, பெண் பித்தனாகவோ இருந்து விட்டால்.. என்ன செய்வது?

இதெல்லாம் நடக்கக் கூடியதுதானே.. எத்தனை ஆண்பிள்ளைகள், அழகான பெண்களைக் கட்டிக் கொண்டு, அவர்கள் வாழ்க்கையை உருக்குலைக்கிறார்கள். அவர்கள், அட்டைப்பூச்சி போன்று பெண்களின் நல்ல குணங்களை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சி, அவர்களை நடமாடும் ஜடமாகச் செய்து, நாசமாக்கி விடுகிறார்கள். இதற்கு கால அவகாசம் நிறைய ஆகும். ஏனெனில், பெண்களிடம் நிறைய நற்குணங்களும் பண்புகளும் படிந்திருக்கின்றன.

சரி, அப்படியே யாராவது ரமோட்ஸ்வேயைத் திருமணம் செய்ய விரும்பி வந்தால், என்ன செய்ய வேண்டும்?

ரமோட்ஸ்வேயை எச்சரிக்கை செய்யலாம்..

ஆனால், காதலில் விழுந்தவர்கள் யாராவது, பெற்றவர் களின் எச்சரிக்கையை இதுவரையில் லட்சியம் செய்திருக் கிறார்களா..

காதல் என்பது ஒரு வகை குருட்டுத் தன்மையானது தான். வெளிப்படையாகத் தெரியும் குறைகளைக் கூட பார்வையிலிருந்து மறைத்து விடும். ஒரு கொலை காரனையே காதலித்தாலும், தன் காதலன் ஒரு சிறு எறும்பைக் கூட நசுக்க மாட்டான் என்றுதான் காதலிப்பவள் சொல்லுவாள். யார் சொல்வதையும் நம்ப மாட்டாள். காதலிக்க ஆரம்பித்து விட்டால், அவர்களை யாராலும் தடுத்த நிறுத்த முடியாது.

ஓபட்டுக்கு, தன் சகோதரியின் வீடு ரமோட்ஸ்வேயை ஆண்களிடமிருந்து காப்பாற்றா விட்டாலும், ஓரளவுக்கு பத்திரமாகப் பாதுகாக்கும் என்கிற நம்பிக்கை இருந்தது. தன் தங்கை, இவள் மீது ஒரு கண் வைத்துக் கொள்வாள். தகுதியில்லாத ஆண்கள் வந்தால், தங்கையின் கணவன் அருகில் நெருங்க விட மாட்டார். அடித்துத் துரத்தி விடுவார். இப்பொழுது அவரிடம் ஐந்து பஸ்கள் இருந்ததால், பணக்காரர்களுக்கே உரிய ஆள், படை, அதிகாரமும் நிறையவே இருந்தது. சில இளைஞர்களை யாவது அவரால் திரும்பிப் போகச் செய்ய முடியும்.

ரமோட்ஸ்வேயின் அத்தைக்கு, அவள் வருவது அறிந்து மகிழ்ச்சி தாங்கவில்லை. அவளுக்காக ஒரு அறையைச் சுத்தம் செய்து, பெரிய கடையில் வாங்கிய தடிமனான மஞ்சள் திரைச் சீலைகளைக் கொண்டு அலங்கரித்திருந்தாள். இதற்காக அவள், ஜோஹனஸ்பர்க் போய் துணி வாங்கி வந்தாள்.

மேஜையின் இழுப்பறைகளில் அவளுக்குத் தேவை யான துணிமணிகளை நிரப்பி, அதன் மீது போப் ஆண்டவரின் படம் ஒன்றை வைத்தாள். தரை மீது எளிமையான பாய் விரிக்கப்பட்டது. அந்த அறையே வசதியாக, வெளிச்சமாக, பளிச்சென இருந்தது.

ரமோட்ஸ்வே வெகு சீக்கிரத்தில் புதிய வாழ்க்கைக்குப் பழகி விட்டாள். அத்தை கணவரின் பஸ் கம்பெனியி லேயே விலைப் பட்டியலைக் கூட்டுவது, ஓட்டுநர்களின் குறிப்புகளைப் பார்வையிடுவது போன்ற வேலைகள், அவளுக்குத் தரப்பட்டன. அத்தையின் கணவர், இரண்டு குமாஸ்தாக்கள் செய்யும் வேலையை இவள் ஒருத்தியே திறம்படச் செய்வதைக் கவனித்தார். அந்த குமாஸ்தாக்கள் நாள் முழுக்க வம்பு பேசிக் கொண்டிருப்பதும், எப்பொழு தாவது

விலைப்பட்டியலைப் பார்ப்பதும், எப்பொழு தாவது தேநீருக்கு ஏற்பாடு செய்வதுமாகப் பொழுதைக் கழித்தனர்.

ரமோட்ஸ்வேக்கு, அவளுடைய ஞாபக சக்தியினாலும், புத்திசாலித்தனத்தினாலும், புதிய உத்திகளைக் கையாண்டு வேலைகளைச் செய்வது என்பது சுலபமான விளையாட் டாக இருந்தது. அதனால் தானே மனமுவந்து பல யோசனைகளைக் கூறினாள்.

நீங்கள் அதிகம் வேலை செய்கிறீர்கள். எங்களுடைய வேலைகளையும் எடுத்துக் கொள்ளப் பார்க்கிறீர்கள்.. - இப்படி அந்த குமாஸ்தாக்கள் குறை கூறினர்.

பஸ் ஆபீசில் சுமார் நான்கு ஆண்டுகள் வேலை செய்தாள் ரமோட்ஸ்வே. அத்தையும், அவள் கணவரும் ரமோட்ஸ்வேயை தங்கள் மகள் என்றே சொல்லிக் கொண்டனர். அதை ரமோட்ஸ்வேயும் மறுக்கவில்லை. அவர்கள், அவளுடைய மனிதர்கள். அவளை மிகவும் நேசிக்கிற, பாசம் மிகுந்த மனிதர்கள். அத்தை, அவளை வெளிமனிதர்கள் முன்பு உரிமையுடன் கோபித்துக் கொண்டாலும், அவள் தன் குழந்தையாக ரமோட்ஸ் வேயை எண்ணியதால், ரமோட்ஸ்வேக்கும் அவளிடம் கொள்ளை பிரியம். அவள் தன் அத்தை கணவரின் சிரிப் பில்லாத முகத்தையும், காயம் பட்ட தழும்புகளையும், உழைக்கும் கரங்களையும் கூட நேசித்தாள். மஞ்சள் திரைச்சீலையுடன் விளங்கும் அவளது அறையையும் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அது அவளே அமைத்துக் கொண்ட நல்ல வாழ்க்கையாக இருந்தது.

ஒவ்வொரு வாரக் கடைசியிலும் அவள், அத்தை கணவரின் பஸ்ஸில் மொச்சுடி போய், தந்தையைப் பார்த்து வந்தாள். வீட்டுக்கு வெளியே சிறிய நாற்காலியில் உட்கார்ந்திருப்பார் ஒபட். அவள், வழக்கப்படி வணங்கி, கையைத் தட்டுவாள். (பெரியவர்களைக் கண்டால் இப்படி வணங்கி, கைதட்டுவது அவர்களது சம்பிரதாயம்).

பிறகு இருவரும் வீட்டின் ஒரு பக்கத்தில் எழுப்பி யிருந்த வெராந்தாவில் உட்கார்ந்தபடி உணவருந்துவார்கள். அந்த வாரத்தில், ஆபீசில் நடந்த சம்பவங்களை அவள் கூறுவாள். அவர், அதை உன்னிப்பாகக் கேட்பார். ஒவ்வொருவர் பெயரையும் கேட்டு, அவர்களது சுற்றி வளைத்த சொந்தங்களைப் பற்றிக் கூறுவார். அங்கு எல்லோருமே ஒருவருக்கொருவர் ஏதோ ஒரு வழியில் உறவினராகத்தான் இருக்க முடியும்.

ஆடு மாடுகளும் அப்படித்தான். அவற்றுக்கும் குடும்பம் உண்டு. இவள் பேசி முடித்ததும், அவர் ஆடு மாடுகளைப் பற்றிய சமாசாரங்களைச் சொல்லுவார். அவர், எப்பொழுதாவதுதான் அவைகளைப் பார்க்கப் போவார். இருந்தாலும், அதை மேய்க்கும் பையன்கள் மூலம் வாரா வாரம் தகவல்களை அறிந்து கொள்வார். ஓபட் மிருகங்கள் பற்றி மிக நன்றாகத் தெரிந்து வைத்திருந்தார். கன்றுகள் பெரிதானவுடன் எவ்வகையாக இருக்கும் என்று அவருக்குத் துல்லியமாகத் தெரியும். மிகவும் ஒல்லியாக, சோனியாக உள்ள கன்றை வாங்கி, நன்றாக வளர்க்க முடியுமா என்பதைப் பார்த்தவுடன் சொல்லி விடுவார். சோனிக் கன்றுகள் விலை குறைவாக இருக்கும். அப்படிப்பட்ட கன்றுகளை வாங்கி, நன்றாகத் தீனி போட்டுக் கொழுக்க வைப்பார்.

மனிதர்களும் ஆடு மாடுகளை போலத்தான் என்பார் ஓபட். அங்குமிங்கும் இலக்கில்லாமல் திரியும் ஆடுகளின் உரிமையாளர்களும், அதே மாதிரி வாழ்வில் குறிக்கோள் இல்லாமல் இருப்பார்கள். நேர்மையில்லாதவர்களின் மந்தைகளில் உள்ள ஆடு மாடுகளும் பிற ஆடு மாடு களின் உணவைத் திருடும். வேறு மந்தையுடன் சேர்ந்து கொள்ளும்.

ஓபட், மனிதர்கள், ஆடு மாடுகளைப் பற்றி ஒப்பிட்டுக் கூறும்போதெல்லாம் ரமோட்ஸ்வேயின் மனதுக்குள் ஒரு கேள்வி குதித்தெழும்.

அது சரி. அப்பா இவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறாரே! நோட் மொகோட்டி'யைப் பார்த்தால் இவர் என்ன சொல்லுவார்?

சமீபத்தில்தான் ரமோட்ஸ்வே, மொச்சுடியிலிருந்து திரும்பி வரும் பஸ்ஸில் மொகோட்டியைச் சந்தித்தாள். அவன் ஃபிரான்ஸிஸ் டவுனிலிருந்து வந்து கொண்டிருந் தான். அவன் தன் பக்கத்து இருக்கையில் ஒரு ட்ரம் பெட்டை உறை போட்டு வைத்திருந்தான். அவன் அணிந் திருந்த சிவப்புச் சட்டையும், பான்ட்டும், சற்றே உயர்ந்திருந்த தாடையும், வளைந்த புருவமும், பார்க்கத் தூண்டுவதாக..

மற்றவர்கள் தன்னைப் பார்த்து ரசிக்கிறார்கள் என்பது தெரிந்திருந்ததால், கர்வம் நிறைந்த முகம். ரமோட்ஸ் வேயின் கண்கள் ஒரு கணம் அவனிடம் நிலைத்து, பின் தாழ்ந்தன. தன் இருக்கையிலிருந்து அவனை தான் பார்ப்பது, அவனுக்குத் தெரிந்து விடக் கூடாது என்று அவள் நினைத்தாள்.

இவன் யார்?

யாரோ பாடகன் மாதிரி இருக்கிறான். ஏதோ பல்கலைக் கழக புத்திசாலி மாணவன் போலவும் இருக்கிறான்.

பஸ் காபரோன் நிறுத்தத்தில் நின்றது. தன் இருக்கையில் இருந்தபடியே, அவன் எழுந்து நிற்பதைப் பார்த்தாள் ரமோட்ஸ்வே. அவன் தன் உடையைச் சரி செய்து கொண்டே, பஸ்ஸினுள் பார்வையைத் திருப்பினான். என்ன காரணத் தினாலோ, அவளது இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. தன்னைத்தான் பார்த்தானோ! என்கிற சந்தேகம்..

இல்லையில்லை.. அவன், ஜன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருக்கிறான். அவள், உடனே சிறிதும் யோசிக்காமல், தலைக்கு மேலிருந்த தன் பையை எட்டி எடுத்தாள். அங்கு இறங்கி, அவன் என்ன செய்கிறான், எங்கு போகிறான் என்று அறியும் ஆவல் பிடரியைப் பிடித்து உந்தியது.

அவனும் பஸ்ஸிலிருந்து இறங்கி விட்டான். அத்தையின் கணவரிடம் வேலை செய்யும் டிரைவரிடம் ரமோட்ஸ்வே அவசர மாக சொல்லிக் கொண்டு, அந்த இளைஞனை வேகமாகப் பின்தொடர்ந்தாள்.

பகல் நேர வெயில் வெளிச்சத்தில், புழுதியும், வெப்பமான பயணிகளும் நிறைந்த கூட்டத்தின் நடுவே அவனை கண்டுபிடிப்பது ஒன்றும் சிரமமாக இல்லை. அவனும் வெகுதூரத்தில் இல்லை. நடைபாதைக் கடையிலிருந்து ஒரு சோளத்தை வாங்கித் தின்று கொண்டிருந்தான். அவள் சொல்லத் தெரியாத உணர்வுகளில் மூச்சு முட்ட நின்றாள். வழி தெரியாத பெண் போல திகைத்து நின்று விட்டாள்.

அவன், அவளைப் பார்த்து விட்டான். அவளது மனதுக் குள் நூற்றுக்கணக்கான பட்டாம்பூச்சிகள் பறப்பது போலிருந்தது. ஒருவேளை, நான் இவனையே பார்த்துக் கொண்டிருப்பது இவனுக்குத் தெரிந்து விட்டதோ!

சின்னதாக ஒரு தவிப்பு. மறுபடியும் அவனைப் பார்த்தாள். இப்பொழுது அவன், புருவத்தை உயர்த்தியவாறு அவளை நோக்கிச் சிரித்தான். கையிலிருந்த சோளத்தை வீசி எறிந்து விட்டு, பையைத் தூக்கிக் கொண்டு, அவளை நோக்கி நடந்து வந்தான். பாம்பின் முன்னால் மயங்கி நிற்கும் இரையைப் போல நின்றாள் அவள்.

நான் உன்னை அந்த பஸ்ஸில் பார்த்தேன். ஒருவேளை, இதற்கு முன், உன்னை எங்கேயாவது சந்தித்திருக்கிறேனோ என்று நினைத்தேன். ஆனால், சந்தித்ததில்லை.

ரமோட்ஸ்வே தரையை நோக்கினாள்.

நான், உன்னை இங்கு பார்த்ததேயில்லை." அவளது குரல், அவள் காதுக்கே கேட்கவில்லை. அவன் புன்னகைத் தான். இப்போது, அவளுக்கு பயமும் தயக்கமும் தோன்ற வில்லை.

இங்குள்ள எல்லோரையும் ஒருமுறையாவது பார்த்திருப்போம். ஆதலால் புதியவர்கள் என்று யாரையும் கூற முடியாது.

அதுவும் சரிதான்.. அவன் சொன்னதை, ரமோட்ஸ் வேயும் ஆமோதித்தாள்.

சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு, அவன் தன் காலடியில் உள்ள ட்ரம்பெட்'டைச் சுட்டிக் காட்டி, 'நான் ஓர் இசைக் கலைஞன்" என்றான்.

'இதுதான் நான் வாசிக்கும் கருவி..

அந்தப் பெட்டியின் மீது, கிடார் வாசிக்கும் இளைஞன் படம் ஒட்டப்பட்டிருந்தது.

உனக்கு இசை பிடிக்குமா.. ஜாஸ்.. பாப்..?

அவள் நிமிர்ந்து பார்த்தபோது, அவன் சிரித்தபடியே நின்றிருந்தான்.

எனக்கு இசை பிடிக்கும்..

பிரசிடென்ட் ஹோட்டலில் வாசிக்கும் இசைக் குழுவில் நான் வாசிக்கிறேன்.. நீ வந்து கேட்கலாம். நான் இப்போது அங்குதான் போய்க் கொண்டிருக் கிறேன்..

பஸ் நிறுத்தத்திலிருந்து, பத்து நிமிட நடை தூரத்தில் தான் அந்த ஹோட்டல் இருந்தது. அவன், அவளுக்கு ஒரு மதுபானம் வாங்கிக் கொடுத்து, பின் வரிசையில் காலியாக இருந்த ஒரேயரு இருக்கையில் அவளை அமர்த்தினான்.

அவன் வாசிக்க ஆரம்பித்தான். பட்டுத் துணி போல, வழுவழுப்பாக நழுவிச் செல்லும் அந்த இசையில் ரமோட்ஸ்வே மனதைப் பறிகொடுத்தாள். தான், அவனுடைய விருந்தாளி என்கிற நினைப்பே பெருமையாக இருந்தது.

அந்த பானம், புது விதமாகவும் கசப்பாகவும் இருந்தது. அவளுக்கு மது அருந்தவே பிடிக்காது. ஆனால், பார் களில் எல்லோரும் அருந்தினார்கள். இவள் இதை அருந்தவில்லை என்றால், அந்த இடத்துக்கு முற்றிலும் பொருத்தமில்லாதவளாக நினைப்பார்கள் என்கிற தயக்கத்தினால் அருந்தினாள். இசைக்குழுவின் இடை வேளையின்போது, அவள் அவனிடம் வந்தாள். நெற்றியில் வியர்வைத் துளிகள் பளபளத்தன.

நான் இன்றைக்குச் சரியாக வாசிக்கவில்லை. சில நாட் களுக்கு நன்றாக வரும். சில நாட்களுக்கு வராது - அவன் சொல்ல ரமோட்ஸ்வே புன்னகைத்தாள்.

எனக்கென்னவோ, நீ நன்றாக வாசிப்பது போலத்தான் தோன்றியது.

நான் அப்படி நினைக்கவில்லை. இதை விடவும் என்னால் நன்றாக வாசிக்க முடியும். சில நாள்,

என் வாத்தியம் என்னுடன் பேசுவது போலத் தோன்றும். அப்பொழுது, நான் ஒன்றுமே செய்ய வேண்டாம்..

பலர், அவர்களை திரும்பிப் பார்ப்பது போலத் தோன்றியது ரமோட்ஸ்வேக்கு.. முக்கியமாக இரு பெண்கள் அவளை கூர்ந்து கவனித்த மாதிரி இருந்தது.. அவள் இருக்குமிடத்தில், அவர்கள் இருக்க விரும்பியது, அவர்களின் பார்வையிலேயே தெரிந்தது.

அவனுடன் இருக்க இப்பெண்கள் ஆசைப் படுகிறார்கள்..

ரமோட்ஸ்வேயை அவன் கடைசி பஸ்ஸில் ஏற்றிவிட்டு, பஸ் நகரும் வரையில் கையசைத்தான். அவளும் கைசையத்து, கண்களை மூடிக் கொண்டாள்.

அவளுக்கும் இப்போது ஓர் ஆண் நண்பன் இருக்கிறான். இசைக்கலைஞன்.. அடுத்த வெள்ளியன்று காபரோன் கிளப்பில் அவர்கள் சந்திப்பதாக இருந்தது.

அந்த நாளுக்காக இப்போதிருந்தே காத்திருக்கத் தொடங்கினாள் ரமோட்ஸ்வே..



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 4

-----------------------------------------------------------------

அடுத்த வெள்ளி இரவுக்காக ரமோட்ஸ்வே காத்திருந்தாள். ஏற்கெனவே நோட் மொகோட்டி சொன்னது திரும்பத் திரும்ப அவளுள் அலைகளை எழுப்பியது.

காபரோன் கிளப்புக்கு வருகிற உறுப்பினர்கள் எப் போதும் தங்கள் பெண் நண்பர்களுடன்தான்

வருவார்கள். அதுமட்டுமில்லை.. அதில் சில சுவாரஸ்யஸ்மான மனிதர்களையும் நல்லவர்களையும் சந்திக்கலாம்.

அன்றுதான் மொகோட்டி, ரமோட்ஸ்வேயிடம் தன்னைத் திருமணம் செய்துகொள்ளும்படி கேட்டான். ரமோட்ஸ்வேயினால் தன் ஆவலைக் கட்டுப்படுத்த முடியாதபோதும், எதுவும் பேசாமல் இருந்தாள். இசை நிகழ்ச்சி முடிந்தும் அவர்கள், இருட்டிலேயே தனியாக இருந்தனர்.

நான் உன்னை சீக்கிரம் மணம் முடிக்கத் துடிக்கிறேன். நீ மிகவும் நல்ல பெண். நல்ல மனைவியாகவும் இருப்பாய் என்றே நம்புகிறேன்.

அவன் சொல்ல, ரமோட்ஸ்வே பதில் பேசவேயில்லை. அவளால் அவனைப்போலத் துரிதமாக எதையும் தீர்மானிக்க முடியவில்லை. அவளது மௌனத்தையே அவன் சம்மதமாக எடுத்துக் கொண்டான்.

ரமோட்ஸ்வே.. நான் உன் அப்பாவிடம் பேசுகிறேன். உனக்கு ஏராளமான ஆடு, மாடுகளைச் சீதனமாகக் கேட்கும் பத்தாம்பசலியாக, உன் அப்பா இருக்க மாட்டார் என்றே நினைக்கிறேன்.

'ஆமாம்..' இதையும் ரமோட்ஸ்வே நினைத்தாளே தவிர, வாய் திறந்து பேசவில்லை.

அவள் இன்னும் தீர்மானமாகத் தன் சம்மதத்தைத் தெரிவிக்கவில்லை. ஒருவேளை, காலம் கடந்து விட்டதோ என்றுகூடத் தோன்றியது.

அப்போது அவன் திடீரென்று கூறினான்.. நீ என் மனைவியாகப் போகிறாய். எனவே, நல்ல மனைவியாவது எப்படி என்று நான் உனக்கு சொல்லித் தரப் போகிறேன்..

இதற்கும் அவள் மௌனம் சாதித்தாள். ஆண்கள் இப்படித்தான், தங்களுக்குச் சாதகமாக எதையும் செய்வார்கள் என்று பள்ளிக்கூடத்தில் சிநேகிதிகள் பேசியது எல்லாம் ஏனோ ஞாபகத்துக்கு வந்தது. பக்கத்தில் யாருமே இல்லை. தொலைவில் மதுக் கடைகளிலிருந்து

சிரிப்பும் பேச்சும் காற்றிலே மிதந்து வந்தது.

மொகோட்டி அவளது கரத்தை எடுத்து தன் கன்னத்தின் மீது வைத்துக் கொண்டான். அவளோ, அவன் மீதிருந்த கையை மேற்கொண்டு எந்தப் பக்கமும் நகர்த்தத் தெரியாமல் உட்கார்ந்திருந்தாள். அவன், அவள் எதிர்பாராத விதமாக அவளது கழுத்து, முகவாய், உதடு.. இப்படி சரமாரியாக முத்தங்களைப் பொழிந்தான். அவனது இதயத் துடிப்பும் வேகமான மூச்சும் ரமோட்ஸ்வேக்குத் தெளிவாகக் கேட்டது.

பெண்கள் இது பற்றி எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். உனக்கு யாராவது இது பற்றிச் சொல்லித் தந்திருக்கிறார்களா?

அவள், 'இல்லை' எனத் தலையசைத்தாள். அவளுக்கு இப்போது நடப்பது ஒன்றுமே புரியவில்லை. புரிந்திருந் தால், இப்படியரு சந்தர்ப்பத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்கிற முன்ஜாக்கிரதையோடு இருந்திருப்பாள்.

நீ, ஆண்களின் கைப்படாத கன்னிப் பெண் என்பதில் ரொம்பவும் சந்தோஷம் தெரியுமா! அதுதான் ஒரு ஆணுக்கு மிகவும் பிடித்த விஷயம். ஆனால், அதெல்லாம் இனி மாறப் போகிறது. இதோ இப்போதே.. இந்த இரவு முடிவதற்குள்ளேயே..

அவன் அவளை மூர்க்கமாகக் கையாண்டான். ரமோட்ஸ்வே மிகவும் துடித்தாள். அவனை நிறுத்தச் சொன்னாள். ஆனால் அவனோ, அவள் தலையை அப்படியே பின்னால் மோதி, கன்னத்தில் பளார்' என்று அறைந்தான். உடனேயே, அடித்த இடத்தில் முத்தமிட்டு மன்னிப்பும் கேட்டான். அவள் சமாளித்து எழுந்திருப்பதற்குள் அவளை மறுபடி கீழே தள்ளினான். முதுகில் நகத்தினால் பிறாண்டினான். தன் இடுப்பிலிருந்த பெல்ட்டைக் கழற்றி அவளை அடித்தான்.

மறுபடியும் அவளுடன்..

இப்படித்தான் அவளை அவன், முழுமையாக அடைந்தான்.

அவன் மெதுவாக எழுந்து, கசங்கிய தன் உடைகளைச் சரிசெய்து கொண்டான். யாராவது பார்த்து விடுவார்களோ என்கிற கவலை அவனுக்குக் கொஞ்சமும் இல்லை.

ஆனால், ரமோட்ஸ்வே பயந்து போனாள். தன் உடைகளை ஒவ்வொன்றாக அணிந்து கொள்ளும்போது தந்தையை நினைத்தாள்.. இங்கே நடந்தது எதுவும் தெரியாதவராக, ஆடு, மாடுகளைப் பற்றியும், அவற்றின் இயல்புகளைப் பற்றியும் அப்பாவித்தனமாகப் பேசிக் கொண்டிருப்பார்.. என நினைக்கும்போதே கண்ணீர் பெருகியது. சத்தமில்லாமல் அழுதாள்.

மூன்று வாரங்களுக்குப் பிறகு, மொகோட்டி, ரமோட்ஸ்வேயின் தந்தை ஓபட்டைச் சென்று பார்த்தான். தான், ரமோட்ஸ்வேயை மணந்து கொள்ள விரும்புவதாகக் கூறினான். அவர், தன் மகள் அடுத்த முறை தன்னைப் பார்க்க வரும்போது அவள் சம்மதத்தைக் கேட்டுச் சொல்வதாகக் கூறினார்.

அதுபோல, ரமோட்ஸ்வேயிடமும் கேட்டார்.

இதோ பார்.. நீ விருப்பமில்லாமல் எவனையும் மணக்க வேண்டியதில்லை. உன் விருப்பம்தான் என் விருப்பமும். ஒரு பெண் திருமணம் செய்து கொண்டுதான் வாழ வேண்டும் என்கிற அவசியமெல்லாம் கிடையாது. அந்தக் காலங்கள் எல்லாம் போய்விட்டது. பெண்கள் நினைத்தால், தனியாகவே வாழ்ந்துகாட்ட முடியும்..

தன் அப்பா சொன்னபோதுகூட, அவள் தனக்குத் திருமணம் வேண்டாம் என்று சொல்லியிருக்கலாம். அவள் தந்தையும் அதைத்தான் விரும்பியிருப் பாராயிருக்கும். ஆனால், அவளால் அப்படிக் கூற முடியவில்லை. மொகோட்டியை மீண்டும் மீண்டும் பார்ப்பதற்கே அவள் வாழ்ந்து வந்தாள். அப்படித்தான் கூற வேண்டும். அவனைத் திருமணம் செய்துகொள்ள அவள் விரும்பினாள். அவன் நல்லவன் இல்லை என்பதை அவள், நன்கு உணர்ந்திருந்த போதிலும், திருமணத்துக்குப் பின், அவனை எப்படியாவது திருத்திவிட முடியும் என்று அவள் நம்பினாள். அவனுடன் ஏற்பட்ட அந்தத் தொடர்பு, கசப்பான, குமட்டலான மதுபானம்போலத் திரும்பத் திரும்ப அவளை இழுத்தது.

அவள், தான் கருவுற்றிருப்பதை உணர்ந்தாள். அவளது குழந்தை, சின்னப் பறவை போல அவளுள் சிறகடித்தது.

ஒரு சனிக்கிழமை மதியம் சுமார் மூன்று மணிக்கு மொச்சுடி தேவாலயத்தில் அவர்களது திருமணம் நடந்தேறியது. தேவாலயத்துக்கு வெளியே மர நிழலில் ஆட்டு மந்தைகள் அக்டோபர் மாத வெயிலின் தகிப்பைத் தாங்கமாட்டாமல் தவித்தபடி நின்றிருந்தன. சரியான மழை இல்லாததால் அந்தக் கிராமமே வறண்டு கிடந்தது. புல், பூண்டுகள் எதுமின்றி ஆடு, மாடுகள் இளைத்து, எலும்பு தெரிய வத்தலும் தொத்தலுமாக அலைந்து கொண்டிருந்தன.

அது ஒரு மோசமான கோடைக்காலம்.பாதிரியார், தனது அங்கியும், வெயிலின் புழுக்கமும் தாளாமல் பெருகிய வியர்வையை, தனது சிவப்புக் கைக்குட்டையால் துடைத்தபடி, 'புஸ்..புஸ்..' எனப் பெருமூச்சு விட்டவண்ணம் இருந்தார்.

நீங்கள் இருவரும் கடவுளின் கண்காணிப்பில் மணந்து கொள்கிறீர்கள். கடவுள், துன்பம் நிறைந்த உலகில், நம்மைக் காப்பாற்றி வருகிறார். இறைவன் தனது எல்லாக் குழந்தைகளையும் நேசிக்கிறார். நாமும் இறைவனின் கட்டளைப்படி நம் கடமையைச் செய்ய வேண்டும். உங்களுக்கு நான் சொல்வது புரிகிறதா?

'புரிகிறது.. என புன்னகைத்தான் மொகோட்டி.

உனக்கு? பாதிரியார், ரமோட்ஸ்வேயைக் கேட்டார்.

அவள், அவரை நிமிர்ந்து பார்த்தாள். அவள் தந்தை, தன் சிநேகிதரான இந்தப் பாதிரியாரிடம் இக்கல்யாணத்தில் தனக்குள்ள மன வருத்தத்தைச் சொல்லியிருக்கிறார் என்பது அவளுக்குத் தெரியும். ஆனால், இது விஷயத்தில் தான் தலையிட முடியாது என்று பாதிரியார் கூறியதும் தெரியும்.

இப்பொழுது அவரது குரல் மிகவும் பரிவுடன் ஒலித்தது. அவர், அன்புடன் ரமோட்ஸ்வேயின் கரத்தை அமுக்கினார். அவளது கையைப் பிடித்து நோட் மொகோட்டியின் கைகளில் ஒப்படைத்தார். அவர், அப்படிச் செய்தபோது, ரமோட்ஸ்வேயின் கர்ப்பத்தில் இருந்த குழந்தை திடீரெனப் பலமாக அசைந்தது.

இரண்டு நாட்கள், மொச்சுடியில் உள்ள மொகோட்டி யின் உறவினர் வீட்டில் தங்கி விட்டு, தங்கள் பொருட் களை ஒரு லாரியில் ஏற்றிக்கொண்டு தம்பதியர் இருவரும் கோபோரோன்னுக்குச் சென்றார்கள். இரண்டு அறைகளும், ஒரு சமையலறையும் கொண்ட வீட்டை மொகோட்டி ஏற்பாடு செய்திருந்தான்.

இரண்டு அறைகள் என்பது அவர்களைப் பொறுத்தவரையில் மிகவும் அதிகம்தான். ஒன்று, அவர்களுடைய படுக்கையறை. இரட்டைக் கட்டிலும் ஒரு பழைய மர அலமாரியும் அந்த அறையை அலங்கரித்தன.

இன்னொன்று வரவேற்பறையாகவும், சாப்பிடும் அறையாகவும் உபயோகப்பட்டது. அதில் ஒரு மேஜை, இரண்டு நாற்காலி, தவிர ஒரு பக்கவாட்டு மேஜை இருந்தது. ரமோட்ஸ்வே, தன் அத்தையின் வீட்டிலிருந்து தான் கொண்டு வந்திருந்த மஞ்சள் நிற திரைச்சீலையை வரவேற்பில் மாட்டியவுடன், அந்த வீடே பளிச்சென்று புதுக்களை கட்டியது.

நோட் மொகோட்டி தன்னுடைய ட்ரம்பெட்டையும் இசை நாடாக்களையும் அங்குதான் வைத்திருந்தான். சேர்ந்தாற்போல இருபது நிமிடங்கள் பயிற்சி செய்வான். பிறகு தன் உதடுகளுக்கு ஓய்வு கொடுத்து விட்டு, ஒலிநாடாவைச் சுழல விடுவான். அந்த இசையை மிக உன்னிப்பாகக் கவனித்து, கிடாரில் அதே இசையைக் கொண்டுவருவான். நகரத்தின் எல்லா இசை பற்றிய தகவல்களும் அவனுக்கு அத்துப்படி. எங்கிருந்து வந்த இசை, யார் எப்போது அதைப் பாடினார்கள், யாருடன் பாடினார்கள் என்ற எல்லா விஷயங்களும் அவனுக்குத் தெரிந்திருந்தன. பெரிய கலைஞர்களின் இசையையும் அவன் கேட்டிருக்கிறான். அவர்கள் பதிவு செய்த ஒவ்வொரு பாட்டும் அவனுக்கு மனப்பாடமாகியிருந்தது.

ரமோட்ஸ்வே, அவன் இசைக் கருவியை எடுத்து வாயில் வைத்து மெதுவாக இசைப்பதை சற்றுத் தள்ளி நின்று கேட்பாள். அவன், சிறு குப்பி போன்ற பகுதியை ஊதி, இசையை கொஞ்சம் கொஞ்சமாக சுழன்று வரும் காற்று போலப் பெருகச் செய்வான். அந்தச் சிறிய அறை முழுக்க மெட்டுக்கள் எதிரொலிக்கும்.

அவனுடன் அவள் பல சமயங்களில் பாருக்குச் சென்றிருக்கிறாள். அங்கே, அவன் தன் சகாக்களுடன் அப்படியே ஒன்றிவிடும்போது, இவள் தேவையற்றவளாகி விடுவாள். முடிவின்றி

அவர்கள் இசையைப் பற்றியே பேசினார்கள். பாட்டு, பாட்டு என்று எவ்வளவு நேரம் தான் பேச முடியுமோ? அவள் அங்கு இருப்பதையே அவர்கள் யாரும் மதிக்கவில்லை. அதனால், அவள் கொஞ்சம் கொஞ்சமாக அவனுடன் கிளப்புக்குப் போவதை நிறுத்தினாள்.

அவன் குடித்துவிட்டு, புளித்த வாடையுடன் நேரம் கழித்து வீட்டுக்கு வந்தான். அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவன், அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பினான். அவளை அப்படியே படுக்கையில் தள்ளி, அவளது உடைகளைப் பற்றி இழுத்தான்.

நீ நிறைய குடித்திருக்கிறாய். உனக்கு மட்டும் ரொம்ப வும் மகிழ்ச்சியான மாலை நேரமாக இருந்திருக்கும்.. என்றாள் ரமோட்ஸ்வே.

அவன், அவளை வெறித்துப் பார்த்தான்.

'நான் நினைத்தால் குடிப்பேன். நீ வீட்டில் உட்கார்ந்து எதற்கெடுத்தாலும் குற்றம் சொல்கிறவள்தானே?

இல்லை. மகிழ்ச்சியாக நேரத்தைச் செலவழித் திருக்கிறாய் என்றுதான் சொன்னேன். வேறொன்றும் தப்பாகச் சொல்லவில்லையே.

இருந்தாலும் அவன் கோபம் தணியவில்லை.

உன்னைக் கொடுமைப்படுத்தும்படி நீதான் என்னைத் தூண்டுகிறாய். நான் முரட்டுத்தனம் காட்ட நீதான் காரணம்.. என்றவாறே அவன், தன் பலம் அத்தனையையும் அவள் மீது செலுத்த, அவள் வலி தாங்காமல், கதறிக்கொண்டே திமிறினாள். அவனைப் பிடித்துத் தள்ள, அவள் எடுத்த முயற்சி எல்லாமே வீண். அத்தனை சுலபத்தில் அவனைத் தள்ளிவிட அவளால் முடியவில்லை.

ஐயோ.. வயிற்றில் உன் குழந்தை. அதை ஒன்றும் செய்து விடாதே!

குழந்தையா? எதற்காக அதைப் பற்றிப் பேசுகிறாய்? அது என்னுடையது இல்லை! நான் எந்தக் குழந்தைக்கும் தகப்பன் இல்லை!

ஆணின் கரங்கள்.. ஆனால், இந்த முறை மெல்லிய ரப்பர் கையுறை அணிந்து! ஒரு வெள்ளைக்காரரின் கை போல..

இங்கே வலிக்கிறதா? இல்லையா.. இங்கே.. இங்கே..?

அவள் தலையசைத்தாள்.

குழந்தை நல்லபடியாகத்தான் இருக்கிறது.. இந்தக் காயங்கள் எப்படி.. வலி வெளியே மட்டுமா? உள்ளேயுமா?

வெளியேதான்..

அப்படியா.. நான் இங்கே உனக்குத் தையல் போடப் போகிறேன். வலி தெரியாமல் இருக்க ஒரு மருந்தை ஸ்பிரே செய்கிறேன். வலி தெரியாமல் இருக்கத்தான் மருந்தைப் போடுகிறேன்.. விழிப்பு இருக்கும். ஆனால், நான் தையல் போடுவதை நீ பார்க்கக் கூடாது

அவள், கண்களை மூடிக் கொண்டாள். ஸ்ஸ்ஸ்' என்னும் சத்தம் கேட்டது. அவ ளுடைய தோலின் மேற்பகுதி மரத்துப் போனது. டாக்டர் தன் வேலையை ஆரம்பித் தார்.

இது உன் கணவன் செய்த காரியம்தானே? - டாக்டர் கேட்டார். அமைதியாக இருந்தாள். அவர் நர்ஸின் கையில் சில உபகரணங்களைக் கொடுத்து, கையுறைகளையும் கழற்றிக் கொடுத்து விட்டுக் கேட்டார்.

இதுமாதிரி ஏற்கெனவே நடந்திருக்கிறதா?

எனக்குத் தெரியாது. எனக்குத் தெரியாது..

நீ மறுபடியும் அவனிடம்தான் போவாய் என்று எனக்குத் தெரியும்..

அவள் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால், அவர் இடைமறித்துக் கூறினார்...

ஆமாம். பெண்கள் அப்படித்தான் செய்வீர்கள். திரும்பத் திரும்ப இதைத்தான்..

அவர் பெருமூச்சுடன் நிறுத்தினார். பின் நான், மறுபடியும் உன்னை இங்கே பார்ப்பேன் என்று நினைக்கிறேன்.. ஆனால், அது கூடாது என்றும் ஆசைப்படுகிறேன். எதற்கும் ஜாக்கிரதையாக இரு.. என்றார்.

அவள் மறுநாள் வீடு திரும்பினாள். முகத்தின் காயங்கள், கீறல்களை மறைக்க ஒரு பெரிய கைக்குட்டையினால் முகத்தை மறைத்திருந்தாள். வயிற்றில் போட்டிருந்த தையல் சுரீரென வலித்தது, கைகளும் கூட.. வலி குறைய, ஆஸ்பத்திரியில் மாத்திரைகள் கொடுத்திருந்தார்கள். பஸ்ஸில் ஏறும் முன் ஒன்றை வாயில் போட்டுக்கொண்டாள். வலி சற்று குறைந்த மாதிரி இருந்தது. இன்னொரு மாத்திரையையும் விழுங்கினாள்.

வீட்டின் கதவுகள் திறந்து கிடந்தது. அவள் படபடக்கும் தன் இதயம், நெஞ்சைவிட்டுக் குதித்து விடாதபடி மிரட்சியுடன் அந்தக் காட்சியைப் பார்த்தாள். அறை காலியாக இருந்தது. சில மரச் சாமான்கள் மட்டுமே அங்கிருந்தன. அவனுடைய டேப் ரிக்கார்டர், ஒலிநாடாக்கள், அவர்களது புதிய பெட்டி, மஞ்சள் நிறத் திரைச் சீலைகள் எதுவுமே இல்லை. அவர்களது படுக்கை முழுவதும் கத்தியினால் தாறுமாறாகக் கிழிக்கப்பட்டு, அறை முழுவதும் பஞ்சு பறந்து கொண்டிருந்தது.

படுக்கையில் எவ்வளவு நேரம் அப்படியே கிடந்தாளோ.. தெரியாது. பக்கத்து வீட்டுப் பெண்மணி வந்து, அவளை யார் துணையுடனாவது மொச்சுடிக்கு அவளது தந்தை ஓபட் இருக்கும் இடத்துக்கு டிரக் மூலமாகக் கொண்டுபோய் விட்டு வருவதாகச் சொன்னாள்.

அடுத்த பதினான்கு வருடங்கள், தன் தந்தையை கவனித்துக் கொண்டு இருந்தாள் ரமோட்ஸ்வே. அவளுக்கு முப்பத்து நான்கு வயதாகும்போது, அவர் இறந்து விட்டார்.

எம்மா ரமோட்ஸ்வே தாய் தந்தையற்று, கொடுமையான கனவாக திருமண வாழ்வை முடித்துக் கொண்டு, ஐந்து நாட்களுக்கு மட்டுமே ஒரு தாயாக இருந்த நினைவுடன், தனிமரமான பின்.. ஒரு சிறந்த துப்பறியும் பெண்மணியாகும் லட்சியத்தோடு இதோ.. நம் முன்னே நிற்கிறாள்.

------------------------------------------------------------



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 5

------------------------------------------------------------

எ ம்மா ரமோட்ஸ்வே, ஒரு துப்பறியும் நிறுவனம் தொடங்குவது என்பது, மிகவும் சுலபமான வேலை என்று தான் நினைத்தாள். புதுசாகத் தொழில் தொடங்குபவர்கள் பலரும் முதலில் அது எளிதானது என்று நினைத்து ஆரம்பித்து விட்டு, பிறகுதான் அந்தத் தொழிலில் ஒளிந்திருக்கும் பிரச்னைகளையும், திருப்பங்களையும், எதிர்பாராத அவதிகளையும் எதிர்கொள்வார்கள். பணப் பற்றாக்குறையினாலோ, தேவையான அளவுக்குப் பொருள் கையிருப்பு இல்லாததனாலோ நான்கு, அல்லது ஐந்து வாரங்களில் படுத்துப் போன வியாபாரங்களைப் பற்றி அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். இது மற்றதைக் காட்டிலும் கடினமான வேலை.

முதலில் ரமோட்ஸ்வே, ஜோப்ரா டிரைவ் எனும் இடத்தில், மூலையில் ஒரு வீட்டைப் பார்த்தாள். ஆனால், அது விலை அதிகமாக இருந்தது.. கடைசியில் ஊர்க் கோடியில், கலே மலைக்கு அருகில் ஒரு சிறிய இடம் கிடைத்தது. அது நல்ல இடமாகத் தோன்றியது. ஏனெனில், எப்போதும் ஜனநடமாட்டம் நிறைந்த இடமாக இருந்தது.. ஏராளமானோர் பரபரப்பாகப் போவதும் வருவதுமாக இருந்தனர்.

அப்படி நடக்கிறவர்களின் பார்வையில் நிச்சயம் இவள் மாட்டும் போர்டு தென்படும். போட்ஸ்வானா செய்தித்தாள்களில் விளம்பரம் வருவதைக் காட்டிலும் இது நிச்சயம் அதிகம் பலன் தரும். கூடிய

விரைவில் அவளைப் பற்றி போட்ஸ்வானா மக்கள் தெரிந்து கொள்வார்கள்.

அவள் வாங்கிய இடம் ஒன்றும் உடனே குடி வரக் கூடியதாக இல்லை. ஏராளமான ரிப்பேர் வேலைகள் இருந்தன. ஒரு மேஸ்திரியை அழைத்து வந்து, சுவரின் பூச்சு வேலை களைச் சரிபார்த்தாள். அப்படியே மேல் தளத்துப் பூச்சு வேலையையும் முடித் தாள். கட்டடத்தின் வெளியே இள மஞ்சள் நிறமும், உள் சுவர்களில் வெள்ளை நிறமும் பூசப்பட்டது. மஞ்சள் நிறத் திரைச் சீலைகளைக் கொண்டு வாசலையும், ஜன்னல் களையும் அலங்கரித்தாள். இப்போது இன்னும் குஷி பிறந்து, இரண்டு மேஜை களையும் நாற்காலிகளையும் வாங்கிப் போட்டாள். இவளு டைய நண்பர் ஒருவர் தன்னிடம் உபரியாக இருந்த பழைய டைப்ரைட்டரைக் கொடுத்து உதவினார். ஆபீஸுக்குத் தேவை யான எல்லாம் தயார். காரியதரிசிதான் பாக்கி.

அதுவும் மிகவும் சுலபமாகக் கிடைத்தது. காரியதரிசிகளுக்கான பயிற்சி தரும் கல்லூரிக்கு போன் செய்தவுடனேயே, இவளுக்கு ஒரு பெண்மணி கிடைத்தாள். ஒரு பள்ளி ஆசிரியரின் விதவை. காரியதரிசிக்கான பரீட்சையில் முதன்மையாகத் தேறியிருந்தாள். ரமோட்ஸ்வேக்கு மிகவும் பொருத்தமானவள் என்று கல்லூரி நிர்வாகி கூறினார்.

ரமோட்ஸ்வேக்கு மகுட்சியைப் பார்த்தவுடனேயே பிடித்துப் போய்விட்டது. ஒல்லியான தேகமும், கொஞ்சம் வித்தியாசமான நீள் சதுர முகமுமாக.. தலைமுடியை நிறைய, மருதோன்றி இலைச் சாறைத் தடவி, செஞ்சிவப்பாக்கியிருந்தாள். முட்டை வடிவ மூக்குக் கண்ணாடிக்கு பிளாஸ்டிக் பிரேம் போட்டு, சிரித்த முகமாக, மனதில் எதையும் மறைத்து வைக்க மாட்டாள் என்பதை வெளிப்படையாகக் காட்டும் விதமாக இருந்தாள். அநாவசிய பந்தா இல்லாமலும், மனிதர்களிடம் ஒட்டி உறவாடி, அதே சமயம் எதிராளியை மதிப்பிடக் கூடிய வளாகவும் இருந்தாள்.

ஒரு திங்கட்கிழமையன்று, அலுவலகத்தைத் திறந்தார்கள். மகுட்சி, டைப்ரைட்டரின் முன் அமர்ந்து, நான் வேலை செய்யத் தயார் என்று சிரித்தாள்.

ஆமாம். நாம் புதிதாக ஆரம்பித்திருப்பதால் சூடு பிடிக்க நாளாகும். வாடிக்கையாளருக்காக காத்திருக்க வேண்டியது தான்! - ரமோட்ஸ்வே இப்படிச் சொன்னாலும், உள்மனதில் வாடிக்கையாளர்கள் வருவார்களா என்கிற சந்தேகமே இருந்தது. இந்தத் தொழிலே தவறோ என்றுகூட அவளுக்குத் தோன்றியது. யாருக்கும் துப்பறிபவர் தேவையில்லை. அதுவும் ரமோட்ஸ்வே யார்? அவளுக்கு மட்டும் தலையில் கொம்பா முளைத்திருக்கிறது? அவளும் மொச்சுடியில் உள்ள ஒரு சாதாரணப் பெண்தானே? துப்பறிபவர்களைப் பற்றி, அவள்

லண்டனுக்குச் சென்று தெரிந்து கொண்டதில்லை. ஜோஹனஸ்பர்க் கூடப் போன தில்லை.

யாராவது, உங்களுக்கு ஜோஹனஸ்பர்க் தெரியுமில்லையா? என்று கேட்டால், ஒன்று வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் பொய் சொல்ல வேண்டும்..

மகுட்சி, டைப்ரைட்டர் அச்சுகளைப் பார்ப்பதும், மேஜை இழுப்பறையை இழுத்துப் பார்ப்பதும், வீட்டுக்குள் வரும் கோழியை விரட்டுவதுமாக இருந் தாள்.

பதினோரு மணி சுமாருக்கு, ஒரு கோப்பை தேநீரை அருந்திய ரமோட்ஸ்வே எழுந்து, பக்கத்துக் கடைகளில் நல்ல பெர்.்.ப்யூம் கிடைத்தால் வாங்கி வருவதாகச் சொல்லிக் கிளம்பினாள். மகுட்சியிடம், ஏதாவது போன் வந்தால் பேசவும், யாராவது வாடிக்கையாளர் வந்தால் பார்த்துக் கொள்ளவும் சொல்லி விட்டுச் சென்றாள்.

ரமோட்ஸ்வேக்கு, உள்ளூரச் சிரிப்பு வந்தது..

யார் வந்துவிடப் போகிறார்கள்?

- அவள், இப்படித்தான் நினைத்தாள்.

அநேகமாக இன்னும் ஒரு மாதத்திலேயே இந்த பிஸினஸை மூடி விட வேண்டியதுதான் என்றுகூடத் தோன்றியது. மகுட்சி எவ்வளவு நிலையில்லாத வேலை யைத் தேடிக் கொண்டிருக்கிறாள்.. பாவம் என்றே தோன்றியது. மிக அதிக மதிப்பெண்களுடன் பாஸ் செய்த பெண்ணுக்கு இது துரதிருஷ்டமான வாய்ப்பு தான்..

கடையில், பொருட்களைப் பார்த்துக் கொண்டிருந்த போது மகுட்சி பறந்தோடி வந்தாள்.

எம்மா ரமோட்ஸ்வே.. ஒரு வாடிக்கையாளர்.. ஒரு வாடிக்கையாளர்..

- மூச்சு வாங்கியது மகுட்சிக்கு.

நான், அவளை ஆபீஸில் உட்கார வைத்திருக்கிறேன். இது பெரிய விவகாரமாக இருக்கும்போல் இருக்கிறது.. காணாமல் போன மனிதன் பற்றியது. சீக்கிரம் வாருங்கள்..

காணாமல் அல்லது தொலைந்து போகும் புருஷர்களின் மனைவிகள் எல்லோருமே ஒரே ரகம்தான் என ரமோட்ஸ்வே நினைத்தாள். முதலில் புருஷனின் உயிருக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று பயப்படுவார்கள். ஒருவேளை வேறு பெண்ணை இழுத்துக் கொண்டு ஓடியிருப்பானோ என்று அப்புறம் நினைப்பார்கள் - அநேகமாக அப்படித்தான் இருக்கும் என்கிற இந்த சந்தேகம் மெள்ள மெள்ள பெண்களை ஆக்கிரமித்து, அது அப்படியே கோபமாக மாறும்.. பிறகு, அவன் திரும்பி வந்தாலும் அவனைப் போட்டு உலுக்கி, பெரிய சண்டை போட வேண்டும் என்றுதான் நினைப்பார்கள்.

மாளாட்ஸி என்கிற அந்தப் பெண், இரண்டாவது நிலையில் இருப்பதாகவே ரமோட்ஸ்வேக்குத் தோன்றியது. அவள் கணவன், வேறு ஒருத்தியுடன் தொடர்பு வைத்திருக்கிறான் என நினைத்த ரமோட்ஸ்வே யின் சந்தேகம் வேறு விதமாகவும் திசை மாறியது..

ஒருவேளை நிறைய கடன் தொல்லை இருக்குமோ?

நீ உன் கணவரைப் பற்றிய விவரங்களைக் கொஞ்சம் கூறு..

இதற்குள் மகுட்சி, மூன்று கோப்பை தேநீருடன் வந்தாள்.

என் கணவர் பெயர் பீட்டர் மாளாட்ஸி.. அவருக்கு நாற்பது வயதாகிறது. மரச் சாமான்களைத் தயாரித்து விற்பனை செய்வது அவர் வேலை. வியாபாரம் நல்லபடியாகவே நடந்தது. அதனால், கடன் தொல்லையினால் அவர் ஓடிப் போக சாத்தியக்கூறுகள் இல்லை..

ரமோட்ஸ்வே தலையை ஆட்டினாள்.

வேறு விதமாகவும் இருக்கலாம் இல்லையா.. ஒருவேளை இன்னொரு பெண்ணின் தொடர்பு..?

மாளாட்ஸி, வேகமாகத் தலையை ஆட்டி மறுத்தாள்.

இல்லை. நான் அப்படியும் நினைக்கவில்லை. ஒரு ஆண்டுக்கு முன்பு என்றால் அப்படி இருந் திருக்கலாம். ஆனால், அவர் கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்து விட்டார்.. அவர் ஒருமுறை என்னை, தன்னுடன் வரும்படி அழைத்தார். நான் மறுத்து விட்டேன். அதனால் ஞாயிறு அன்று, தானே சென்று வந்தார். அவர் காணாமல் போனது கூட ஒரு ஞாயிற்றுக் கிழமைதான். நான், வழக்கம்போல சர்ச்சுக்குப் போயிருக்கிறார் என்றே நினைத்தேன்..

ரமோட்ஸ்வே மோட்டுவளையை வெறித்தாள். இது ஒன்றும் கஷ்டமான வழக்காகத் தோன்றவில்லை. பீட்டர் யாரோ ஒரு கிறிஸ்தவருடன்தான் சென்றிருக்க வேண்டும். அது பற்றி ஏதும் சந்தேகமேயில்லை. அவர் எந்தக் குழுவுடன் சென்றார் என்று கண்டுபிடித்தால், அவரைப் பற்றிய முழு விவரமும் கிடைக்கும். இது எதிர்பார்க்கும் முடிவுதான். பீட்டரை விடவும் வயதில் குறைந்தவனாகத்தான் இருக்க முடியும்.

மறுநாள் மாலைக்குள், தனக்குக் கிடைத்த விவரங்களின்படி ஐந்து குழுக்களைத் தேர்ந்தெடுத்தாள். அடுத்த இரண்டு நாட்களுக்குள் மூன்று குழுக்களின் தலைமை போதகர்களைச் சந்தித்தாள். அவர்கள் யாருக்குமே பீட்டரைப் பற்றித் தெரிந்திருக்கவில்லை.. போதாக்குறைக்கு அதில் இருவர், இவளை மதம் மாறச் சொல்லி வற்புறுத்தினர். மூன்றாவது நபர், நாசூக்காக இவளிடம் பணம் கேட்டார்.

ரமோட்ஸ்வே அவரிடம் ஐந்து ரூபாய் மதிப்புள்ள பணத்தைக் கொடுத்து விட்டு நகர்ந்தாள். நாலாவது குழுவின் தலைவரான ரெவரெண்ட் ஷாட்ரெக் மெபாலி யைச் சந்தித்தபோது தனது தேடல், முடிவுக்கு வந்து விட்டதாகவே எண்ணினாள் ரமோட்ஸ்வே.

மாளாட்ஸி பெயரைக் கேட்ட துமே அவரது முகம் வெளிறியது. பயத்துடன் சுற்றும் முற்றும் ஒரு

முறை பார்த்துக் கொண்டார்.

ஆகா.. இந்த மனிதரிடம் பீட்டரைப் பற்றிய விஷயம் இருக்கிறது..

ரமோட்ஸ்வே அவரையே உற்று நோக்கினாள்.

நீங்கள் போலீஸைச் சேர்ந்தவரா..?"

- ரெவரெண்ட் மிரட்சியுடன் கேட்டார்.

நான்.. பெண் போலீஸ்..

அவர் பீதியுடன் வாயைத் திறந்து மூடினார்.

சரியாகச் சொல்லப் போனால் நான் போலீஸ்காரி இல்லை. ஒரு துப்பறியும் நிறுவனத்தைச் சேர்ந்தவள்..

இதற்குள் ரெவரெண்ட் சுதாரித்துக் கொண்டார்.

உங்களை யார் அனுப்பினார்கள்? - ரமோட்ஸ்வேயைப் பார்த்து, இப்போது சற்றே துணிச்சலாகக் கேட்டார்.

பீட்டர் மாளாட்ஸியின் மனைவி.

ஓ.. அவன், தனக்கு பெண்டாட்டியே இல்லை என்று கூறினானே..

இருக்கலாம். ஆனால், அவன் மனைவி. தன் கணவனைத் தேடித் தரச் சொல்லி, என் உதவியை நாடி வந்திருக்கிறாள்.

அவன் இறந்து விட்டான். கடவுளின் பாதத்தை அடைந்து விட்டான்.

ரமோட்ஸ்வே, ரெவரெண்ட்டைப் பார்த்தாள்.

அவர் சொல்வது உண்மையாக இருக்கும் என்றே அவளுக்குத் தோன்றியது. அவளுடைய தேடல் முடிவடையும் தருவாய்க்கு வந்து விட்டது.

இனி அவன் எப்படி இறந்தான் என்பதைக் கண்டுபிடித்தால் போதும். ரமோட்ஸ்வே, ரெவரெண்ட்டை நட்புடன் பார்த்துப் புன்னகைத்தாள்.

நீங்கள் அது பற்றி என்னிடம் நடந்ததை மறைக்காமல் கூறலாம். உங்கள் அனுமதியின்றி, உங்கள் பெயரை, நான் யாரிடமும் வெளியிடமாட்டேன். அவர் எப்படி இறந்தார்?

ரமோட்ஸ்வேயின் வெள்ளை நிற காரில், ரெவரெண்ட்டும் ஏற, அங்கிருந்த நதிக்கரை ஓரமாக இருவரும் பயணம் செய்தனர். கன மழை காரணமாகவும், புயலின் சீற்றத்தாலும் பாதை மேடும் பள்ளமுமாக இருந்தது.. கார் போகவே முடியாமல் திணறியது. ஒரு மரத்தடியில் காரை நிறுத்தினார்கள்.

ரெவரெண்ட் கண்களில் பீதியுடன் ஆற்றைப் பார்த்தார்.

இதுதான் நாங்கள் ஞானஸ்நானம் செய்து வைக்கும் இடம்..

இப்போது அவர் காட்டியது ஆற்றை ஒட்டியபடி இருந்த நீர்த்தேக்கத்தை.

நான் இங்குதான் நின்று கொண்டிருந்தேன். பாவமன்னிப்பு கேட்பதற்காக என்னுடன் வந்தவர்கள், இங்குதான் நீரில் இறங் கினார்கள்..

எத்தனை பேர்..?

ஆறு பேர்.. பீட்டர் மாளாட்ஸியையும் சேர்த்து. எல்லோரும் ஒன்றாகத்தான் சென்றார்கள். நான், வாக்கிங் ஸ்டிக்கை எடுத்துக் கொண்டு அவர்களைப் பின் தொடர்ந்தேன் - ரெவரெண்ட்டின் குரல் இப்போது நடுங்கியது.

அப்புறம்..?

ரமோட்ஸ்வே, அந்த நீர்த்தேக்கத்திலிருந்து கண்களை எடுக்காமல் கேட்டாள்..

அனைவரும் மார்பளவு நீரில் நின்று கொண்டிருந்தனர். நான் கிறிஸ்துவின் சங்கீதங்களைப் பாடி அவர்களைத் திருப்பி பாட வைத்துக் கொண்டிருந்தேன். சட்டென ஏதோ தவறு நடந்து விட்டது போலத் தோன்றியது. நான் உற்றுப் பார்த்தேன். ஐந்து பேர்தான் இருந் தார்கள்.

ஒருவரைக் காணவில்லை.. அப்படித்தானே?

ஆமாம். அந்த ஒருவனை இறைவன் தன்னிடம் அழைத்துக் கொண்டு விட்டான்.

ரமோட்ஸ்வே அந்த நீர்த்தேக்கத்தைப் பார்த்தாள். அப்படி ஒன்றும் பெரியதாக இல்லை.

மழை நாட்கள் தவிர அங்கு, குட்டையாகத்தான் தண்ணீர் தேங்கியிருக்கும். ஆனால், நல்ல மழை

பெய்தால், பெரு வெள்ளம் வருவதற்கு வாய்ப்பு உண்டு. நீச்சல் தெரியாதவனாக இருந்தால், வெள்ளம் அடித்துச் செல்லும் அபாயமும் உண்டு.

அப்படி அடித்துச் செல்லப்பட்டிருந்தால், அந்த உடல் எங்கேயாவது நதிக்கரையில் ஒதுங்கியிருக்க வேண்டுமே.. யார் கண்ணிலாவது பட்டிருக்குமே..? நதிக்கு யாராவது வந்து போய்க் கொண்டுதானே இருக்கிறார்கள்.. அடையாளம் தெரியாத உடல் ஒன்று நதிக்கரையில் கிடந்ததாக பத்திரிகைகளிலும், நாளிதழ்களிலும் இத்தனை நாள் வந்திருக்காதா..?

இதை அலட்சியமாக விடக் கூடாது.

ரமோட்ஸ்வே கொஞ்சம் யோசித்தாள். வேறு கோணத்தில் யோசித்துப் பார்த்தவளுக்கு உடல் நடுங்கியது.

ஒரு வேளை ரெவரெண்ட்.. ∴பாதரே..

அவள் அவரைக் கூர்மையாகப் பார்த்தாள்.



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 6



அ வள் தடாலடியாக அவரைப் பார்த்துக் கேட்டாள்..

இதை ஏன் நீங்கள் போலீஸுக்குச் சொல்லவில்லை?

ஃபாதர் தலைகுனிந்து தரையைப் பார்த்தார். உண்மையிலேயே வருத்தப் படுபவர்கள்தான் தரையைப் பார்ப்பார்கள். கூசாமல் தவறு செய்பவர்கள் தலையை உயர்த்தி, ஆகாயத்தைத்தான் பார்ப்பார்கள்.

நான் கட்டாயம் சொல்லியிருக்க வேண்டும். கடவுள் அதற்காக என்னைத் தண்டிப்பார். அவன் மரணத்துக்கு நான்தான் காரணம் என்று சொல்லி விடுவார்களோ எனப் பயந்தேன். என்னை கோர்ட் வரை இழுத்து, நஷ்ட ஈடு கேட்பார்கள். அதற்கு சர்ச்சின் பணத்தைத்தான் செலவழிக்க வேண்டிவரும். இறைவனின் வேலைகள் எல்லாம் நின்று போய்விடும். இந்த சர்ச் பணம், பல அநாதைக் குழந்தை களுக்குப் பெரும் உதவியாக இருக்கிறது. நான் ஏன் பேசாமல் இருந்தேன் என்று உங்களுக்குப் புரிகிறதா? ஞானஸ்நானம் பெற வந்தவர் களிடம் சர்ச்சின் நிதி நிலைமையை யும், கோர்ட்டின் பலவந்தமான அபராதத்தையும் எடுத்துச் சொன்னதும், அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

ரமோட்ஸ்வேக்குப் புரிந்தது. கோர்ட்டில் போய் ஆயிரக்கணக்கில் அபராதத் தொகை கட்டுவதினால் ஆகப் போவது ஒன்றுமில்லை. இந்த சர்ச்சில் இயங்கி வரும் அநாதைக் குழந்தைகளின் வயிறுதான் காயும். எப்படியும் இறந்தவன் வரப் போவதில்லை.

அவள், ஃபாதரின் கரத்தை மிருதுவாக அழுத்தினாள்.

நீங்கள் செய்ததில் தவறு ஒன்றுமில்லை. கடவுள் நீங்கள் நற்காரியங்களைத் தொடர்ந்து செய்வதையே விரும்புகிறார். அவர் உங்களை கோபிக்க மாட்டார். பீட்டர் இறந்தது உங்களுடைய தவறு இல்லை!

ஃபாதர் கலக்கத்துடன் கண்களை உயர்த்திப் பார்த்தார். கண்ணீர் தளும்பப் புன்னகைத்தார்.

உங்களுடைய அன்பான வார்த்தைகளுக்கு நன்றி..

ரமோட்ஸ்வே அவரிடமிருந்து விடை பெற்றாலும், இன்னொரு கடமை தனக்கு இருப்பதையும் மறக்க வில்லை. அது, பீட்டரின் மனைவி மாளாட்ஸிக்கு, அவளுடைய கணவர் நீரில் மூழ்கி

இறந்து விட்டார் என்பதை எப்படி நிரூபிப்பது?

அன்று மதியம் ரமோட்ஸ்வே, தனது பக்கத்து வீட்டுக்காரரிடம், அவரது நாயை சற்று நேரத்துக்கு இரவல் கொடுத்து உதவ முடியுமா என்று கேட்டாள்.

எனக்கு ஒரு வழக்கில் துப்பறிய ஒரு நாய் தேவைப் படுகிறது. நான் அதைப் பத்திரமாகத் திருப்பித் தந்து விடுகிறேன்.

- அவள் இப்படிச் சொல்ல, பக்கத்து வீட்டுக்காரருக்குப் பெருமை பிடிபடவில்லை.

இந்த நாயைக் கொண்டு போங்கள். இதற்கு மோப்ப சக்தி அபாரம். வயதிலும் மூத்தது. இது நல்ல துப்பறியும் நாயாக இருக்கும்..

- அவர் கூற, ரமோட்ஸ்வே அந்த அழுக்குப் பிடித்த, நாற்றமடிக்கும் பெரிய நாயை சற்று அருவருப்புடனேயே அழைத்துக் கொண்டாள். இருட்டத் தொடங்கியதும் தன் காரில் அதை ஏற்றிக் கொண்டு, கையில் ஒரு கயிற்றுடன் பயணமானாள். அந்த நதிக்கரையை அடைந்தாள்.

தண்ணீர் தேங்கியிருந்த குட்டையின் அருகில் தான் கொண்டு வந்திருந்த நீண்ட மரக் கட்டையை மணலில் ஆழமாக நட்டாள். நாயை, கயிற்றினால் அந்த மரக்கட்டையில் கட்டி வைத்தாள். தன் கைப்பையிலிருந்து ஒரு பெரிய எலும்புத் துண்டை எடுத்து நாயை மோப்பம் பிடிக்கச் செய்தாள். நாய், மிகுந்த உற்சாகத்துடன் அந்த எலும்புத் துண்டைக் கடிக்க ஆரம்பித்தது.

ரமோட்ஸ்வே, சற்று தொலைவில், கொசு கடிக்காமல் இருக்க ஒரு சால்வையால் காலை மூடியபடி, தன்னுடைய பெரிய துப்பாக்கியுடன் உட்கார்ந்தாள். சுமார் இரண்டு மணி நேரம் போனது. கொசுக்கடி பிடுங்கியபோதும், அவள் அதைப் பொருட்படுத்தவில்லை. வேலை என்று வந்து விட்டால் அதுதான் அவளுக்கு முக்கியம்.

திடீரென நாய் உறுமும் சத்தம் கேட்டது. அவள் கண்களைக் குவித்து இருட்டில் பார்த்தாள். நாய்

நின்று கொண்டிருப்பதும், அதன் பார்வை, தண்ணீரை நோக்கி இருப்பதும் தெரிந்தது. நாய் திரும்பவும் உறுமிக் குரைத்தது.

ரமோட்ஸ்வே போர்வையை உதறி விட்டு, அருகில் உள்ள டார்ச் லைட்டை நிதானமாக எடுத்தாள். தண்ணீரில் சலசலப்பு கேட்டது. உடனே அவள் டார்ச் லைட் பட்டனை அமுக்கி, வெளிச்சத்தைப் பாய்ச்சினாள். அந்த ஒளியில், ஒரு பெரிய முதலை திரும்பிப் பார்த்தபடி இருந்தது தெரிந்தது.

நாயைக் கூர்மையாகப் பார்த்தபடியே அது மெதுவாக நகர்ந்தது. ரமோட்ஸ்வே துப்பாக்கியை எடுத்து, நன்கு தெளிவாகத் தெரிந்த அதன் தலையை நோக்கி, குறி வைத்துச் சுட்டாள்! துப்பாக்கி குண்டு பாய்ந்தவுடன் முதலை ஒரு குட்டிகரணம் அடித்து, பாதி நீரிலும் பாதி நிலத்திலுமாக விழுந்தது. இருமுறை துடித்து விட்டு அடங்கி விட்டது. ரமோட்ஸ்வே கைகள் நடுங்க துப்பாக்கியைக் கீழே வைத்தாள். ஒரு கத்தியை எடுத்து முதலையின் வயிற்றுப் பகுதியைக் கிழித்தாள். வயிற்றில் உள்ளது எல்லாம் டார்ச் லைட் ஒளியில், தெளிவாகத் தெரிந்தது. அதில் கூழாங்கற்கள் (உணவு செரிப்பதற்காக முதலை உண்ணும்), அழுகிய மீனின் பகுதிகள், ஜீரணமாகாத வளையல், மோதிரம், ஒரு கைக்கடிகாரம் எல்லாம் இருந்தன. துருப்பிடித்து, கன்னங்கரேல் என இருந்தாலும் அவை தனியே காணப்பட்டன. மிகத் தெளிவாக முதலையின் ராட்சதப் பசிக்குச் சான்றாக இருந்தன!

இ து உன் கணவருக்குச் சொந்தமானதா? - ரமோட்ஸ்வே, முதலை யின் வயிற்றிலிருந்து மீட்ட கைக்கடிகாரத்தை மாளாட்ஸியிடம் காட்டி னாள்.

அவள், அதைக் கையிலெடுத்து உற்றுப் பார்த்தாள்.

மாளாட்ஸி நிதானம் இழக்கவில்லை.

நல்லது. இப்போது என் கணவர் இறைவனிடம் இருக்கிறார் என்பது தெரிய வந்து விட்டது. இன்னொரு பெண்ணுடன் இருக்கிறார் என்பதை விட இது எத்தனையோ மேல்.

மாளாட்ஸியின் வார்த்தைகளை ஆமோதித்தாள் ரமோட்ஸ்வே..

உண்மையான பேச்சு.

நீங்கள் மணமானவரா? கணவருடன் வாழ்வது என்பது எப்படியிருக்கும் என்று உங்களுக்குத் தெரியுமா..? - மாளாட்ஸி வினவ.. ரமோட்ஸ்வே, ஜன்னல் வழியாகத் தெரியும் முள் மரங்களையும், அதன் பின்னணியில் தெரியும் மலைகளையும் வெறித்து நோக்கினாள்.

எனக்கு ஒரு கணவன் இருந்தான். அவன் ஒரு இசைக் கலைஞன். என்னை ரொம்பவும் கஷ்டப்படுத்தினான். இப்போது நான் அவனுடன் இல்லை. ஆனால், சந்தோஷமாக இருக்கிறேன்..

சற்று இடைவெளி விட்டுச் சொன்னாள்..

மன்னியுங்கள். நீங்கள் கணவனை இழந்து நிற்கிறீர்கள்.. அதற்காக வருத்தப்படுகிறீர்கள்..

மாளாட்ஸியின் இதழ்க்கடையில் விரக்தி மிகுந்த புன்சிரிப்பு.. ஆமாம். கொஞ்சம்..

- இதைச் சொல்லி விட்டு எழுந்தவள்.. எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன.. என்றாள்.

அலட்டிக் கொள்ளாத அவளது சுபாவம், ரமோட்ஸ் வேக்கு மிகவும் பிடித்திருந்தது.

பாசாங்கு செய்யத் தெரியாத பெண்..

அ ந்தப் பையனுக்கு பதினோரு வயது ஆன போதிலும், வயதுக்கேற்ற வளர்ச்சியின்றி சிறியவனாக இருந்தான். அவனைப் பார்ப்பவர்கள் ஏழு அல்லது எட்டு வயதுதான் மதிப்பிடுவார்கள்.

அந்தச் சிறுவன், மற்ற சிறுவர்களைக் காட்டிலும் அதீத துறுதுறுப்பும் விஷயங்களை அறிவதில் வேகமும் உடையவனாக இருந்தான். புதர்களிடையே புகுந்து, மணிக்கணக்காக கண்ணில் தென்படாமல் இருப்பது அவனுடைய வழக்கமாயிற்று. திடீரென, கால்நடை பட்டிக்குப் பின்புறமாகவோ, ஆட்டு மந்தையின் பின்னாலோ அரிய பொக்கிஷம் போல கழுகின் இறகு, காய்ந்து போன மரவட்டை, அல்லது பாம்பின் வெளுத்த எலும்புக்கூடு.. இப்படி எதையாவது பிடித்துக் கொண்டு வெளியே வருவான்.

இப்போது மறுபடியும் தன் சுபாவப்படி புதர்களின் நடுவில் இருந்த புழுதிப் பாதையில் நடந்தான். அவனுடைய ஆர்வத்தைத் தூண்டும் படியாக, பாம்பின் புதிய கழிவு அவன் கண்ணில் பட, அதைப் பின்பற்றித் தொடர்ந்து சென்று அந்தப் பிராணியைக் காணலாம் என்கிற நினைப்புடன் நடந்தான். அவனுக்கு அது எந்தப் பாம்பின் மலம் என்று கூடத் தெரிந் திருந்தது. அதன் மேல், பாறையில் வாழும் முயலின் ரோமங்கள் இருந்தன. பெரிய பாம்புகளுக்கு, பாறை முயல்கள் மிகவும் பிடித்த உணவு. இதுவும் அவனுக்குத் தெரியும். பாம்பு மாத்திரம் அவன் கண்ணில் படுமானால், அதைப் பாறையில் அடித்துக் கொன்று விட்டு, பாம்புத் தோலில் தனக்கும், தன் தந்தைக்கும் பெல்ட் செய்து கொள்ளலாம் என்று நினைத்தான்.

இருட்ட ஆரம்பித்துவிட்டது. இந்தத் தேடலை நிறுத்த வேண்டியதுதான். நிலவில்லாத அந்த இரவில் பாம்பைத் தேடிக் கண்டுபிடிப்பது என்பது சாத்திய மில்லாதது. பாதையை விட்டு விலகி, புதர் நடுவில் உள்ள ஒற்றையடிப் பாதை வழியே போய், காய்ந்து கிடந்த ஆற்றுப் படுகை வழியாக ஊர் செல்ல எண்ணி னான்.

பாதையை சீக்கிரமாகவே கண்டு பிடித்து விட்டான். கால்களை மணலில் புதைத்தபடி சிறிது நேரம் இளைப் பாறினான். அவனுக்குப் பசித்தது. வீட்டில் மாமிசமும் குழம்பும் அவனுக் காக இருக்கும் என்பது அவனுக்குத் தெரியும். அவன் எழுந்திருந்து மறுபடி யும் நடக்கத் தொடங்கினான். இப்போது நன்றாக இருட்டி விட்டது.

அப்போதுதான் கவனித்தான்.. எதிரில் இருந்த மரங்களின் பின்னணியில் இருந்து மஞ்சள் நிற வெளிச்சம் தெரிந்தது. அவன் திரும்பியபோது, பின்னால் ஒரு டிரக் வண்டி வந்து கொண்டிருந்தது. அது காராக இருக்க முடியாது. ஏனெனில், அங்கு மணல் மிக ஆழமாகவும் மிருதுவாகவும் இருந்தது. கார் இந்தப் பாதையில் போக முடியாது.

அவன் பாதையின் ஓர் ஓரத்தில் நின்று காத்திருந்தான். வண்டியின் வெளிச்சம், இப்போது நேரே

அவன் மீது விழுந்தது. ஒரு சின்ன டிரக்.. தலையில் இரண்டு விளக்குகளின் வெளிச்சம் பாதையின் மேடு பள்ளங்களுக்கு ஏற்ப ஏறி ஏறி இறங்கியது. வண்டி மிக அருகில் வர, வெளிச்சம் அவன் முகத்தில் அடிக்க, சட்' என கைகளால் கண்களை மறைத்துக் கொண்டான்.

குட் ஈவ்னிங் - சம்பிரதாயமான வாழ்த்து வண்டிக்குள் இருந்து ஒலித்தது.

சிறுவன் சிரித்தபடியே பதில் வணக்கம் கூறினான். வண்டியில் இருவர் இருந்தனர். இளைஞனான ஒருவன் வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான். அவன் அருகில் வயதானவன் ஒருவன். இருவருமே புதியவர்கள் என்பதை ஒரு பார்வையிலேயே புரிந்து கொண்டு விட்டான் சிறுவன். ஸெட்ஸ்வானா மொழியை அவர்கள் பேசிய விதம் சற்று வித்தியாசமாக இருந்தது. உள்ளூர்வாசிகள் பேசுவதுபோல் இல்லை. ஒவ்வொரு வார்த்தையின் முடிவிலும் குரல் மேல் ஸ்தாயியிக்குச் சென்றது.

காட்டு மிருகங்களை வேட்டையாடுகிறாயா.. இருட்டில் புலியைப் பிடிக்கப் போகிறாயா?

அவன், இல்லை எனத் தலையசைத்தான்.

நான் வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்..

புலியை நீ பிடிக்கும் முன்பே அது உன்னைப் பிடித்து விடும்..

சிறுவன் சிரித்தான். நீங்கள் சொல்வது சரிதான். எப்படியானாலும் நான், இன்று புலியைச் சந்திக்க விரும்பவில்லை..

சரி.. நான், உன்னை வீட்டில் கொண்டுபோய் விட்டு விடுகிறேன். ரொம்பத் தொலைவோ?

இல்லை இல்லை.. தூரமில்லை. இதோ, பக்கம் தான்.

இதற்குள் வண்டி ஓட்டி, கதவைத் திறந்து கொண்டு, கீழே இறங்கினான். இன்ஜினை அணைக்காமலேயே, சிறுவன் ஏறி பக்கவாட்டு இருக்கையில் உட்கார வசதி செய்து தந்தான். பின்னர் கதவை மூடிவிட்டு, வண்டியில் ஏறி, கியரை மாற்றினான். சிறுவன் காலைத் தூக்கி மேலே வைத்துக் கொள்ள - காலடியில் ஏதோ மிருகத்தின் மிருதுவான ஈரம் படர்ந்த மூக்கில் பாதம் பட - நாயோ இல்லை ஆடோ..

இடது பக்கம் உட்கார்ந்திருந்த வயதான மனிதனைத் திரும்பிப் பார்த்தான் சிறுவன். ஒருவரை உற்றுப் பார்ப்பது அநாகரிகம் என்று அவனுக்குத் தெரியும். அதுவும் இந்த கருங்கும்மிருட்டில்.. இருந்தாலும் அந்த மனிதனின் உதடுகளும் கண்களும் ஏதோ மாதிரி இருப்பதைக் கவனித்தான். உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

ஒரு பையன், வயதான ஒருவரை அப்படிப் பார்ப்பது தவறுதான். ஆனால். இந்த மனிதர்கள் ஏன் இங்கே இருக் கிறார்கள்.. என்ன செய்கிறார்கள்..?

அதோ.. அதுதான் என் அப்பாவின் வீடு. விளக்கு வெளிச்சம் தெரிகிறது பாருங்கள்..

எங்களுக்குத் தெரிகிறது.

இங்கேயே நிறுத்துங்கள்.. நான் இந்தப் பக்கமாகப் போய்விடுவேன்..

நாங்கள் நிறுத்த மாட்டோம். உன்னால் எங்களுக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது..

பையனுக்கு திடீரென பயம் பிடித்துக் கொண்டது. விருட்டெனத் திரும்பி டிரைவரைப் பார்த்தான். அந்த இளைஞன் சிரித்தான்.

கவலைப்படாதே. பேசாமல் உட்கார். நாம் இப்போது, வேறு ஒரு இடத்துக்குப் போகிறோம்..

என்னை எங்கே அழைத்துப் போகிறீர்கள்.. ஏன் அழைத்துப் போகிறீர்கள்..?

சிறுவன் கிட்டத்தட்ட கூச்சலிடாத குறை.. இதற்குள் வயதானவன், அவனுடைய தோளைத் தொட்டான்.

உன்னை ஒன்றும் செய்ய மாட்டோம். நீ வீட்டுக்கு அப்புறம் போகலாம். உனக்கு ஒரு கெடுதலும் நேராது. நாங்கள் மிகவும் இரக்க சுபாவமுள்ளவர்கள்.

சிறுவன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். அதுவரை என்ன நடக்கிறது என்று அவனுக்குப் புரிய வில்லை. இப்போது புரிந்து விட்டது. என்ன நடக்கும் என்பதை யூகித்து விட்டான்.

ஏய்.. பையனைப் பிடி! அவன் கைகளைக் கெட்டி யாகப் பிடித்துக் கொள். நீ பிடித்துக் கொள்ளவில்லை என்றால், வண்டி பாதையை விட்டு இறங்கி விடும்!

நான் முயற்சி செய்கிறேன். அவன் பிசாசு மாதிரி திமிறுகிறான்.

நீ பிடித்துக் கொள்.. நான் வண்டியை நிறுத்து கிறேன்.

முதல் வழக்கில் பெற்ற வெற்றி, ரமோட்ஸ்வேக்கு மிகுந்த ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்தது. தனியார் துப்பறிவது பற்றிய புத்தகங்களை வரவழைத்து, அத்தியாயம் அத்தியாயமாகப் படித்துக் குறிப்பெடுத்தாள்.

அவளுடைய காரியதரிசி மகுட்சிக்கு கடிதங்களைப் பிரித்துப் பார்க்கும் வேலை இருந்தது. முதல் மூன்று நாட்களுக்குக் கடிதங்களே இல்லை. நான்காவது நாள் ஒரு பட்டியல் கடிதமும், சொத்து வரிக்கான தாக்கீதும் வந்தன.

இரண்டாவது வார ஆரம்பத்தில், கைபட்டு, அழுக்கடைந்த ஒரு வெள்ளை உறையிலிருந்த கடிதத்தை ரமோட்ஸ்வேக்குப் படித்துக் காண்பித்தாள்.

அன்புள்ள எம்மா ரமோட்ஸ்வே, நீங்கள் இத்தகைய பெரிய நிறுவனத்தை இங்கு ஆரம்பித்திருப்பது பற்றி, பேப்பரின் மூலம் தெரிந்துகொண்டேன்.

நான், என் பிறந்த ஊருக்கு அருகில் உள்ள காபரோனேயிலிருந்து முப்பது மைல் தொலைவிலுள்ள காட்ஸானா கிராமத்தில் ஒரு சிறிய பள்ளியில் ஆசிரியராக இருக்கி றேன். எனக்கும் என் மனைவிக்கும் இரண்டு பெண் குழந்தைகளும் பதினோரு வயதில் ஒரு பையனும் உண்டு. எங்களுடைய பையன் காணாமல் போய் இரண்டு மாதங்கள் ஆகின்றன.

நாங்கள் போலீஸிடம் சென்றோம். அவர்கள் வலை வீசித் தேடி, பல இடங்களில் விசாரித்தும் பயனில்லை. யாருக்கும் என் பையனைப் பற்றிய விவரங்கள் எதுவும் தெரியவில்லை.

நான் பள்ளியிலிருந்து விடுப்பு எடுத்துக் கொண்டு, எங்கள் ஊரைச் சுற்றியுள்ள ஒவ்வொரு குகை, ஒவ்வொரு பள்ளத்திலும் அவனைத் தேடினேன். அவனது சுவடே இல்லை.

என் பையனுக்கு இயற்கை யின் மீது மிகுந்த ஈடுபாடு இருந்ததனால் அங்குமிங்கும் அலைவான். கற்களையும் காட்டில் கிடைக்கும் பறவை சிறகுகளையும் சேமிப்பதில் ஆர்வம் கொண்டவன். அவனுக்குப் புதர்களைப் பற்றி நன்கு தெரியுமாதலால், முட்டாள்தனமாக எதையும் செய்து மாட்டிக் கொள்ள மாட்டான். இங்கு சிறுத்தைப் புலிகள் இல்லை. கலஹாரி மலையிலிருந்து வெகுதூரத்தில் நாங்கள் இருப்பதால் சிங்கங்கள் வருவதற்கும் வழியில்லை. இங்குள்ள ஒவ்வொரு கிணற்றையும் பார்த்து விட்டேன். விவசாயிகளையும் தண்ணீரில் இறங்கிப் பார்க்கச் சொன்னேன். இருந்தும் பலன் பூஜ்யம்தான்.

ஒரு பையன் திடீரென்று எப்படி மாயமாக மறைந்து போக முடியும்? நான் பெரிய பணக்காரன் இல்லை. தனியார் துப்பறியும் நிறுவனங் களுக்குப் போதுமான பணம் தரும் அளவுக்கு எனக்கு வசதியில்லை. இருந்தாலும் கடவுளின் பெயரால் உங்களிடம் கையேந்தி யாசிக்கிறேன்.

நீங்கள் மற்ற வழக்குகளை விசாரணை செய்யும்போதும், மனிதர்களை விசாரிக்கும் போதும், பதினோரு வயதான தோபிஸோ என்ற பையனைப் பற்றி ஏதாவது தெரியுமா.. காட்ஸானா கிராமத்தில் ஒரு ஆசிரியரின் பையன் அவன் என்று சொல்லி விசாரிக்க முடியுமா..? குழந்தையைத் தொலைத்து விட்டு, சாப்பிடாமல் உருக்குலைந்து கிடக்கும் என் மனைவிக்காகவாவது தயவுசெய்து இதை நினைவில் வைத்துக் கொண்டு செய்வீர்களா..? உங்களிட மிருந்து ஏதாவது நல்ல தகவல் வரும் எனக் காத்திருக்கும் ஆசிரியர்.

கடவுள் துணை.

- எர்னஸ்ட் மோலோய் பகோடாட்டி.

மகுட்சி படிப்பதை நிறுத்திவிட்டு ரமோட்ஸ்வேயைப் பார்த்தாள். சிறிது நேரம் இருவரும் பேசவில்லை.



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 7



ர மோட்ஸ்வேதான் முதலில் மௌனத்தைக் கலைத்தாள்.

மகுட்சி.. உனக்கு ஏதாவது இது பற்றி தெரியுமா? ஏதாவது பையன் காணாமல் போனது பற்றிக் கேள்விப் பட்டாயா?

மகுட்சி சற்று யோசித்தாள்.

கேள்விப்பட்டேன் என்று நினைக்கிறேன். நியூஸ் பேப்பர்களில், காணாமல் போன சிறுவன் பற்றி வந்திருந்தது. ஆனால், எல்லோரும் அவன் வீட்டை விட்டு ஓடிப்போய் விட்டதாக நினைக்கின்றனர்."

ரமோட்ஸ்வே எழுந்து, காரியதரிசியின் கையில் இருந்த கடிதத்தை வாங்கிப் பார்த்தாள். தடயங்கள் அழியாமல் இருக்க, கோர்ட்டில் மிக ஜாக்கிரதையாக பிடிப்பார்களே.. அதுபோல, அந்தக் காகிதத்தைக் கையிலெடுத்தாள். அந்த மெல்லிய காகிதம் - சோகமான செய்தியினால் கனமாக இருப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது.

என்னால் இதில் எதுவும் செய்ய முடியாது என்றே நினைக்கிறேன். இருந்தாலும், என் காதுகளைக் கூர்மையாக வைத்துக் கொள்வேன். இதை, அந்தப் பரிதாபத்துக்குரிய தந்தையிடம் கூறுவேன். வேறு என்ன செய்ய முடியும். கட்ஸானாவைச் சுற்றியுள்ள புதர்களை அவரே நன்கு அறிவார். அங்குள்ள மனிதர்களையும் அவருக்கு மிக நன்றாகத் தெரியும். இதில், நான் செய்யக்கூடியது பெரிதாக ஒன்றும் இல்லை.

மகுட்சியிடம் ஒரு பிரச்னையிலிருந்து விடுபட்ட நிம்மதி.

ஆம்.. இதில் நாம் செய்யக்கூடியது எதுவும் இல்லை..

ரமோட்ஸ்வே சொன்ன கடிதத்தை, அவள் மிக கவனத்துடன் டைப் செய்தாள். அழகாக உறையில் இட்டு, மேலே ஸ்டாம்ப்பையும் ஒட்டி, போஸ்ட் செய்வதற்கான சிவப்பு நிற ட்ரேயில் வைத்தாள்.

இதுதான் துப்பறியும் நிறுவனத்திலிருந்து அனுப்பப்பட்ட இரண்டாவது கடிதம். முதல் கடிதம் 250 புலாவுக்கான (அந்த ஊர் ரூபாய்) கட்டண ரசீது. அதன் மேல் மகுட்சி, உன் கணவர் இறந்த மர்மத்தைக் கண்டுபிடித்ததற்கான கட்டணம் என்று மாளாட்ஸிக்கு டைப் செய்திருந்தாள்.

ஜீ ப்ரா டிரைவ்விலுள்ள தன் வீட்டில் ரமோட்ஸ்வே, தனது பகல் உணவுக்காக ஸ்டுவும் (ஒருவிதமான குழம்பு) பூசணிக்காய் கறியும் சமைத்துக் கொண்டு இருந்தாள். அவளுக்கு கோப்பை நிறைய தேநீரை உறிஞ்சியபடி, குழம்பைக் கிளறியவாறு, அன்றைய சம்பவங்களை

நினைக்கப் பிடிக்கும். அன்று வந்திருந்த அந்தக் கடிதத்தைத் தவிர, பல நிகழ்ச்சிகள் நடந்திருந்தன. ஏராளமாகக் கடன் கொடுத் திருந்த ஒருவனுக்கு, கடன் வாங்கியவர்களிடம் இருந்து, பணத்தைத் திரும்பப் பெற்றுத் தருவதாகக் கூறியிருந்தாள்.

இது மாதிரியான சமாசாரங்களை எல்லாம் கூட துப்பறியும் நிறுவனம் செய்யுமா? தெரியவில்லை. இதுபற்றி ஒரு குறிப்பும், எந்தப் புத்தகத்திலும் இல்லை. இருந்தாலும் அந்த மனிதன் விடாப்பிடியாக அவளை வற்புறுத்திக் கொண்டிருக்கிறான். முடியாது என மறுக்கவும் கஷ்டமாக இருந்தது. பிறகு, தன் கணவனைப் பற்றிய கவலையுடன் ஒரு பெண் அவளிடம் வந்தாள்.

அவன் வீடு திரும்பும்போது ஒரே பெர்.ஃ.பியூம் வாசனையுடன் வருகிறான். சிரித்த முகமாக வேறு வருகிறான்.

அவன் ஏன் வாசனையுடன் சிரித்த முக மாக வீடு திரும்புகிறான் என்பதே மனைவியின் கவலை.

ஏன்?

ஏனென்றால், வேறு பெண் எவளையாவது பார்த்துவிட்டு வருகிறானோ என்னவோ! - ரமோட்ஸ்வே கூறினாள்.

என் கணவன் அப்படி செய்வான் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

- அந்தப் பெண் அழமாட்டாத குறையாகக் கேட்டாள்.

இதுபற்றி இருவரும் பேசி, அந்தப் பெண்ணே இது விஷயமாகக் கணவனை சரி கட்ட வேண்டும் என முடிவு செய்யப்பட்டது.

ஆனால், இதற்கு இன்னொரு காரணம்கூட இருக்கலாம் என்று ரமோட்ஸ்வே நம்பிக்கையுடன்

கூறினாள்.

அப்படியென்றால்?

அதாவது, நிறைய ஆண்கள் இந்தக் காலத்தில் வாசனை யாக இருக்க விரும்புகிறார்கள். ஆண்களின் உடல் நாற்றம் பற்றி உனக்குத் தெரியாதா? - மகுட்சி கேட்டாள்.

அந்தப் பெண், நாற்காலியிலிருந்து உடனடியாக திரும்பி, மகுட்சியை வெறித்தாள்.

என் கணவர் மிகவும் சுத்தமானவர். அதனால் நாற்றமே கிடையாது.

இப்போது ரமோட்ஸ்வே, மகுட்சியைக் கூர்மையாக, எச்சரிப்பதுபோலப் பார்த்தாள். வாடிக்கையாளர்களுடன் தான் பேசிக் கொண்டிருக்கும்போது, அவளை ஒதுங்கியிருக்கும்படிச் சொல்ல வேண்டும் என தனக்குள் நினைத்துக் கொண்டாள்.

ஆனால், இவையெல்லாம் நடந்து கொண்டிருந்தபோதும், ரமோட்ஸ்வே யின் மனதில் அந்த ஆசிரியரின் சோகமயமான கடிதமும், காணாமல் போன சிறுவனும் திரும்பத் திரும்ப வந்துகொண்டே இருந்தார்கள். அவனு டைய அம்மாவும் அப்பாவும் எத்தனை வேதனை அடைந்திருப்பார்கள்?

மகனைக் காணாத ஒவ்வொரு மணித் துளியும், அவன் எத்தகைய ஆபத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறானோ.. சுரங்கத்தில் எங்கேயாவது சிக்கியிருப் பானோ.. தன்னைத் தேட வருபவர்கள் அருகிலேயே இருந்தும்கூட, கூப்பிட முடியாமல் இருக்கிறானோ! - இப்படி அவர்கள் எத்தனை துடித்திருப்பார்கள்! எத்தகைய கொடிய மனிதனாக இருந்தால், அந்த அறியா குழந்தையை அள்ளிச் சென்றிருப்பான்! இம்மாதிரி போட்ஸ்வானாவில் நடந்தது என்பதே அவளுக்கு நடுக்கத்தையும் பயத்தையும் உண்டு பண்ணியது.

தான் செய்யும் தொழில், தனக்கு ஏற்றதா என்றே அவளுக்கு சந்தேகம் கிளம்பி விட்டது. பிறரது

துன்பங்களை நீக்குவது என்பது நல்ல காரியம்தான். ஆனாலும் பிறரின் துன்பங்கள் இத்தனை மன வேதனைகளை உண்டு பண்ணி விடுகிறதே!

மாளாட்ஸியின் வழக்கு விநோதமான ஒன்றுதான். அவளுடைய கணவன், முதலையினால் விழுங்கப்பட்டான் என்பதைக் கேள்விப்பட்டவுடன் அவள் மிகவும் வேதனைப்படுவாள்; துடிதுடித்துப் போவாள் என ரமோட்ஸ்வே எதிர்பார்த்ததற்கு மாறாக, அவள் கொஞ்சம்கூட அலட்டிக் கொள்ளாமல் இருந்தது அதிசயமாகத்தான் இருந்தது.

அப்போது அவள் என்ன சொன்னாள்.. எனக்கு நிறைய வேலை இருக்கிறது என்றுதானே? கணவனை இழந்தவள், அதற்காகச் சிறிதளவுகூட வருத்தப்படாமல் இப்படிக் கூறியது அசாதாரணம்தான். அவள் கணவனை, அவள் பொருட்படுத்தவே இல்லையா? ஒழிந்தான் என நினைத்தாளா..?

ரமோட்ஸ்வே, அடுப்பிலிருந்த ஸ்டூவைக் கிளறிக் கொண்டே யோசித்தாள்.

மாளாட்ஸிதான் கணவனை கொலை செய்து இருக் கிறாள். அதனால்தான் அவன் இறந்த செய்தி, அவளுக்கு அதிர்ச்சியை உண்டாக்கவில்லை. அவளுக்கு, அவன் இறந்தது ஏற்கெனவே தெரிந்திருக்க வேண்டும்.

ஆனால், முதலையின் வயிற்றில் இருந்த ஆதாரங்கள்? புனித ஸ்நானம் செய்ய வந்த மற்ற பாவம் சுமந்த வர்கள்..? இப்படி எல்லாத் தடயமும் இருக்கிறதே!

இல்லை.. அவள் குற்றமற்றவள்தான். ஒருவேளை கணவன் செத்துப்போக வேண்டும் என்பது அவளது பிரார்த்தனையாக இருக்க வேண்டும். அப்படிக் கூட ஒருத்தி நினைப்பாளா? என்ன செய்வது.. திருத்தவே முடியாத கணவர்களை வைத்துக் கொண்டு, இந்தப் பெண்கள் என்னதான் செய்வார்கள்? கடவுளே, இவன் தொலைய மாட்டானா! என்று ஏதோ ஒரு கட்டத்தில் வேண்டியிருப்பாளாயிருக்கும். அவளுடைய பிரார்த்தனை முதலை மூலமாக நிறைவேறியிருக்கலாம். அப்படி யானால், கடவுளின் பார்வையில் அவள் கொலைகாரியாக முடியுமா?

அவள் சிந்திப்பதை நிறுத்தினாள். பூசணிக்காய் வெந்துவிட்டது. கடைசியாக ஆராய்ந்து பார்த்தால், வாழ்க்கையின் சிக்கல்கள் எல்லாம் தானாகத் தீர்ந்தால் தான் உண்டு. எண்ணியெண்ணி ஒன்றும் ஆகப் போவதில்லை. அதுதான் வாழ்க்கையின் யதார்த்தம். மேலும் மேலும் மண்ணில் உயிர் வாழ்வதற்குக் காரணமே இதோ.. இந்தப் பூசணிக்காய்தான்.. அதாவது உணவுதான்!

க ணக்கு வழக்குகள் எதுவுமே உற்சாகம் அளிப்பதாக இல்லை. சாண் ஏறினால், முழம் சறுக்குகிறது. முதல் மாத முடிவில், துப்பறியும் நிறுவனம், நஷ்டத்தையே காட்டியது. பணம் கொடுக்கக் கூடிய வாடிக்கையாளர்களே மூன்று பேர்தான் வந்தார்கள். வேறு இருவர், ஆலோசனை கேட்டு விட்டு, பணம் கொடுக்காமல் சென்று விட்டார்கள். தந்தை என்று சொல்லிக்கொண்டு வந்தவனை வெளியேற்றியதற்கு, பாபட்ஸி, 200 புலா கொடுத்தாள். மாளாட்ஸி, தன் கணவன் இறந்ததை கண்டுபிடித்துச் சொன்னதற்கு 250 புலா கொடுத்தாள். உள்ளூர் வியாபாரி ஒருவர், தன்னுடைய போனிலிருந்து, யாரோ தனக்குத் தெரியாமல் தொலைதூர எண்ணுக்கு போன் செய்கிறார்கள் என்று வந்தவர்.. அதைக் கண்டு பிடித்துத் தந்ததற்காக 100 புலா கொடுத்தார். ஆக மொத்தம் அந்த மாத வருமானம் வெறும் 550 புலா மட்டுமே. ஆனால், காரியதரிசி மகுட்சியின் சம்பளமோ மாதம் 580 புலா. அந்த மாதம் காருக்கு பெட்ரோல் செலவு, ஆபீஸுக்கு மின் கட்டணம் இவற்றைச் சேர்க்காமலேயே 30 புலா நஷ்டம்.

எந்தவொரு தொழிலும் கால் ஊன்ற சிறிது காலம் ஆகும் என்பது ரமோட்ஸ்வேக்குத் தெரிந்திருக்கிறது. ஆனால், எத்தனை நாட்கள் நஷ்டத்தில் நடத்துவது? அவளுடைய தந்தை விட்டுச் சென்ற சொத்தில் கொஞ்சம் மிச்சமிருந்தது. ஆனால், ஆயுள் முழுக்க வாழ்வதற்கு அது நிச்சயமாக போதாது. அப்பாவின் அறிவுரைப்படி ஒரு கசாப்புக் கடை திறந்திருந்தாலும் பிரச்னையின்றி இருந்திருக்கலாம். பத்திரமான முதலீடு. ஆனால், அது போன்ற தொழிலில் எந்தவித ஆர்வமூட்டும், உற்சாகமான சமாசாரமும் இல்லையே!

அவள், தோக்வெங் சாலை விரைவு வண்டிகளின் நிறுவன முதலாளியான மிஸ்டர் ஜே.எல்.பி மட்கோனி நிலையைப் பற்றி நினைத்துப் பார்த்தாள். அவருடையது நிச்சயமாக லாபம் தருகிற நிறுவனம்தான். அவருக்கு வாடிக்கையாளர்களுக்குப் பஞ்சமே கிடையாது. மட்கோனி நல்ல வியாபாரத் திறமை உள்ளவர். நல்ல மெக்கானிக்கும் கூட. அவருக்கு, தான் என்ன செய்கிறோம் என்று தெரியும். ஆனால் இவளுக்கோ தெரியவில்லை. இவர்கள் இருவரிடமும் உள்ள வித்தியாசமே இதுதான்.

ரமோட்ஸ்வேக்கு மட்கோனியைப் பல வருடங்களாகத் தெரியும். அவர் மொச்சுடியிலிருந்து

வந்தவர். அவருடைய மாமா, ரமோட்ஸ்வேயின் தந்தைக்கு மிக நெருக்கமான சிநேகிதர். மட்கோனி, ரமோட்ஸ்வேயை விடவும் பத்து வருடம் மூத்தவர். அவருக்கு வயது நாற்பத்தைந்து ஆனாலும், ரமோட்ஸ்வேயின் வயதுதான் தனக்கும் என்று அவர் நினைத்தார். அடிக்கடி, நம்மைப் போன்ற வயதுள்ள வர்களுக்கு.. என்கிற வார்த்தையை உபயோகித்தார்.

அவர் பழகுவதற்கு எளிமையானவர். அவர் ஏன் இன்னும் திருமணம் செய்து கொள்ளவில்லை என்று ரமோட்ஸ்வே எண்ணுவது வழக்கம். அவர் பார்க்க அழகாக இல்லா விட்டாலும் கூட, நல்ல உடலமைப்பும் நம்பிக்கையும் தைரியமும் உள்ளவராகவே காணப்பட்டார்.

பழைய விமான தளத்தின் அருகில் உள்ள ஒரு பெரிய வீட்டில் அவர் தனியாகவே வசித்து வந்தார். அந்த வழியாக காரில் செல்லும்போது, பலமுறை அவர், தன் வீட்டு வெராந்தாவில் தனியாக உட்கார்ந்து, அவருடைய பெரிய தோட்டத்தில் உள்ள மரங்களை பார்த்துக் கொண்டிருப்பார். இதை ரமோட்ஸ்வே பார்த்திருக்கிறாள்.

அவர் என்ன நினைத்துக் கொண்டிருப்பார்? தோட்டத்தில் விளையாட குழந்தைகள், மனைவி என்றிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்றா? அல்லது அவரது கார் ஷெட்டில் பழுது பார்க்க நின்றிருக்கும் கார்களைப் பற்றியா? ஒருவராலும் அதைக் கண்டுபிடிக்க முடியாது. ஏகப்பட்ட ரசீதுகள், உதிரி பாகங்களுக்கான ஆர்டர்கள் நிறைந்த, எண்ணெய்ப் பிசுக்குப் பிடித்த அவரது ஆபீஸுக்குச் சென்று, அவரோடு பேசுவது ரமோட்ஸ்வேக்கு பிடித்திருந்தது. சுவரில் தொங்கும், சாதாரணப் படங்கள் போட்ட காலண்டர்களைப் பார்க்கப் பிடிக்கும். எண்ணெய்க் கறை படிந்த கோப்பைகளில் தேநீர் அருந்தியவாறு, அவருடைய ஆட்கள் காரை உயரத் தூக்கி நிறுத்தி, கீழே ஏக இரைச்சலுடன் வேலை பார்ப்பது பிடிக்கும்.

மட்கோனிக்கும் இவளது வரவு மிகவும் பிடித்தமாகவே இருந்தது. தன் சொந்த ஊர் பற்றி, அரசியலைப் பற்றி, அல்லது அன்று நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி சுவாரஸ்யமாகப் பேசுவார்கள். யாருடைய காரில் என்ன கோளாறு, அன்றைக்கு பெட்ரோல் வாங்கியது யார் யார், அவர்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறார்கள்.. இப்படி ஏதாவது அவர் பேசுவார். ஆனால், அன்றுதான் அவர்கள் பணவரவு பற்றியும், லாபகரமாகத் தொழில் நடத்துவது எப்படி என்றும் பேசினார்கள்.

வேலையாட்கள் சம்பளம்தான் மிகப் பெரிய செலவு.. இப்படி கூறிய மட்கோனி,

அதோ பார். காரின் அடியில் வேலை செய்யும் அந்தப் பையன்களால் எவ்வளவு செலவு தெரியுமா? அவர்கள் சம்பளம், அதற்கான வரி, கார் அவர்கள் தலையில் விழுந்தால் அதற்கான இன்ஷூரன்ஸ் இப்படி எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தால், எனக்கு ஒன்றிரண்டு புலாக்கள் மிஞ்சினால் அதிகம்.

ஆனால், நீங்கள் நஷ்டப்படவில்லையே.. எனக்கு முதல் மாதத்திலேயே 30 புலா நஷ்டம். போகப் போக இன்னும் மோசமாகும் என்றே தோன்றுகிறது.

மிஸ்டர் ஜே.எல்.பி.மட்கோனி பெருமூச்செறிந்தார்.

பெரிய மூக்குக் கண்ணாடி அணிந்த காரியதரிசிக்குத் தான் எல்லாம் போகிறது.

ரமோட்ஸ்வே ஆமோதித்தாள்.

ஆமாம், எனக்குத் தெரிகிறது. ஆனால், ஆபீஸ் என்றால் கண்டிப்பாக ஒரு காரியதரிசி வேண்டுமல்லவா? காரியதரிசி இல்லை என்றால், நான் ஆபீஸிலேயே கிடக்க வேண்டியதுதான். கடை கண்ணிக்குப் போக முடியாது. இப்படி வந்து, உங்களுடன் பேசிக் கொண்டிருக்கவும் முடியாது.

மட்கோனி, தேநீர் கோப்பையைக் கையில் எடுத்தார்.

அதற்கு நீ நல்ல வாடிக்கையாளர்களைப் பிடிக்க வேண்டும். பெரிய விவகாரங்கள்.. நிறைய பணம் தரும் கட்சிக்காரர்கள் தேவை.

பணக்காரர்களா?

ஆமாம். உதாரணத்துக்கு பட்டேல் மாதிரி வாடிக்கை யாளர்கள். அவருக்கெல்லாம் துப்பறியும்

ஆட்கள் எதற்குத் தேவைப்படுகிறார்கள்?

பணக்காரர்களானாலும் அவர்களுக்கும் எத்தனையோ பிரச்னைகள் இருக்கலாம்.. நமக்குத் தெரியாமல்.

சற்று நேரம் மௌனமாக, அந்தப் பையன்கள் கார் சக்கரத்தைக் கழற்றுவதையே பார்த்தபடி இருந்தனர்.

முட்டாள் பையன்கள். அவர்கள் இப்படி செய்ய வேண்டிய தேவைகள் இல்லை.

மட்கோனி சொல்ல, ரமோட்ஸ்வே தொடர்ந்தாள்..

எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதைப் படித்ததிலிருந்து எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது. துப்பறியும் நிறுவனம் நடத்தவேண்டுமா என்று கூடத் தோன்றுகிறது என காணாமல் போன சிறுவனைப் பற்றியும், தனக்கு கடிதம் எழுதிய அவன் தந்தைக்கு, தன்னால் எந்த உதவியும் செய்ய முடியாதது பற்றியும் கூறினாள்.

என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. கண்டிப் பாக என்னால் ஒரு அற்புதமும் நிகழ்த்த முடியாது. ஆனாலும் அவனை நினைத்தால் பரிதாபமாக இருக்கிறது. அவனுடைய தந்தை, அவன் ஏதாவது புதரில் விழுந்து, மிருகங்களால் இழுத்துச் செல்லப் பட்டிருக்கலாம் என்று நினைக்கிறார். எந்தத் தந்தையால் இதைத் தாங்க முடியும்?

மட்கோனி தொண்டையைச் செருமிக் கொண்டார்.

அதைப் பற்றி, நான் பேப்பரில் பார்த்தேன். அவர்கள் தேடுகிற விவரத்தையும் படித்தேன். அவனைத் தேடுவது உபயோகமில்லாத ஒன்று.

ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?

ரமோட்ஸ்வே கேட்க, மட்கோனி ஒரு நிமிட நேரம் பேசாமல் இருந்தார்.

ஏனென்றால் அவன் இறந்து விட்டான்.



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 8



ஒரு கணம் அதிர்ந்து விட்டாள் ரமோட்ஸ்வே.

நீங்கள் ஏன் அவன் இறந்திருப்பான் என்று நினைக்கிறீர்கள்.. அவன் காணாமல் போயிருக்கலாம் இல்லையா..?

மட்கோனி, காற்றில் விரல்களால் சைகை செய்த படி கூறினார்..

எந்த மிருகமும்.. அதாவது, எந்த சாதாரண மிருகமும் அவனை இழுத்துச் சென்றிருக்க முடியாது.. ஒரு வேளை இது ஸான்டாவான்னா அல்லது தோக் கோலோஸி (ஒரு விதமான மந்திரவாதிகள், பில்லி, சூனியக்காரர்கள்) வேலையாகவும் இருக்கலாம்..

ரமோட்ஸ்வே பேசவில்லை. அந்தச் சிறுவனுடைய தந்தையை எண்ணிப் பார்த்தாள். மொச்சுடி மருத்துவ மனையில் அவள் அனுபவித்த அந்தக் கொடுமையான பகல் அவளுக்கு ஒரு கணம் நினைவுக்கு வந்தது. அவள் அழுது கொண்டிருந்தபோது, உடையைச் சரிசெய்தபடி வந்த அந்த நர்ஸ் மனதில் வந்து நின்றாள். ஒரு குழந்தை இறப்பது என்பது உலகத்தையே இழப்பதற்குச்

சமமானதுதான். பிள்ளையைப் பெற்றவள், மறுபடியும் பழைய கன்னித்தன்மைக்குப் போக முடியாது.. அவளுடைய வாழ்க்கையில் நட்சத்திரங்கள், நிலவு எல்லாம் மறைந்துவிடும். பறவைகள் ஊமைகளாகிவிடும்.

அவள், மறுபடியும் சொன்னாள்..

நீங்கள் ஏன் அவன் இறந்திருப்பான் என்று நினைக் கிறீர்கள்.. அவன் காணாமலே போயிருக்கலாம் அல்லவா..?

இல்லையில்லை.. - மட்கோனி தலையசைத்தார்.

சூனியம், மந்திர தந்திர வேலைகளுக்காகத்தான் அவனைத் தூக்கிச் சென்றிருக்க வேண்டும். அவன் இறந்துவிட்டான்..

ரமோட்ஸ்வே, காலியான கோப்பையை மேஜை மீது வைத்தாள். வெளியில் காரின் சக்கர வளையம் ஒன்று பெரும் சத்தத்துடன் கீழே விழுந்தது.

அவள், தன் நண் பரைப் பார்த்தாள். இந்த மாதிரி சமா சாரங்கள் பற்றி யாரும் விரிவாகப் பேசுவ தில்லை. எவ்வளவோ தைரியசாலிகளின் மனதிலும்கூட அச்சத்தை உண்டு பண்ணக்கூடிய விஷயம் அது.

எப்படி அத்தனை நிச்சயமாகக் கூறுகிறீர்கள்?

மட்கோனி புன்னகைத்தார்.

ரமோட்ஸ்வே.. உனக்கும் எனக்கும் நம்மைச் சுற்றி என்னென்ன நடக்கிறது என்று தெரியும். ஆனால், அதைப் பற்றிப் பேச விரும்புவதில்லை இல்லையா.. ஆப்பிரிக்க இனத்தவர் பேசவே

வெட்கப்படும் விஷயம் இது. இப்படியெல்லாம் நடக்கிறது என்பது தெரிந்தும் நாம் கண்டு கொள்ளாமல் இருக்கிறோம். காணாமல் போன குழந்தைக்கு என்ன நேரிட்டிருக்கும் என்பது நமக்குத் தெரியும்.. நன்றாகவே..!

ரமோட்ஸ்வே அவரைப் பார்த்தாள். அவர் உண்மை யைத்தான் கூறுகிறார். அந்தப் பையன் காணாமல் போனதற்கு, பலரும் பலவிதமான காரணங்கள் கூறினாலும், மட்கோனி சொன்னதுதான் உண்மையான காரணமாக இருக்கக்கூடும்.. சூனியக்கார மருத்துவர், சிறுவனை தன் மருந்துக்காகக் கடத்திச் சென்று கொன்றிருக்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டில் பெருமைக்குரிய தேசியக் கொடி பறக்கும் நவீனமான நாட்டின் மத்தியில், இந்த இருட்டான காரியம் நடந்திருக்கிறது. யாரோ மிக வசதியுள்ள பணக்காரன் ஒருவன், இந்த மாந்திரீகத்தின் மூலம் தனக்குப் பயன் தரும் மருந்துக்காக சிறுவனைக் கொன்றிருக்கலாம். ரமோட்ஸ்வே தலைகுனிந்து கொண்டாள்.

நீங்கள் சொன்னது உண்மையாக இருக்கலாம்.. பாவம் அந்தப் பையன்..

நிச்சயமாக! இல்லையென்றால், அவன் தந்தை உங்களுக்கு எதற்காக கடிதம் எழுத வேண்டும்? போலீஸ் இது எப்படி, எங்கே நடந்தது என்று கண்டுபிடிக்க ஒரு முயற்சியும் எடுத்துக் கொள்ள வில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் பயப்படுகிறார்கள். நான் பயப்படுகிற அளவுக்கு - ஏன், அந்தக் காரின் அடியில் வேலை செய்யும் பையன்கள் உள்பட அத்தனை பேரும் பயந்து சாகிறார்கள். ரமோட்ஸ்வே, நாம் ஒவ்வொருவரும், ஏன்.. நீ உட்பட - எல்லோருமே பயப்படுகிறோம்..

அ ந்த நாட்டில், மூன்று சிறந்த புகழ் பெற்ற குடும்பங்கள் இருந்தன. அவற்றில் இரண்டு வீடுகளுக்குத்தான் ரமோட்ஸ்வே ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அழைப் பின் பேரில் போய் வந்திருக்கிறாள். இதில் ரமோட்ஸ்வேக்கு ஒரு திருப்தி இருந்தது. இதில், ரொம்பவும் பிரபலமானது மொகோலோடி. இது காபரோனுக்குப் பக்கத்தில் அரண்மனை போன்ற பெரிய வீடு. இந்த வீட்டின் வாசல் பக்கம் உள்ள இரும்புக் கதவுகளில் பறவைகளின் உருவம் செதுக்கப்பட்டு மிக உயர்வாக இருக்கும். இது, வடக்குப் பக்கம் உள்ள பக்காடி வீட்டை விடவும் சிறந்ததாக இருந்தது. பக்காடி வீடு அருகில் சாக்கடை இருந்தது. அதனால் அது ரமோட்ஸ்வேக்கு பிடிக்காது. ஆனாலும் அந்த சாக்கடையினாலும் சில லாபங்கள் இருந்தன. அந்த வீட்டின் வெராந்தாவிலிருந்துப் பார்க்கும்போது - அந்தச் சாக்கடைகள் பச்சை நிறக் குளங்கள் போலத் தோன்றும். ஏராளமான பறவைகள் வருவதும் போவதுமாக இருக்கும். ஆனால், காற்று திசை மாறும்போதுதான் இதைப் பார்க்க முடியும்...

மூன்றாவது பெரிய வீடும் பெரும் பணக்காரருடைய தாகத்தான் இருக்க வேண்டும். அங்கு யாரும் அழைக்கப் பட்டதில்லை. காபரோன் முழுவதும் வீட்டின் வெளித் தோற்றத்தை மட்டுமே பார்த்திருக்கிறார்கள். மிகப் பெரிய வெள்ளைச் சுற்றுச் சுவர்கள் சூழ்ந்திருந்ததினால், உள்ளிருப்பது எதுவும் தெரியாது. யாராவது விசேஷமாக அழைக்கப்பட்டவர்கள் மூலமாக, அந்த வீட்டைப் பற்றி தெரிந்தால்தான் உண்டு. ஆனால், எல்லோரும் அந்த வீட்டின் உள்ளே உள்ள செல்வச் செழிப்பினை ஒருமனதாகப் பாராட்டினார்கள்.

பக்கிங்ஹாம் அரண்மனையைப் போல இருக்கிறது - இப்படி, அங்கு ஒரு விசேஷத்துக்கு பூக்கள் கொண்டு சென்ற பெண் கூறினாள். மேலும், மகாராணி கூட இங்கு வசிப்பவர்களைவிட எளிமையாகத்தான் வாழ்வார்கள் என்று தோன்றுகிறது என்றும் கூறினாள்.

அந்த மாளிகையின் உரிமையாளர் பல்லிவாலா பட்டேல் 1967-ல் போட்ஸ்வானாவில் தனது இருபத்தைந் தாவது வயதில் வந்து தங்கினார். அவருக்கென்று அப்போது பெரிதாகப் பணம் எதுவும் இல்லை என்றாலும் அவர் தந்தை - ஊரை விட்டு ஒதுக்குப்புறமாக உள்ள ஜுலுலாண்டில் ஒரு ஆப்பிரிக்கன் அங்காடியில் தையல் கடை ஒன்றை வாங்கி, மகனுக்குத் தந்தார். அது தந்த மாபெரும் வெற்றியில் தான் பட்டேலுக்கு இப்போது எட்டு கடைகளும், வெவ்வேறு ஊர்களில் ஒன்பது ஹோட்டல்களும், லோபாட்ஸ்ஸே யில் பெரிய தையல் நிறுவனமும் சொந்தம்.

அந்த ஏரியாவில் அவர் ஒரு பெரிய பணக்காரர் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால், போட்ஸ்வானாவில் அது பெரிதாகக் கருதப் படவில்லை.. ஏனென்றால், கால்நடைகளில் சம்பாதிக்காத பணம், அவர்களைப் பொறுத்தவரையில் வாயில் விழும் புழுதி போன்றதுதான்!

பட்டேல் ஐம்பது வயதானவுடன் தன்னுடைய வியாபாரத்தை விரிவுபடுத்துவதை நிறுத்திக் கொண்டு தன் கவனத்தை குடும்பத்தினரின் படிப்பு, ஒழுங்குமுறை ஆகியவற்றில் செலுத்த ஆரம்பித்தார்.

அவருக்கு நான்கு குழந்தைகள். ஒரு பையன் வாலஸ். இரட்டை பெண்கள் சந்திரி, பாலி. கடைக்குட்டி நந்திரா. பையனை ஜிம்பாப்வேயில் உள்ள மிக உயர்ந்த பள்ளியில் சேர்த்து, அவன் சிறந்த நாகரிகமானவனாகவும், உயர்குடி மகனாகவும் வளர வேண்டும் என ஆசைப் பட்டார். அங்கு அவன் கிரிக்கெட் விளையாடக் கற்றுக் கொண்டான். அதுமட்டுமல்ல.. மிகவும் கொடுமைக்

காரனாகவும் ஆனான். பட்டேல், பல் வைத்திய கல்லூரிக்கு எக்கச்சக்கப் பணம் கொடுத்து, அவனைச் சேர்த்து, பின் டர்பனில் பல் டாக்டராகப் பணியாற்றத் தொடங்கினான். பற்களைச் சீர்படுத்தி, அழகுபடுத்தும் துறையில் இருந்தான்.

இரட்டை சகோதரிகள் இருவருக்கும் தந்தை எதிர் பார்த்தபடி மாப்பிள்ளைகள் வாய்த்தனர். மருமகன்கள் இருவருமே வியாபாரத்தில் குறியாகவும், கணக்கில் திறமையாகவும் நடந்து கொண்டனர்.

அதுசமயம் நந்திரா பதினாறு வயதுப் பெண்ணாக, மிக உயர்ந்த அதிக செலவுள்ள பள்ளியில் படித்துக் கொண்டிருந்தாள். அவள் படிப்பில் சிறந்து விளங்கினாள். பள்ளியிலிருந்து வந்த சான்றிதழ்களும் அவள் திறமைக்குச் சான்றாக இருந்தன. அவளது இருபதாவது வயதில் நல்லடியாகத் திருமணம் நடக்க வேண்டும் என்று பட்டேல் எதிர்பார்த்தார். அதுதான் சரியான வயது என்பது அவர் கருத்து.

அவர்கள் குடும்பம் முழுவதும், மாப்பிள்ளைகள், தாத்தா, பாட்டி, வெகுதூர சகோதரர்கள் எல்லோரும் பழைய போட்ஸ்வானா டி.்.பென்ஸ் கிளப் அருகிலுள்ள அந்தப் பெரிய அரண்மனை போன்ற வீட்டில் வசித்து வந்தனர். முதலில் அவர்களின் வீடுகள், நிறைய தனித்தனி வீடுகளாக பழைய ஆங்கிலேயர் பாணி வீடுகள்போல பெரிய வெராந்தாக் களுடன்தான் இருந்தன. ஆனால், பட்டேல் அவற்றை முற்றிலும் இடித்துவிட்டுப் புதிதாகக் கட்டினார்.

அது பல குடும்பங்கள் சேர்ந்து - அதே சமயம் தங்களுக்கென்று தனித்தனி வீடுகளாக வசிப்பதற்கு ஏற்ற மாதிரி ஒரே காம்பவுண்ட்டுக்குள் இருந்தது.

எங்கள் இந்தியர்கள் ஒரே காம்பவுண்ட்டுக்குள் வசிப்பதையே விரும்புகிறார்கள் - இப்படி வீடு கட்டும் என்ஜினீயரிடம் விளக்கிய பட்டேல், அப்போதுதான் எங்கள் குடும்பத்தில் என்னென்ன நடக்கிறது என்று தெரிந்துகொள்ள முடியும் என்று கூறினார்.

கட்டடக் கலைஞரும், தனக்குக் கிடைத்த சுதந்திரத் தைப் பயன்படுத்தி, பண வசதியில்லாத மற்ற வாடிக்கை யாளர்களின் கனவுகளை எல்லாம் திரட்டி, என்ன வெல்லாம் செய்ய முடியுமோ, அத்தனையையும் புகுந்து விளையாடினார். பட்டேல் எந்த ஆட்சேபணையும் சொல்லாது, அப்படியே ஏற்றுக் கொண்டது அவருக்கு மிகுந்த வியப்பை அளித்தது. அது, பட்டேலின்

ரசனைக்கேற்ப அமைந்து விட்டிருந்தது.

ஆடம்பரமாக டர்பனில் நடந்த இரட்டைப் பெண் களின் திருமணத்துக்குப் பிறகு அவர்களுக்குத் தனித் தனி வீடுகள், இந்த மாளிகையிலேயே கொடுக்கப் பட்டன. அந்தத் திருமணத் துக்கு 1500 விருந்தினர்கள் வந்திருந்தனர். மாப்பிள்ளைகள் இருவருக்கும் அவர்களின் பெயருடைய முதல் எழுத்து எழுதப்பட்ட சிவப்பு நிற மெர்ஸிடிஸ் பென்ஸ் பரிசாக அளிக்கப்பட்டது. இப்போது பட்டேல் வீட்டில் நான்கு கார்கள். ஒன்று அவருடையது. இன்னொன்று டிரைவர் ஓட்டும் கார்.. அது அவருடைய மனைவியுடையது. மற்ற இரண்டும் மாப்பிள்ளைகளுடையது.

டர்பனில் திருமணத்தின்போது, வயதான உறவினர் ஒருவர் கூறினார்..

இதோ பார்.. நம்மைப் போன்ற இந்தியர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். உன்னுடைய பணத்தை வெளிக்காட்டிக் கொண்டிருக்கக் கூடாது. ஆப்பிரிக்கர்களுக்கு அது பிடிக்காது. ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு விடுவார்கள். உகாண்டாவில் என்ன நடந்தது பார். ஜிம்பாப்வேயில் கண்மூடித்தனமாகச் சிலர் பேசுவதைக் கேட்டிருக்கிறாயா? கொஞ்சம் சந்தர்ப்பம் கிடைத்தால் போதும். இந்த ஜூலூக்கள் நம்மை என்ன வேண்டு மானாலும் செய்வார்கள். நாம் ரொம்ப கவனத்துடன் நடந்துகொள்ள வேண்டும்..

பட்டேல் அதை மறுத்தார்.

அதெல்லாம் இங்கே ஒன்று நடக்காது. போட்ஸ்வானாவில் ஒரு ஆபத்தும் இல்லை என்றே நான் நினைக்கிறேன். நான் சொல்கிறேன்.. கேட்டுக்கொள். அவர்கள் எல்லோரும் நிலையானவர்கள். நீ அவர் களுடைய வைரங்களைப் பார்த்திருக்க வேண்டும். வைரங்கள், ஒரு தேசத்துக்கு ஸ்திரத்தன்மையைக் கொடுக்கின்றன..

அவருடைய உறவினர் அதைக் கண்டு கொள்ள வில்லை.

ஆப்பிரிக்கா அது மாதிரிதான் உள்ளது. எல்லாம் சௌக்கியமாக, சுகமாக நடந்து கொண்டிருப்பதுபோல் தோன்றும். திடீரென்று உன் கழுத்து வெட்டப்படும். நீ வேண்டுமானால் பார்!

இருந்தாலும் பட்டேல் அவரது அறிவுரையை சிறிதளவு ஏற்றுக் கொண்டார் என்றுதான் சொல்ல வேண்டும். வீட்டைச் சுற்றியுள்ள சுவர்களை மிக உயரமாக்கினார்.. மக்கள் அவர் வீட்டுச் செல்வச் செழிப்பைப் பார்க்க முடியாதபடி. சொகுசு கார்களில் வெளியே சென்றால் என்ன? அதுமாதிரி எத்தனையோ கார்கள் அவ்வூரில் இருந்தன. தனிப்பட்ட முறையில் யாரும் கவனிக்க மாட்டார்கள்.

பட்டேலிடமிருந்து ரமோட்ஸ் வேக்கு ஒரு நாள் போன் வந்தது.

என் வீட்டுக்கு வர முடியுமா..?

ரமோட்ஸ்வே மகிழ்ச்சியில் திகைத்தாள். அன்றே வருவதாகச் சொல்லி விட்டு, நல்ல உடையில் அவரது மாளிகைக்குக் கிளம்பி னாள்.

போவதற்கு முன் தன் நண்பர் மட்கோனிக்கு போன் செய்தாள்.

பணக்கார வாடிக்கையாளர்கள் வேண்டும் என்று சொன்னீர்கள் அல்லவா.. இப்போது பட்டேல் என்னை அழைத்திருக்கிறார்..

மட்கோனி மூச்சை நன்றாக வாங்கி விட்டார்.

அவர் மிகப் பெரிய பணக்காரர். நான்கு மெர்ஸிடிஸ் பென்ஸ் வைத்திருக்கிறார். அதில் மூன்று நல்ல கண்டிஷனில் உள்ளது. ஒன்றுதான் தொந்தரவு கொடுத்து விட்டது. அதற்கு புதிய பாகங்கள் வாங்கவே பல நாட்கள் ஆகி விட்டது..

பட்டேல் வீட்டு வெளி வாயில் கதவுகளைச் சாதாரணமாக திறக்க முடியாது. மற்ற வீடுகளில் செய்வது போல காரை கேட் அருகில் நிறுத்தி ஹார்ன் அடிக்கவும் முடியாது. அந்த வீட்டின் முகப்பிலுள்ள ஒரு மணியை அழுத்தினால் சின்ன ஒலிபெருக்கி மூலம் குரல் வரும்..

ஆம்.. இது பட்டேல் வீடு. உங்களுக்கு என்ன வேண்டும்?

ரமோட்ஸ்வே - சொந்த விஷயம்..

கரகரவென ஒலிபெருக்கியில் ஓசை..

சொந்த விஷயம்..? எது பற்றி? இதற்கு, இவள் பதில் சொல்வதற்குமுன், மறுபடியும் கரகர சத்தம் வர, கதவு மெல்லத் திறந்தது.



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 9

------------------------------------------------------------

ர மோட்ஸ்வே, தன்னுடைய காரை சற்று தள்ளியே நிறுத்தியிருந்தாள். அதனால் உள்ளே நடந்து சென்றாள். அங்கு ஒரு விசாலமான முற்றம் செடிகளால் மூடப்பட்டு நிழலாக இருந்தது. அந்த முற்றத்தின் முடிவில் சற்று தூரத்தில் வீட்டின் வாயிற்கதவு - இருபக்கமும் உயர்ந்த தூண்களும், நிறைய செடிகளும் கொண்டதாக இருந்தது. பட்டேல், வாசலில் தோன்றி, உள்ளே வரும்படி தன் கைத்தடியினால் சைகை செய்தார்.

பட்டேலை அவள் ஏற்கெனவே பார்த்திருக்கிறாள். அவருடைய ஒரு கால், செயற்கைக் கால் என்பதும் அவளுக்குத் தெரியும். இத்தனை அருகில் பார்க்கும்போது ரொம்ப சிறிய உருவமாகத் தோன்றினார். ரமோட்ஸ்வே ஒன்றும் அதிக உயரமில்லாவிட்டாலும் கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்ட உயரமும், அதற்கேற்ப நல்ல தாராளமாகவுமே இருந்தாள். பட்டேல் அவளை அண்ணாந்து

பார்த்தபடி கை கொடுத்து, உள்ளே வரும்படி அழைத்தார்.

ரமோட்ஸ்வேயை சோபாவில் அமரும்படிச் சொன்னார்.

நான் சொல்ல வந்ததை நேரடியாகச் சொல்கிறேன். சும்மா அங்குமிங்கும் சுற்றி வளைப்பதில் பயனில்லை; இல்லையா..?

ரமோட்ஸ்வேயின் அனுமதிக்காக அவர், அவளை நோக்க.. அவள் மெதுவாகத் தலையசைத்தாள்.

நான் ஒரு குடும்பஸ்தன். என் குடும்பத்தினர் எல்லோரும் இங்கேயே, என்னுடனேயே வசிக்கிறார்கள்.. என் மகனைத் தவிர. அவன் டர்பனில் பல் மருத்துவராக இருக்கிறான். என்னுடைய பெரிய பெண்கள் இருவரும் மணமாகி, அவர்கள் கணவர்களுடன் இங்கேயே வசிக்கிறார்கள். இது மிகவும் மகிழ்ச்சியான விஷயம்தான். என்னுடைய பதினாறே வயதான மகள் நந்திரா, மாரு-அ-புலாவில் படிக்கிறாள். மிக நன்றாகவே படிக்கிறாள். ஆனால்.. - பேச்சை நிறுத்திவிட்டு, ரமோட்ஸ்வேயை ஊடுருவிப் பார்த்தவர், பிறகு சொன்னார்..

உங்களுக்குச் சிறு பெண்களைப் பற்றி நன்றாகத் தெரியும் இல்லையா? இந்த நாகரிகமான உலகில், அவர்கள் எப்படியெல்லாம் இருக்கிறார்கள் என்று தெரிந்திருக்குமென நினைக்கிறேன்..

ரமோட்ஸ்வே தோளைக் குலுக்கியபடி, அவர்கள் எப்போதுமே பெற்றவர்களுக்குப் பிரச்னையாகவே இருக்கிறார்கள். இந்தக் குழந்தைகளுக்காகக் கண்ணீர் விட்டு, வேதனைப்படும் பல பெற்றோரை நான் பார்த்திருக்கிறேன்.. என்றாள்.

பட்டேல், தனது கைத்தடியை உயர்த்தி, செயற்கைக் கால் மீது வேகமாக அடித்தார். அந்த சத்தம் காலியான தகரத்தின் சத்தம்போல ஒலித்தது.

ரமோட்ஸ்வே அவரை வெறித்துப் பார்த்தாள். எனக்கும் அந்தக் கவலைதான். அதுதான்

இங்கேயும் நடக்கிறது. ஆனால், என் குடும்பத்தில் அது மாதிரி நடக்க நான் ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன்..

என்ன..?

யாரோ ஒரு பையன்..

பட்டேல் கசப்புடன் வார்த்தையைக் கடித்துத் துப்பினார்.

அவளுடன் நேரில் பேசி, அந்த இளைஞன் யார் என்று கேட்டால் சொல்ல மாட்டாளா..?

- மெதுவாகக் கேட்டாள் ரமோட்ஸ்வே.

பட்டேல் கைத்தடியை எடுத்து, தன்னுடைய செயற்கைக் காலை தட்டிக் காண்பித்தார்.

அது ஒருபோதும் முடியாது.. என்று குரலை உயர்த்தினார். நானும் மூன்று, நான்கு வாரமாக அவளைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.. திமிராக, பதில் சொல்லாமல் இருக்கிறாள்..

ரமோட்ஸ்வே தலை குனிந்து, பட்டேலின் பார்வை தன்னை ஊடுருவுவதை உணர்ந்தவாறு, தன் கால்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பள்ளி செல்லும் இளைஞர்கள் பற்றி, குறிப்பாக மாரு-அ-புலா போன்ற பள்ளியில், வெளிநாட்டு இளைஞர்களும் அமெரிக்க தூதரகத்தைச் சேர்ந்த இளைஞர்களும் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று அவருக்குத் தெரியுமா? இந்தியாவைச் சேர்ந்த தந்தைமார்கள், தங்கள் குழந்தைகளைக் கலந்து யோசிக்காமலேயே அவர்களின் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்வார்கள் எனக் கேள்விப்பட்டிருக்கிறாள். இங்கு பட்டேலும் அப்படியேதான் எண்ணுவது மட்டுமின்றி, ரமோட்ஸ்வேயும் தன் எண்ணத்துக்கு அனுசரித்துப் போவாள் என்று நினைத்தார் போல..

ஏதாவது சட்ட விரோதமான செயல் செய்யச் சொன்னால் அல்லாது வாடிக்கையாளரை மறுத்துப் பேசக் கூடாது என்று அவள் தனது தொழில் நியாயத்தைக் கடைப்பிடித்தாள். இந்த ∴பார்முலா ஒழுங்காக வேலை செய்தது. ஆனால், பிறர் உதவியை நாடும்போது சில சமயங்களில் எது சரி, எது தவறு என்ற அவளுடைய எண்ணங்களை மாற்றிக் கொள்ளும்படி நேர்ந்திருக்கிறது.

பட்டேல் வழக்கும் அப்படித்தான் இருக்கும் என்று அவளுக்குத் தோன்றியது. அப்படி இல்லை என்றாலும் அவரது வழக்கை அவசரப்பட்டு ஒதுக்குவதற்குப் போதுமான காரணங்கள் இருப்பதாக அவளுக்குத் தோன்றவில்லை. இந்தியர்களின் வாழ்க்கை, கலாசாரம் இது பற்றி ஒன்றுமே அறியாத அவள், கவலைப்படும் ஒரு இந்தியத் தந்தையை எப்படிக் குறை கூற முடியும்? அவளுக்கு, தங்கக் கூண்டில் அடைத்து வைக்க நினைக்கும் தந்தையை உடைய அந்தப் பெண்ணின் மீது இரக்கமும் வந்தது. ரமோட்ஸ்வேயின் தந்தை, அவள் செய்யும் எதையுமே தடை செய்ததில்லை. அவர், அவளை முழுக்கவும் நம்பினார்.

பட்டேலை நிமிர்ந்து பார்த்தாள். அவர், அவளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டு, தனது கைத்தடியினால் தரையை லேசாகத் தட்டிக் கொண்டிருந் தார்.

நான், உங்களுக்காக அதைக் கண்டுபிடிக்கிறேன். ஆனால், எனக்கு ஒரு குழந்தையைக் கண்காணிப்பது என்பது பிடிக்காத விஷயம்..

ஆனால், குழந்தைகளைக் கண்டிப்பாக கண்காணிக்க வேண்டும். இல்லாவிட்டால் என்ன நேரிடும்? தெரியும் இல்லையா?

அவர்கள் வாழ்க்கையை அவர்களே தேர்ந்தெடுக்கும் காலம் வரும்போது, அவர்களை விட்டு விட வேண்டியதுதான்..

அது அபத்தமானது!

- பட்டேல் சீறினார்.

அது நாகரிக வளர்ச்சியின் முட்டாள்தனம். நான் என் தந்தையின் கடையில் வேலை செய்தபோது நான் செய்த தவறுக்காக அவர் என்னை அடித்தார். அப்போது எனக்கு வயது 22. அது எனக்குத் தகுந்த தண்டனைதான் என்று நான் நினைத்தேன்.. இப்போதுள்ள நாகரிகம் மாதிரி இல்லை அப்போது..

ரமோட்ஸ்வே எழுந்தாள்.

நான் இந்தக் காலத்திய பெண். அதனால் நமக்குள் கருத்து வேறுபாடுகள் இருக்கும். இதற்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. நீங்கள் சொல்வதைச் செய்ய நான் சம்மதிக்கிறேன். அந்தப் பெண்ணுடைய போட்டோ இருந்தால் காட்டுங்கள். நானேதான் அவளைக் கண்காணிக்கப் போகிறேன். அதற்கு போட்டோ இருந்தால் உபயோகமாக இருக்கும்.

பட்டேல் எழுந்து, தனது காலை சரிசெய்து கொண்டார். புகைப்படத்துக்கே அவசியமில்லை. நானே அவளை உங்கள் முன் நிறுத்துகிறேன். நீங்களே பார்க்கலாம்..

ரமோட்ஸ்வே கைகளைத் தூக்கி, ஆட்சேபித்தாள்.

அப்போது அவளுக்கு நான் யாரென்று தெரிந்துவிடும். அவளுக்குத் தெரியாமல்தான் கண்காணிக்க வேண்டும்..

ஆ.. நல்ல யோசனைதான். உங்களைப் போன்ற துப்பறிபவர்கள் கூர்மையான புத்தியுள்ளவர்கள்..

ரமோட்ஸ்வே, வீட்டை விட்டு வெளியேறும்போது நினைத்தாள்..

அவருக்கு நாலு குழந்தைகள் இருக்கின்றன. எனக்கு ஒன்றுகூட இல்லை. அவர் நல்ல தந்தை இல்லை. ஏனெனில், குழந்தைகளை முரட்டுத்தனமாக நேசிக்கிறார். அவர்கள் தனக்கே

சொந்தமாக இருக்க வேண்டுமென விரும்புகிறார். அப்படி இருக்க முடியாது. அவர்களை, அவர்கள் வழியில் விடுவதுதான் சரி.

அப்போது அவளது சிந்தனை பின்னோக்கிச் சென்றது. ஏதோ சாக்கு சொல்லிவிட்டு தன்னிடமிருந்து பிரிந்து போன நோட் இல்லாமலேயே, குறைப் பிரசவமான மெல்லிய மிருதுவான தேகத்தையுடைய குழந்தை.. தொட்டாலே உடைந்து விடுவதைப் போன்ற அந்த சிறிய பொம்மையை மண்ணில் வைத்து, வானத்தையும் கடவுளையும் நோக்கி ஏதோ சொல்ல நினைத்து, சொல்ல முடியாமல் உதடு துடித்து, விம்மலில் தொண்டை அடைக்க நின்றதை ஒரு கணம் நினைத்தாள்.

ஒருவரைக் கண்காணிப்பது, பின்தொடர்வது என்பதெல்லாம் சுலபமான விஷயமில்லை. அவர்கள் எப்போது என்னென்ன செய்கிறார்கள் என்பதைத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். இதற்காக வீட்டு வாசல்களிலும், ஆபீஸ் வாசல்களிலும் மணிக்கணக்கில் காத்திருக்க வேண்டியிருக்கும். நந்திரா மாலை வரையில் பள்ளியில்தான் இருப்பாள் என்பதால் அதுவரை ரமோட்ஸ்வே, தனது ஆபீஸ் வேலைகளைச் சுதந்திரமாகப் பார்க்கலாம்.. பள்ளி மூன்று மணிக்கு முடியும் வரையில். அதற்குப் பிறகுதான் அவளைத் தொடர்ந்து எங்கு செல்கிறாள் என்பதைப் பார்க்கவேண்டும்.

பட்டேலை பார்த்த மறுநாளே, ரமோட்ஸ்வே தன்னுடைய வெள்ளை காரை, பள்ளியில் கார் நிறுத்தும் இடத்தில், கடைசி மணி அடிக்கும் முன்பே கொண்டு நிறுத்தி விட்டாள். குழந்தைகள் புற்றீசல் போல வெளிவரத் துவங்கினார்கள். மூன்று மணி இருபது நிமிடங்கள் கழித்து, நந்திரா ஒரு கையில் புத்தகப் பையும், இன்னொரு கையில் புத்தகமுமாக தனியாக வெளியே வந்தாள். காரில் இருந்தபடியே ரமோட்ஸ்வேயினால் நந்திராவை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவள் மிக அழகாக - கவர்ச்சியாக இருந்தாள். சிறுமியாக இல்லாமல் ஒரு இளம் யுவதியாக பத்தொன்பது, இருபது வயது மதிக்கத்தக்கவளாக இருந்தாள்.

நடைபாதையில் நடந்து சென்று, பெற்றோர் வந்து அழைத்துச் செல்வதற்காகக் காத்திருந்த ஒரு பெண்ணுடன் மரத்தடியில் நின்று பேசினாள். சில நிமிடங்கள் பேசி விட்டு, பள்ளி கேட்டை நோக்கி நடந்தாள்.

ரமோட்ஸ்வே காரிலிருந்து இறங்கி, நந்திரா சாலைக்குச் சென்ற பிறகு மெதுவாக அவளைப் பின்தொடர்ந்தாள். நிறைய மனிதர்கள் நடமாடிக் கொண்டிருந்தனர். ஆதலால் ரமோட்ஸ்வே

தனியாகத் தென்படவில்லை. குளிர் கால மாலை வேளையில் நடப்பது மிக இன்பமாக இருந்தது. இன்னொரு மாதம் போனால், வெயில் கடுமையாக இருக்கும். அப்போது அவள் இப்படி தயங்கித் தயங்கி நடந்து செல்வது எல்லோருக்கும் விநோதமாகத் தோன்றும்.

அந்தப் பெண்ணைத் தொடர்ந்து தெரு முனை வரையில் சென்றாள். அவள், தன்னுடைய வீட்டுக்கு நேராகச் செல்லவில்லை. அதற்கு எதிர் திசையில்தான் நடந்து சென்றாள். அவள் ஊருக்குள்ளும் போகவில்லை. யாரையோ பார்ப்பதற்காக, அந்த நபரைத் தேடித்தான் சென்று கொண்டிருந்தாள். ரமோட்ஸ்வேக்கு மனது நிறைவாக இருந்தது. அவள் செய்ய வேண்டியதெல்லாம், அந்த நபரின் வீட்டைக் கண்டுபிடிப்பது மட்டும்தான். அது தெரிந்து விட்டால், அந்த வீட்டின் சொந்தக்காரன், அவர் பையன் எல்லோரும் தெரிந்து விடுவார்கள். இன்றே கூட, பட்டேல் வீட்டுக்குச் சென்று, அந்தப் பையன் யார் என்பதைக் கூறிவிட முடியும் என்று தோன்றியது.

நந்திரா இன்னொரு இடத்தில் திரும்பினாள். ரமோட்ஸ்வே, அவளைத் தொடர்வதைச் சற்று நிறுத்தினாள்.

க்ளோவிஸ் ஆண்டர்ஸன் எழுதிய, தனியாகத் துப்பறிவதில் உள்ள விதிமுறைகள் என்ற புத்தகத்தைப் பின்பற்றுபவள் ரமோட்ஸ்வே. அதில் எழுதப்பட்டிருந்த உன்னுடைய ஆளுக்கு நீண்ட இடைவெளி கொடு. அதனால், அவ்வப்போது தவற விட்டாலும் பரவாயில்லை. திரும்பவும் கண்டுபிடித்துக் கொள்ளலாம். சில சமயம் கண்ணில் படாமல் இருப்பதே, நேருக்கு நேர் எரிச்சலுடன் பார்ப்பதைக் காட்டிலும் சிறந்தது - இந்த வரிகளை அவள் மறக்கவில்லை.

சற்று நேரம் கழித்து, ரமோட்ஸ்வே அந்தத் திருப்பத்தில் திரும்பினாள். சற்று தொலைவில் நந்திரா போய்க் கொண்டிருப்பாள் என்று எண்ணியவளுக்கு, தெரு காலியாக இருந்தது அதிசயமாக இருந்தது..

அ து மிகவும் அமைதியான தெரு. சாலையின் இரு பக்கங்களிலும் வீடுகள்தான் இருந்தன. எல்லா வீடுகளிலும் வீட்டின் முன் பக்கக் கதவுக்குப் போகும் நடைபாதை இருந்தது. நந்திரா, அவள் கண்ணிலிருந்து மறைந்து ஓரிரு நிமிடங்கள்தான் ஆகியிருக்கும். ஏதேனும் வீட்டுக்குள் சென்று மறையக்கூட அவகாசம் இல்லை. அவள் இன்னும் தள்ளிப் போயிருக்க வாய்ப்பே இல்லை. வலது பக்கமும் இடது பக்கமும் உள்ள முதல் வீடுகளில் விசாரித்துப் பார்த்தால் தெரிந்துவிடும்.

சில விநாடிகள் யோசித்தபடி நின்றாள் ரமோட்ஸ்வே. மீண்டும் வந்த வழியே திரும்பி வேகமாக நடந்து, தனது சிறிய வெள்ளை கார் நிறுத்தியிருந்த இடத்தை அடைந்து, காரில் ஏறி, மறுபடியும் நந்திராவைத் தொலைத்த வீதிக்கே வந்தாள். வலது பக்க ஓரமாக காரை நிறுத்திவிட்டு முதல் வீட்டு நடைபாதையில் நடந்து, கதவுகளைத் தட்டினாள். வீட்டின் உள்ளிருந்து நாய் ஒன்று பெரிதாகக் குரைத்தது. திரும்பவும் தட்டினாள்.

பேசாமல் இரு பைஸன்.. எனக்குத் தெரியும் - யாரோ ஒரு பெண்மணி, நாயை அடக்கியபடியே கதவைத் திறந்தாள். அவள் போட்ஸ்வானாவைச் சேர்ந்தவள் இல்லை என்று ரமோட்ஸ்வேக்குத் தெரிந்தது. அவளது நிறத்தையும் உடையையும் பார்த்தால் அநேகமாக கானாவைச் சேர்ந்தவளாக இருக்கக்கூடும் என்று நினைத்தாள். கானாவைச் சேர்ந்தவர்களை ரமோட்ஸ்வேக்கு மிகவும் பிடிக்கும். நகைச்சுவை உணர்வுமிக்கவர்கள். எப்போதுமே நல்ல மகிழ்ச்சியான மனநிலையில் இருப்பவர்கள்.

ஹலோ மேடம்.. உங்களுக்குத் தொந்தரவு கொடுப்ப தற்கு மன்னியுங்கள். நான் ஸைபோ என்கிற பையனைத் தேடி வந்தேன்...

அந்தப் பெண்மணி தீவிரமாக யோசித்தபடி கூறினாள்.. அப்படி யாரும் இங்கு இல்லையே..

ரமோட்ஸ்வே தலையசைத்தாள்.

இந்த வீடு என்று நிச்சயமாக நான் நினைத்தேன். நான் செகண்டரி ஸ்கூல் டீச்சர். ஒன்பதாவது வகுப்பு படிக்கும் பையன்களுக்கு ஒரு செய்தி தர வேண்டும். இதுதான் அவன் வீடு என்று..

அந்தப் பெண்மணி புன்னகைத்தாள்.. எனக்கு இரண்டு பெண்கள் மட்டும்தான். ஒரு பையனைக் கண்டு பிடித்துத் தருகிறீர்களா?

ஓ.. என்ன செய்வது..

ரமோட்ஸ்வே அலுப்புடன் கூறினாள்.. ஒருவேளை எதிர்வீடாக இருக்குமோ?

அந்தப் பெண்மணி இல்லையெனத் தலையசைத்தாள்.

அவர்கள் உகாண்டாவைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு ஒரு பையன் இருக்கிறான்; ஆனால், நாலு அல்லது ஐந்து வயதில்..

ரமோட்ஸ்வே அவளிடம் மன்னிப்பு கேட்டுவிட்டுத் திரும்பினாள்.

முதல் நாளன்றே நந்திராவைத் தவற விட்டுவிட்டோம்.. இல்லை, வேண்டுமென்றே அந்தப் பெண்மணி நம்மிடம் பாய்ச்சுக் காட்டுகிறாளோ? ஒருவேளை அவளைப் பின்தொடர்வது, அவளுக்குத் தெரிந்திருக்குமோ..

நிச்சயமாகத் தெரிந்திருக்க முடியாது. தனது துரதிருஷ்டம்தான் அவள் போனது. நாளைக்கு சற்று கவனமாக இருக்க வேண்டும். க்ளோவிஸ் ஆண்டர்ஸன் அறிவுரை உதவாது.. அவளை நெருங்கித் தொடர வேண்டும் என்று தீர்மானித்தாள்.

இரவு எட்டு மணிக்கு பட்டேல் போன் செய்தார்.

எனக்கு சொல்ல ஏதாவது தகவல் கிடைத்ததா?

துரதிருஷ்டவசமாக நந்திரா எங்கே போனாள் என்று கண்டுபிடிக்க முடியவில்லை.. மறுநாள் கண்டுபிடிக்க முடியும் என்று ரமோட்ஸ்வே கூறினாள்.

ஒன்றும் பிரயோஜனமில்லை. நிலைமை நன்றாக இல்லை. உனக்குச் சொல்ல, என்னிடம் சமாசாரம் இருக் கிறது. பள்ளிவிட்டு மூன்று மணி நேரம் கழித்து அவள் சிநேகிதியின் வீட்டில் இருந்ததாகச் சொல்லிக் கொண்டு வந்தாள். எந்த சிநேகிதி? என்று கேட்டதற்கு, உனக்கு அவளைத் தெரியாது என்று கூறினாள். அப்போது என் மனைவி, அவளுடைய மேஜையிலிருந்து, துண்டுக் காகிதத் தைக் காட்டினாள். நாளை சந்திப்போம் - ஜாக் என்று எழுதியிருந்தது. யார் அந்த ஜாக்? எவன் அவன்? அது ஒரு பெண்ணின் பெயரா... நான் உன்னைக் கேட்கிறேன்..

இல்லை.. பையனுடைய பெயர் மாதிரிதான் தோன்றுகிறது.

பார்த்தாயா..?

அவரது குரலில், அவருடைய சந்தேகத்துக்கு விடை கிடைத்துவிட்ட தொனி தெரிந்தது.

யார் அந்த ஜாக் என்பதை, நாம் கண்டுபிடிக்க வேண்டும். அவன் எங்கு வசிக்கிறான்.. எப்பேர்ப்பட்டவன் என்பதை எல்லாம் நீ எனக்கு சொல்ல வேண்டும்.

ரமோட்ஸ்வே ஒரு கோப்பை தேநீரை அருந்திவிட்டு வழக்கத்துக்கு மாறாக சீக்கிரம் படுக்கச் சென்றாள். பலவிதத்திலும் அன்றைய நாள் அவளுக்கு அதிருப்தி அளிப்பதாகவே இருந்தது. அதற்குச் சிகரம் வைத்தாற் போல பட்டேலின் எரிச்சலான போன் கால் வேறு.

மறுநாள் மாலை பள்ளி கார் நிறுத்துமிடத்துக்கு செல்லும்போது சற்று தாமதமாகிவிட்டது. ஒருவேளை நந்திரா சென்றிருப்பாளோ என்று கூட ரமோட்ஸ்வே நினைத்தபோது, அவள் ஒரு பெண்ணுடன் பேசியபடியே வெளியே வந்தாள். இருவரும் நடந்து, பள்ளி கேட் அருகே செல்வதை ரமோட்ஸ்வே பார்த்தாள். சிறு பெண்கள் தங்கள் சிநேகிதிகளுடன் தீவிரமாகப் பேசுவது ஒரு தனித்தன்மை வாய்ந்தது. அவர்களது பேச்சைக் கேட்க முடிந்தால், எவ்வளவோ சிக்கல்கள்

நீங்கிவிடும் என்று ரமோட்ஸ்வே நினைத்தாள். பல புதிர்கள் விடுபட வாய்ப்பு உண்டு. பெண்கள் தங்கள் சிநேகிதன் களைப் பற்றி ரகசியமாக ஆனால், நிறையவே பேசுவார்கள். அந்த இரு பெண்களும் அப்படித்தான் பேசுவதுபோல அவளுக்குத் தோன்றியது.

உடனே ஒரு நீல நிற கார், அவர்கள் முன் வந்து நின்றது. கார் டிரைவர் குனிந்து முன் கதவைத் திறந்து விடுவதை ரமோட்ஸ்வே பார்த்தாள். நந்திரா ஏற, அந்த இன்னொரு பெண், பின் ஸீட்டில் ஏறிக் கொண்டாள். நீல நிற கார் கிளம்பியவுடன், ரமோட்ஸ்வே தன் வெள்ளை காரை, கார் நிறுத்துமிடத்திலிருந்து எடுத்தாள். நீல நிற காரின் பின்னால் சற்று இடைவெளி விட்டுத் தொடர்ந் தாள். ஆனால், அவர்கள் கண் பார்வையிலிருந்து மறைவது போலத் தோன்றினால், நெருங்கிப் போய் பிடிக்கலாம் என்றும் எண்ணினாள். நேற்று மாதிரி ஏமாந்து, பட்சியைத் தப்பவிட்டு விடக்கூடாது என்று தீர்மானித்தாள்.

நீல நிற கார் நிதானமாகவே சென்றது. அதைத் தொடர்வது ஒன்றும் ரமோட்ஸ்வேக்கு சிரமமாகவே இல்லை. முதலில் சன் ஹோட்டலைத் தாண்டி, ஸ்டேடியத்தைச் சுற்றி சென்றது. அதன் பின் டவுன் பக்கம் திரும்பி ஹாஸ்பிடல், ஆங்கிலிகன் சர்ச் இவற்றைத் தாண்டி, சூப்பர் மார்க்கெட் பக்கம் சென்றது.

இதுமாதிரி சிறு பெண்களும், ஆண்களும் பள்ளி முடிந்தவுடன் போட்ஸ்வானா புத்தகக் கடைகள் போல எங்கேயாவது கூடி கலாய்ப்பது வழக்கம்தான். அவர்கள் அங்கே அரட்டை அடிப்பது, ஜோக்ஸ் பரிமாறிக் கொள்வது.. இப்படி பொருட்கள் வாங்குவதைத் தவிர, மற்ற எல்லா வற்றையும் செய்வார்கள். ஒருவேளை நந்திரா, அந்த ஜாக் பையனை இங்கே சந்திப்பதாக இருக்கிறாளோ என்னவோ..

நீல நிற கார், பிரசிடென்ட் ஹோட்டலின் வாகன நிறுத்துமிடத்தில் நிற்க, பெண்கள் இருவரும் இறங்கினார்கள். ரமோட்ஸ்வே நிறைய கார்களைக் கடந்து, தன் காரை நிறுத்தினாள். இந்த இரு பெண் களுடன் கூட ஒரு பெண்மணியும் காரிலிருந்து இறங்கினாள். ஒருவேளை, நந்திராவின் சிநேகிதியின் அம்மாவாக இருக்கக்கூடும். அந்தப் பெண்மணி, இவர்களிடம் ஏதோ சொல்லிவிட்டு, இரும்பு சாமான்கள் கடையை நோக்கி நடந்தாள்.

நந்திராவும் அவள் சிநேகிதியும் பிரசிடென்ட் ஹோட்டல் வாயிலைத் தாண்டி, போஸ்ட் ஆபீஸ் பக்கம் சென்றனர். ரமோட்ஸ்வே தற்செயலாகச் செல்வதுபோல அவர்களைத் தொடர்ந்தாள். வழியில் டி-ஷர்ட்களை ஒரு பெண் விற்றுக் கொண்டிருந்தாள்.

இதில் ஒன்று வாங்கிப் பாருங்கள். ரொம்ப நல்ல சட்டைகள். துளிக்கூட சாயம் போகாது. இதோ பாருங்கள். நான் போட்டிருக்கும் இந்த சட்டை பத்து இருபது முறை சலவை செய்யப்பட்டது. சாயம் போனதுபோல இருக்கிறதா.. பாருங்கள்.

ரமோட்ஸ்வே அந்த சட்டைகளைப் பார்த்தாள். ஓரக் கண்ணால் அந்தப் பெண்களைப் பார்த்தாள். ஒரு செருப்புக் கடையின் முன்னே, நிதானமாக நின்று பார்த்துக் கொண்டிருந்தனர்.

என்னுடைய அளவுக்கு உன்னிடம் சட்டை இருக்க வாய்ப்பில்லை. ஏனென்றால், எனக்கு மிகப் பெரிய சட்டை தேவை..

அங்கு தொங்க விடப்பட்டிருந்த சட்டைகளைத் தேடிவிட்டு, அந்தப் பெண் கூறினாள்:

ஆமாம். நீங்கள் சொல்வது சரிதான். உங்களுக்கு மிகப் பெரிய சட்டைதான் தேவை..

ரமோட்ஸ்வே புன்னகைத்து விட்டு, நடையைத் தொடர்ந் தாள். செருப்புக் கடையிலிருந்து அந்தப் பெண்கள் விலகி, புத்தகக் கடையின் முன் சென்றனர்.

ரமோட்ஸ்வே நினைத்தது சரிதான். சும்மாவாவது சுற்றத்தான் அவர்கள் வந்திருக்கிறார்கள்.

போட்ஸ்வானா புத்தகக் கடையில் கூட்டமே இல்லை. வார இதழ் பகுதியில் நான்கு பேர் பத்திரிகைகளைப் புரட்டிக் கொண்டிருந்தனர். அங்கு வேலை செய்யும் ஆட்கள் மேஜை மீது சாய்ந்தபடி வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டு இருந்தனர். ஒன்றிரண்டு பேர் புத்தக அலமாரியை ஆராய்ந்து கொண்டிருந்தனர். ஈக்கள் கூட மந்தமாகப் பறந்தன.

அந்த இரு பெண்களும் புத்தகக் கடையின் கோடியில், ஸெட்ஸ்வானா புத்தகங்கள் உள்ள அலமாரியை நோட்டம் விட்டபடி இருந்ததை ரமோட்ஸ்வே பார்த்தாள். பள்ளி புத்தகங்கள், பைபிள் புத்தகங்கள் உள்ள அந்த பகுதியிலிருந்து அவர்கள் புத்தகம் வாங்குவது சாத்தியமே இல்லை.

நிச்சயம் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

ரமோட்ஸ்வே தீர்மானத்துடன் ஆப்பிரிக்க புத்தகங்கள் நிறைந்த ஒரு பகுதிக்குச் சென்று, புத்தகம் ஒன்றை உருவினாள். தென் ஆப்பிரிக்காவின் பாம்பு இனம் என்ற புத்தகம் அது. நிறைய படங் களுடன் இருந்தது. புத்தகம் கொஞ்சம் சுவாரஸ்ய மாக இருந்ததனால், மேலோட்டமாக அதைப் படித்தபடி, அந்த பெண்களையும் அவ்வப்போது அவள் பார்த்தாள். இருவரும் தங்களை மறந்த லயிப்பில் பேசிக் கொண்டிருந்தனர். அதில் ஒருத்தி சிரித்துக் கொண்டிருந்தாள்.

ஏதாவது பையனைப் பற்றிய ஜோக்காக இருக்கும் என்று ரமோட்ஸ்வே எண்ணினாள். இப்போது நன்றாகச் சிரித்துக் கொள்ளட்டும்.. சீக்கிரத்திலேயே, ஆண்களைப் பற்றிய எதுவுமே மகிழ்ச்சி தராது என்பதைப் புரிந்து கொள்வார்கள். சில ஆண்டு களுக்குப் பிறகு கண்ணீர்தான் மிஞ்சும்.. சந்தோஷம் இருக்கப் போவதில்லை என்று எண்ணினாள்.

திரும்பவும் ஆப்பிரிக்க பாம்புகள் பற்றிய புத்தகத்தைப் புரட்டத் தொடங்கினாள். விதவிதமான பாம்புகள்.. அவற்றின் தன்மைகள்.. பாம்புகள் பற்றி வழங்கப்படும் கட்டுக்கதைகள் மிகவும் சுவையாக இருந்ததனால், அவள் அந்தப் பெண்களை கவனிக்கத் தவறிவிட்டாள்.

அய்யய்யோ.. எங்கே போய் விட்டார்கள்.. எங்கே?

ரமோட்ஸ்வே ஒருவிதப் பதற்றத்துடன் பிரசிடென்ட் ஹோட்டல் பக்கம் நடந்து சென்றாள். ஒருவேளை அந்தப் பெண்கள், காரில் அம்மாவுடன் சென்றிருந்தால் பிரச்னை இல்லை. கார் நிறுத்தும் இடத்தை அடைந்தபோது, அந்த நீல நிற கார், இன்னொரு பாதை வழியாக அந்த அம்மாவை மட்டும் ஏற்றிச் சென்றதைப் பார்த்தாள்.

அப்படியானால், அந்தப் பெண்கள் அங்கேயே தான் இருக்க வேண்டும். திரும்பவும் பிரசிடென்ட் ஹோட்டல் பக்கம் வந்து சுற்றும் முற்றும் பார்த்தாள். க்ளோவிஸ் ஆண்டர்ஸன் அவரது புத்தகத்தில் கூறியபடி ஒவ்வொரு கூட்டத்தில் உள்ளவர்களையும், ஒவ்வொரு கடையிலிருந்து வருபவர்களையும் உன்னிப்பாகப் பார்த்தாள். அந்தப் பெண்களைக் காணவே இல்லை!

டி-ஷர்ட்டுகளை விற்றுக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைப் பார்த்தவள், அவளை நெருங்கினாள்.

இந்த மாதிரி இடத்தில் இருப்பதனால் இங்கு நடப்பது எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு தானே இருப்பாய்..

அந்தப் பெண் சிரித்தாள்.

நான் எல்லாவற்றையும் எல்லாரையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன்.

புத்தகக் கடையிலிருந்து இரண்டு பெண்கள் வெளியேறுவதைப் பார்த்தாயா?

ரமோட்ஸ்வே அந்தப் பெண்மணியைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே சொன்னாள்: அதில் ஒருத்தி இந்தியப் பெண். இன்னொருத்தி ஆப்பிரிக்கப் பெண்.

பார்த்தேன். அவர்கள் தியேட்டர் பக்கம் சென்றார்கள். அப்புறம் எங்கேயோ போய்விட்டார்கள். எங்கே போனார்கள் என்பதை நான் கவனிக்கவில்லை.

அவளது பதிலைக் கேட்டு, ரமோட்ஸ்வே சிரித்தாள்.

நீ ஒரு துப்பறிபவளாக இருந்திருக்க வேண்டும்..

உன்னைப் போல..

அந்தப் பெண்மணி சட்டெனக் கூறிய பதில், ரமோட்ஸ்வேயை வியப்பில் ஆழ்த்தியது.

அவள் பிரபலமானவள்தான். ஆனால், தெருவோரம் வியாபாரம் செய்பவளுக்குக் கூட, தன்னைத் தெரிந்து இருக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. தன் சட்டைப் பையில் இருந்து ஒரு பத்து புலா நோட்டை உருவி அந்தப் பெண்ணின் கையில் அழுத்தினாள்.

தாங்க்ஸ். இது உனக்கு நான் தரும் சம்பளம். திரும்பவும் நீ உதவி செய்வாய் என்று எதிர்பார்க்கிறேன்.

அந்தப் பெண்மணி மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள்.

நான் உனக்கு எல்லாவற்றையும் சொல்ல முடியும். இந்த இடத்தின் கண்களே நான்தான். உதாரணமாக, இன்று காலை, இங்கு யார், யாருடன் என்ன பேசிக் கொண்டு இருந்தார்கள் என்பது உனக்குத் தெரிய வேண்டுமா.. நான் சொன்னால், நீ திகைத்துப் போவாய்.

இருக்கட்டும்.. வேறு எப்போதாவது உன்னிடம் தொடர்பு கொள்கிறேன்.

இப்போது நந்திராவை தொடர்வது அவசியமில்லை. ரமோட்ஸ்வே, அந்த சினிமா தியேட்டருக்குச் சென்று, மாலை காட்சி எத்தனை மணிக்கு என்பதை விசாரித்தாள். அதைத்தான் அந்தப் பெண்ணும் செய்திருக்க வேண்டும். தன்னுடைய சிறிய காரில் வீடு திரும்பினாள். சீக்கிரமாக உணவை முடித்துக் கொண்டு, மாலைக் காட்சிக்குப் போகத் தயாரானாள். அவள் கிளம்புவதற்கு முன் பட்டேல் போன் செய்தார்.

என் பெண், பள்ளிப் பாடம் செய்வதற்கு ஒரு சிநேகிதியின் வீட்டுக்குப் போவதாகக் கூறுகிறாள். அது பொய் என்று எனக்குத் தெரியும்.

ஆமாம். எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. அவள் எங்கே போகிறாள் என்று எனக்குத் தெரியும். நான் அங்கே இருப்பேன். வீணாகக் கவலைப் படாதீர்கள்..

அந்த ஜாக் பையனைப் பார்க்கத்தானே போகிறாள்? - பட்டேல் கத்தினார்.. எனக்குத் தெரியும்..

அவனைச் சந்திக்கத்தான் அவள் செல்கிறாள்.

இருக்கலாம்.. ரமோட்ஸ்வே கூறினாள்.

உங்களை நீங்களே கஷ்டப்படுத்திக் கொள்ளாதீர்கள். நாளைக்கு நான் எல்லா விவரத்தையும் தருகிறேன்.

காலையில் சீக்கிரமாக தர வேண்டும். நான் எப்போதுமே ஆறு மணிக்கு எழுந்து விடுவேன்.

சினிமா தியேட்டருக்குள் ரமோட்ஸ்வே நுழையும் போது மிகச் சிலரே இருந்தனர். கடைசி வரிசைக்கு முந்தின வரிசையில் இருக்கையை அவள் தேர்ந்தெடுத் தாள். தியேட்டரின் நுழைவாயில் அவளது பார்வையின் நேர்கோட்டில் இருந்தது. வருபவர்கள் அந்த வாயில் வழியாகத்தான் வரவேண்டும். விளக்குகளை அணைத்த பிறகும் கூட, நந்திராவும் ஜாக்கும் வந்தால் அவளால் நன்றாக இனம் காண முடியும்.

அங்கு படம் பார்க்க வந்திருந்த பலரை ரமோட்ஸ்வே அறிவாள். அவளுக்கு மாமிசம் விற்கும் கசாப்புக் கடைக் காரர் இவள் வந்த சிறிது நேரத்துக்குப் பிறகு வந்தார். அவரும், அவர் மனைவியும் நட்புடன் கையை அசைத்தனர். பள்ளியின் ஆசிரியைகளில் ஒருவர், பிரசிடென்ட் ஹோட்டலில் ஏரோபிக்ஸ் என்னும் உடற்பயிற்சி வகுப்புகள் நடத்தும் பெண்மணி, கத்தோலிக்க பாதிரியார் ஒருவர், கரமுரவென பாப்கார்னைக் கொறித்தபடி முன் வரிசையில் இருந்தார்.

படத்தின் முதல் பகுதி ஆரம்பிக்க ஐந்து நிமிடங்கள் இருக்கும்போது நந்திரா வந்தாள்.

நந்திரா தனியாகத்தான் வந்திருந்தாள். கதவின் அருகில் நின்றபடி சுற்றும் முற்றும் பார்த்தாள். ரமோட்ஸ்வே, அவள் பார்வை தன் மீது படிவதை உணர்ந்து, கீழே தரையில் ஏதோ தேடுவது போல் பாசாங்கு செய்தாள். ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு நிமிர்ந்து பார்த்தபோது அவள், இவளையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ரமோட்ஸ்வே திரும்பவும் கீழே பார்த்தாள். அங்கு கிடந்த பழைய டிக்கெட் ஒன்றை எடுக்கும் சாக்கில் குனிந்தாள்.

நந்திரா, வேண்டுமென்றே நடந்து வந்து ரமோட்ஸ்வேயின் பக்கத்து இருக்கையில் அமர்ந்தாள்.

குட் ஈவ்னிங் மேடம்... இங்கே யாரேனும் உட்காரப் போகிறார்களா?

ரமோட்ஸ்வே வியப்புடன் அவளைப் பார்த்தாள்.

ஒருவரும் இல்லை. அது காலியாகத்தான் இருக்கிறது.. நந்திரா வசதியாக சாய்ந்து கொண்டாள்.

இந்தப் படத்தை ரொம்ப நாளாகவே பார்க்க நான் ஆசைப்பட்டேன்..

நல்லது.. ஆசைப்பட்டதைப் பார்ப்பது சந்தோஷமான விஷயம்தான்..

சற்று நேரம் மௌனம்.

அந்தப் பெண், அவளையே பார்த்துக் கொண்டிருப்பது ரமோட்ஸ்வேக்குக் கொஞ்சம் சங்கடமாக இருந்தது. க்ளோவிஸ் ஆண்டர்ஸன் இம்மாதிரியான சந்தர்ப்பத்தில் என்ன செய்திருப்பார்..?

அவர், இது பற்றி ஏதோ சொல்லியிருப்பது ரமோட்ஸ்வேயின் கவனத்துக்கு வந்தது. ஆனால், அது என்ன என்பதுதான் நினைவுக்கு வரவில்லை.

நான் உங்களை இன்று மத்தியானம் பார்த்தேன். மாரு-அ-புலா வாசலில்..

அ.. ஆமாம் - அவசரமாக பதிலளித்தாள் ரமோட்ஸ்வே..

நான் ஒருவருக்காக காத்திருந்தேன்..

அப்புறம் உங்களை புத்தகக் கடையிலும் பார்த்தேன்.. நீங்களும் ஏதோ புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள்.

- அவள் மடக்கினாள்.

ஆமாம். நான் ஏதாவது புத்தகம் வாங்கலாம் என்று நினைத்தேன்..

அப்புறம் நீங்கள் பாப்புஸேயிடம் - அதுதான் அந்த சட்டைகள் விற்றுக் கொண்டிருந்த பெண்மணி - அவளிடம் என்னைப் பற்றி விசாரித்தீர்கள்..

ரமோட்ஸ்வே தர்மசங்கடத்துடன் நெளிந்தாள். இனிமேல் பாப்புஸேயிடம் கவனமாக நடந்து கொள்ள வேண்டும் என்று மனதில் குறித்துக் கொண்டாள்.

நீங்கள் எதற்காக என்னைத் தொடர்கிறீர்கள்?

- அந்தப் பெண் நேரடியாக ரமோட்ஸ்வேயிடம் கேட்டு விட்டாள்.

ரமோட்ஸ்வேயின் மூளை துரிதகதியில் வேலை செய்தது.

இத்தனைக்குப் பிறகு மறுப்பதில் அர்த்தமேயில்லை. சங்கடமான நிலைமையையும் சரியாகப் பயன்படுத்தவேண்டும். ஆதலால் அவள், நந்திராவின் தந்தை படும் கவலையைப் பற்றியும், அதற்காக அவர் தன்னை அணுகியது பற்றியும் கூறிவிட்டாள்.

நீ ஒருவேளை பையன்களுடன் சுற்றுகிறாயோ என்று அவர் மிகவும் கவலைப்படுகிறார்.

நந்திராவின் முகத்தில் மலர்ச்சி தெரிந்தது.

அவர் கவலைப்படுவதற்குக் காரணம் அவரேதான். நான் பையன்களுடன் சுற்றுவதாக அவரே நினைத்துக் கொண்டிருக்கிறார். நான் அப்படியெல்லாம் இல்லை

அப்படியானால் அந்த ஜாக் யார்? யார் வீட்டுப் பையன்?

ரமோட்ஸ்வே ஆவலை அடக்கியபடி கேட்டாள்.

சில நிமிடங்கள் நந்திரா பதிலே பேசவில்லை. அவளுடைய தனி வாழ்க்கையில் இன்னொருவர் தலையிடுவதை அவள் என்றைக்குமே விரும்பியதில்லை. ஆனால், ரமோட்ஸ்வேயைப் பார்க்கும்போது அவளுக்கு நம்பலாம் எனத் தோன்றியதோ என்னவோ..

ஒருவேளை அவள் உபயோகமாகக்கூட இருக்கலாம் இல்லையா..

ஜாக் என்று ஒருவனுமே இல்லை. நானேதான் அப்படியருவனை சிருஷ்டி செய்தேன்.

அவள் வெற்றுப் பார்வை பார்த்தபடி சொன்னாள்.

எதற்காக?

அவர்கள் - அதாவது என் குடும்பத்தினர் எனக்கு ஆண் சிநேகிதர்கள் உண்டு என்று நம்புவதற்காக அப்படிச் செய்தேன். நானே ஒருவரைத் தேர்ந்தெடுப்பேன் என்று அவர்கள் நினைக்க வேண்டும். அவர்கள் எனக்குச் சரியானவன் என்று ஒருவனைத் தேர்ந்தெடுப்பதை நான் விரும்பவில்லை. உங்களுக்கு நான் சொல்வது புரிகிறதா?

ரமோட்ஸ்வே ஒரு நிமிடம், தனக்குள் அமிழ்ந்து போனாள். கட்டுக்காவலுடன் வளர்க்கப்படும் அந்தப் பெண்ணின் மீது அவளுக்குப் பரிதாபம்தான் ஏற்பட்டது. இந்த மாதிரி கட்டுப்படுத்தினால், மீறத்தான் தோன்றும். எனக்கு ஆண் நண்பர்கள் உண்டு என்று சொல்லத்தான் தோன்றும்.

அவள், நந்திராவின் கரத்தைப் பரிவுடன் பிடித்தாள்.

ஆம்.. உன் நிலைமை எனக்குப் புரிகிறது.

நந்திரா, தன்னுடைய கைக்கடிகாரத்தைத் திருகியபடி இருந்தாள்.

நீங்கள்.. இங்கே நாம் பேசியதைச் சொல்லிவிடுவீர்களா?

வேறு வழி?

இப்படி கேட்ட ரமோட்ஸ்வே தொடர்ந்து சொன்னாள்: நான் உன்னை, ஜாக் என்கிற இல்லாத பையனுடன் பார்த்ததாக எப்படிச் சொல்ல முடியும்?

நந்திரா பெருமூச்சுடன் சொன்னாள்:

எனக்குத் தேவைதான். இந்த மாதிரி முட்டாள்தனமாக விளையாடியதற்குப் பலன்..

..............

எனக்கு ஆண் நண்பர்கள் ஒருவரும் இல்லை என்று தெரிந்தால், எனக்கு கொஞ்சமாவது சுதந்திரம் கிடைக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா.. நான் செலவிடும் ஒவ்வொரு நிமிடத்தையும் எங்கே, எப்படி என்று இவர்களிடம் கூறாமல் நிம்மதியாக இருக்க முடியுமா?

ரமோட்ஸ்வே யோசனையுடன் சொன்னாள்:

நான், அவரிடம் சொல்லி வாதாடிப் பார்க்கிறேன்.. நான் சொல்வதைக் கேட்பாரோ என்னவோ.. இருந்தாலும் முயற்சி செய்கிறேன்.

தயவுசெய்து செய்யுங்கள்.. அப்படியே செய்யுங்கள்.

அவர்கள் இருவரும் சேர்ந்தே படத்தை ரசித்துப் பார்த்தனர். ரமோட்ஸ்வே, நந்திராவை தன் காரில் ஏற்றிச் சென்று, அவளது வீட்டுக் காம்பவுண்ட் சுவர் அருகே இறக்கிவிட்டாள். அந்தப் பெண், கார் போவதையே பார்த்தபடி சற்று நேரம் நின்றிருந்து விட்டு, அழைப்பு மணியை அழுத்தினாள்.

இது பட்டேல் வீடு. என்ன வேண்டும்?

உள்ளிருந்து ஸ்பீக்கர் ஒலித்தது.

சுதந்திரம்.. பல்லைக் கடித்தபடி முணுமுணுத்த நந்திரா, உரத்துச் சொன்னாள்..

நான்தான் அப்பா வந்திருக்கேன்.

ரமோட்ஸ்வே மறுநாள் விடிகாலையிலேயே பட்டேலுக்கு போன் செய்தாள். தொலைபேசியில் விளக்கிக் கொண்டிருப்பதை விட நேரிடச் சென்று வீட்டில் பேசுவதுதான் நல்லது என்றும் கூறினாள்.

ஏதோ கெட்ட செய்தி கூறப் போகிறீர்களா..? என்றவர் உரக்கக் கத்தினார்.. ஏதோ கெட்ட செய்திதான். கடவுளே.. என்ன கூறப்போகிறீர்கள்.. இப்போதே சொல்லுங்கள்..

ரமோட்ஸ்வே, மோசமான செய்தி அல்ல என்று அவருக்கு நம்பிக்கையூட்டினாள்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு பட்டேலின் ஆபீஸ் அறையில் அவள் இருந்தாள். பட்டேல் மிகுந்த கவலையுடன், ஓரிடத்தில் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தார்.

நான் ரொம்பவும் கவலையுடன் இருக்கிறேன். ஒரு தந்தையின் கவலைகள் உங்களுக்குப் புரியாது. தாயின் மன வருத்தம் மாதிரியானது இல்லை அது. தந்தைக்கு வேறு விதமான அக்கறை, மன உளைச்சல்கள் எல்லாம் உண்டு..

கவலைப்படவேண்டிய அவசியமே இல்லை என்பது போல ரமோட்ஸ்வே சிரித்தாள்.

நல்ல செய்திதான். அவளுக்கு ஆண் சிநேகிதர்கள் யாரும் கிடையாது..

அப்படியானால் அந்தக் காகிதத்தில் குறிப்பிடப்பட்ட ஜாக் யார்? அதுவும் கற்பனைதானா..?

ஆமாம். அதுவும் கற்பனைதான்!

பட்டேல் ஒன்றும் புரியாமல் விழித்தார். கைத்தடியை உயர்த்தி, செயற்கைக் காலை பலமுறை

தட்டினார். ஏதோ சொல்வதற்கு வாயைத் திறந்தார். ஆனால், பேச்சு வரவில்லை.

நந்திரா, தன் சிநேகிதர்களுடன் வாழ்வது போல ஒரு கற்பனை உலகை சிருஷ்டித்து வைத்திருக்கிறாள். அவள் வாழ்வில் கொஞ்சம் சுதந்திரம் வேண்டியிருந்தது. அதற்காக ஓர் ஆண் நண்பனை கற்பனை செய்து கொண்டிருக்கிறாள். இப்போது நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் எதையும் கண்டு கொள்ளாமல் இருப்பதுதான். அவள் விருப்பப்படி இருக்க அனுமதியுங்கள். சும்மா அவளை கேள்வி மேல் கேள்வி கேட்டு தொந்தரவு செய்யாதீர்கள். இப்போதைக்கு அவளுக்கு ஆண் நண்பர்கள் யாரும் இல்லை. இன்னும் சில காலத்துக்கு இருக்க மாட்டார்கள் என நம்பலாம்..

பட்டேல் தன்னுடைய கைத்தடியை கீழே வைத்துவிட்டு தீவிர யோசனையில் ஆழ்ந்தார்.

நான் எதற்காக அப்படி இருக்க வேண்டும்? நாகரிகப் போக்குக்கு நான் ஏன் அனுமதி தர வேண்டும்?

ரமோட்ஸ்வே பதிலைத் தயாராக வைத்திருந்தாள்.

நீங்கள் அப்படி நடந்து கொள்ளவில்லை என்றால், கற்பனை சிநேகிதன் உண்மையாகவே தோன்றிவிடுவான். அவ்வளவுதான்.

ரமோட்ஸ்வே, அவருடைய முக மாற்றத்தைக் கூர்ந்து கவனித்தாள். அவர், திடீரென்று எழுந்து நின்று, சற்று தடுமாறி விட்டு அவளைப் பார்த்தாள்.

நீங்கள் மிகவும் புத்திசாலியான பெண்மணி. உங்களுடைய அறிவுரையை நான் ஏற்றுக் கொள்கிறேன். அவளுடைய வாழ்க்கையை அவள் விருப்பப்படி அமைத்துக் கொள்ள அனுமதிக்கிறேன். இன்னும் இரண்டு அல்லது மூன்று வருடங்களில் நாங்கள் சொல்வதைக் கேட்டு, தகுதியான கணவரைத் தேர்ந்தெடுப்பதில், எங்கள் அறிவுரையையும் ஏற்றுக் கொள்வாள் என நம்புகிறேன்..

அது மாதிரி நடக்க வாய்ப்பிருக்கிறது.

ரமோட்ஸ்வே ஒரு நிம்மதி பெருமூச்சுடன் சொன்னாள்.

ஆமாம், நான் உங்களுக்கு மிகவும் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்..

அதன் பிறகு, உயர்ந்த வெள்ளை மதிற்சுவர்கள் சூழப்பட்ட பட்டேலின் வீட்டைக் கடக்கும் போதெல்லாம் ரமோட்ஸ்வே, நந்திராவைப் பற்றி நினைத்துக் கொள்வாள். அவளை இப்போது நன்கு தெரியுமாதலால் அடிக்கடி பார்க்கும் சந்தர்ப்பங்கள் நேரலாம் என்றும் எதிர்பார்த்தாள்.

அப்படியரு வாய்ப்பு கிடைக்க ஒரு வருடம் ஆகிவிட்டது. பிரசிடென்ட் ஹோட்டல் வராந்தாவில், ஒரு சனிக்கிழமை காலை காபியை ரமோட்ஸ்வே அருந்திக் கொண்டிருந்த சமயம், யாரோ அவளது தோளைத் தொட்ட மாதிரி இருந்தது. திரும்பிப் பார்த்த போது, நந்திரா, பதினெட்டு வயது மதிக்கத்தக்க ஒரு வாலிபனுடன் நின்று கொண்டிருந்தாள். அந்த இளைஞன், சிரித்த முகமாக, நல்லவனாகத் தோன்றினான்.

ரமோட்ஸ்வே, நீங்களாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தேன்..

ரமோட்ஸ்வே, நந்திராவின் கைகளைப் பற்றிக் குலுக்கினாள். அந்த இளைஞன், இவளைப் பார்த்துப் புன்னகைத்தான்.

இது என்னுடைய சிநேகிதன். நீங்கள் இவனைப் பார்த்ததில்லை என்று நினைக்கிறேன்..

இளைஞன் முன்னே வந்து, கைகளை நீட்டினான்...

நான் ஜாக் என்றான்.

ப ட்டேலின் வழக்கு நினைவுக்கு வரும்போதெல்லாம், நந்திரா தன்னையும் சேர்த்து ஏமாற்றியதை நினைத்து தனக்குள்ளேயே சிரித்துக் கொள்வாள் ரமோட்ஸ்வே. இந்தக் காலத்துப் பெண்கள் அதிபுத்திசாலிகளாக இருக்கிறார்கள் என்றும் சொல்லிக் கொள்வாள்.

வழக்கு முடிந்த மூன்றே நாட்களில் பட்டேல் அவளுக்கு பணத்தை செட்டில் செய்தார். ரமோட்ஸ்வே, 2,000 புலாக்களுக்கு பில்லும், செலவுகளுக்கு என்று தனியாக ஒரு தொகையும் குறிப்பிட்டு அனுப்ப, மறு தபாலிலேயே பணம் வந்து விட்டது. ரமோட்ஸ்வேக்கு இது மிகவும் வியப்பாக இருந்தது. அவ்வளவு பெரிய தொகையை, கொஞ்சம் கூடத் தயங்காமல் சந்தோஷமாக பட்டேல் கொடுத்தது அவளால் நம்ப முடியாததாக இருந்தது. மனசுக்குள், மிக அதிகமாக வாங்கி விட்டோமோ என்கிற குற்ற உணர்வும் இருந்தது.

சிலருக்கு இதுபோன்ற குற்ற உணர்வு மிக அதிகமாக இருக்கும். சிலருக்கு இப்படியெல்லாம் எந்த உறுத்தலுமே இருக்காது. சிலர் தான் செய்த சிறு தவறுக்கெல்லாம் மிகவும் வருத்தமும் வேதனை யும் அடைவார்கள். சிலர் பெரிய பொய் பித்தலாட்ட வேலை களைச் செய்தும் கூட, நிம்மதியாக துளிக்கூட அலட்டிக் கொள்ளாமல் இருப்பார்கள். ரமோட்ஸ்வேயிடம் வந்த எம்மா பெக்வானே முதல் வகுப்பைச் சேர்ந்தவள். ரமோட்ஸ்வே யின் கணவன் நோட் மொகோடி இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவன்.

எம்மா பெக்வானே, துப்பறியும் நிறுவனத்துக்கு வந்தபோது, மிகவும் கலங்கிப் போயிருந்தாள். ரமோட்ஸ்வே இதுபோன்று ரொம்பவும் பயந்த சுபாவமுள்ள வாடிக்கையாளர்களுக்கு நல்ல திடமான தேநீர் தயாரித்துக் கொடுப்பது வழக்கம். அதுபோல ஒரு கோப்பை தேநீரைக் கொடுத்துவிட்டு, அவள் பேசுவதைக் கேட்க ஆயத்தமானாள். எவனாவது ஒரு மோசமானவனைப் பற்றின விஷயமாகத்தான் இருக்கும். அதற்கான அறிகுறிகள் எல்லாம் இருந்தன. என்னவாக இருக்கலாம்? ஆண்பிள்ளையின் முரட்டுத் தனமான தீய நடத்தையாகத்தான் இருக்க வேண்டும். வேறென்னவாக இருக்க முடியும்?

என் கணவர் மிகப் பெரிய குளறுபடி செய்து விட்டார். அதற்காக நான் மிகவும் வெட்கப்பட்டு வருந்துகிறேன்..

தான் நினைத்த மாதிரிதான்.. ரமோட்ஸ்வே தலையை அசைத்தாள்.

ஆண்களே இப்படித்தான். மோசமான காரியங் களைச் செய்து விடுவார்கள். எல்லா மனைவிகளும்தான் கவலைப்படுகிறார்கள். நீ மட்டும் இல்லை..

பெக்வானே பெருமூச்செறிந்தாள்..

ஆனால், என் கணவர் மிக பயங்கரமான வேலை யைச் செய்திருக்கிறார். மிக மிக பயங்கரமானது..

ரமோட்ஸ்வே திடுக்கிட்டாள். ஒருவேளை அவள் கணவர் யாரையேனும் கொலை செய்து விட்டாரோ.. வழக்கிலிருந்து அவரைக் காப்பாற்றச் சொல்கிறாளோ.. அப்படியென்றால், அவள் ஒருபோதும் துணை போக மாட்டாள்.

அப்படி என்ன பயங்கரமான காரியம்? ரமோட்ஸ்வே கேட்டாள். பெக்வானே தலை குனிந்தாள்.

அவர் ஒரு காரைத் திருடி விட்டார்..

ரமோட்ஸ்வே நிம்மதியுடன் பெருமூச்சு விட்டாள்.

கார் திருட்டு என்பது மிகச் சாதாரணமான ஒன்றுதான். ஊரில் கணவன்மார்கள் திருடிய காரை பெருமையுடன் ஓட்டிச் செல்லும் மனைவிகள் ஏராளம். ரமோட்ஸ்வேயால் அப்படி இருக்க

முடியாது. பெக்வானேயும் அப்படித்தான் எனத் தோன்றியது அவளுக்கு.

அவர் திருடியதாக உன்னிடம் கூறினாரா? உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?

பெக்வானே, இல்லை என தலையசைத்தாள்.

ஒருவர் தனக்குக் கொடுத்ததாகக் கூறினார். அந்த மனிதரிடம் இரண்டு பென்ஸ் கார்கள் இருந்ததாம். அவருக்கு ஒன்றுதான் தேவைப்பட்டதாம்..

ரமோட்ஸ்வே சிரித்தாள்.

இந்த ஆண்கள் நம்மை முட்டாளாக்கப் பார்க் கிறார்கள்.. நாமென்ன வடிகட்டின முட்டாள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்களா..

அப்படித்தான் தோன்றுகிறது.. என்றாள் பெக்வானே.

ரமோட்ஸ்வே ஒரு பென்சிலை எடுத்து கிறுக்க ஆரம்பித்தாள். தன்னையறியாமல் கிறுக்கிய கிறுக் கலைப் பார்க்கும்போது ஒரு காரை வரைந்திருப்பது தெரிந்தது. அவள், பெக்வானேயைப் பார்த்துக் கேட்டாள்.. நீ மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்று நான் கூற வேண்டுமா? அதைத்தான் நீ எதிர் பார்க்கிறாயா?

பெக்வானே சிறிது யோசித்தாள்.

இல்லை. நான் என்ன செய்ய வேண்டும் என்பதை ஏற்கெனவே தீர்மானித்து விட்டேன்..

அப்படியானால்..

காரை, திரும்ப அதன் சொந்தக்காரரிடமே கொடுத்து விட வேண்டும்..

ரமோட்ஸ்வே நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

அப்படியானால், போலீஸுக்குப் போக வேண்டும் என்கிறாயா.. உன் கணவரைக் காட்டிக் கொடுக்கப் போகிறாயா..?

இல்லை. நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை. கார், அதனுடைய சொந்தக்காரரிடம் போய்ச் சேர வேண்டும்.. போலீஸுக்குத் தெரியாமல். கார் அதனுடைய சொந்தக்காரரிடம் போய்ச் சேர்ந்துவிட்டது என்பது கடவுளுக்குத் தெரிந்தால் போதும்..

ரமோட்ஸ்வே, தன்னுடைய வாடிக்கையாளரைப் பார்த்தாள். அதுதான் மிகச் சரியான முடிவு என்றும் அவளுக்குத் தோன்றியது. கார், அதனுடைய இடத்தை அடைந்து விட்டால் பெக்வானே மனம் நிம்மதியடைந்து விடும். அதேசமயம், அவள் கணவனையும் இழக்க மாட்டாள்.

ஒரு இக்கட்டான சந்தர்ப்பத்தில் எடுக்கப்பட்ட மிக புத்திசாலித்தனமான முடிவு என்றே அவளுக்குத் தோன்றியது.

அதற்கு ஏன் என்னிடம் வந்தாய்? நான் என்ன செய்ய முடியும்?

பெக்வானே தயங்காமல் கூறினாள்..

அந்த கார் யாருடையது என்று நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். பின், அந்த காரை என் கணவரிடமிருந்து திருடி, அதன் சொந்தக்காரரிடம் சேர்ப்பித்து விட வேண்டும். இதுதான் நான், உங்களிடம் எதிர் பார்ப்பது..

அன்று மாலை காரில் திரும்பி வரும்போது, பெக்வானேவுக்கு உதவி செய்ய ஒப்புக் கொண்டிருக்கக் கூடாது என்றே ரமோட்ஸ்வேக்கு தோன்றியது. ஒப்புக் கொண்டு விட்டாள். இனி வேறு வழியில்லை. ஆனால் அது, அத்தனை சுலபமான காரியமாகத் தோன்றவில்லை. போலீஸுக்குத் தெரிவித்தால் வேலை சுலபமாகும். ஆனால், போலீஸுக்குப் போக முடியாத நிலை.

பெக்வானேவின் கணவனை போலீஸிடம் ஒப்படைத்து விட்டால், எல்லாம் முடிந்துவிடும். ஆனால், பெக்வானே அதை விரும்பவில்லையே! ரமோட்ஸ்வேக்கு அவளுடைய வாடிக்கையாளர்கள்தான் முக்கியம். ஆதலால், வேறு ஏதேனும் வழி கண்டு பிடிக்க வேண்டியதுதான்..

மாலை நேரம் கோழிக்கறி, பூசணிக்காய் உணவுக்குப் பிறகு, ரமோட்ஸ்வே மட்கோனிக்கு போன் செய் தாள்.

திருட்டு பென்ஸ் கார்கள் எங்கேயிருந்து இங்கே வருகின்றன என்று தெரியுமா?

எல்லைப்புறத்திலிருந்துதான்.

மட்கோனி கூறினார்.

தென் ஆப்பிரிக்காவில் அவற்றைத் திருடி, இங்கே கொண்டு வந்து, என்ஜின் நம்பரை அழித்து விட்டு, புதிதாக பெயின்ட் அடித்து விடுவார்கள். அல்லது, ஜாம்பியாவுக்கு அனுப்பி விடுவார்கள். இதை எல்லாம் யார் செய்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். ஏன்.. எங்கள் எல்லோருக்குமே தெரியும்.

எனக்கு அது தெரிய வேண்டிய அவசியமில்லை. ஆனால், இப்படியெல்லாம் மாற்றப்பட்ட பிறகு அந்த காரை எவ்வாறு அடையாளம் கண்டுகொள்வது?

மட்கோனி சற்றே தாமதித்தார்..

காரின் சீரியல் நம்பர், பானட் அடியிலோ, வண்டியின் கீழ்புறத்திலோ இருக்கும். கவனமாகப் பார்த்தால் கண்டுபிடித்து விடலாம்

உங்களுக்குத் தெரியும் அல்லவா? எனக்கு நீங்கள் உதவி செய்ய வேண்டும்...

மட்கோனி பெருமூச்சு விட்டார். திருட்டு கார் சமாசாரங்கள் அவருக்குப் பிடிக்காத ஒன்று. அதில் சம்பந்தப்படாமல் இருப்பது நல்லது என அவர் எண்ணினார். ஆனால், இந்த உதவி கேட்பவள் ரமோட்ஸ்வே ஆயிற்றே! ஒரேயரு பதில்தான் தர முடியும்.

எங்கே எப்போது என்று சொல்..

மறுநாள் மாலை அவர்கள் பெக் வானேவின் தோட்டத்துக்குள் நுழைந் தார்கள். முன்னாலேயே செய்து வைத்திருந்த ஏற்பாட்டின்படி அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் நாய்கள் கட்டப் பட்டு இருந்தன. பெக்வானேவின் கணவன், அவனுக்காக சிரத்தையுடன் தயாரிக்கப்பட்டிருந்த உணவை ரசித்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

மட்கோனி காரின் அடியில் நுழைந்து, தன்னுடைய டார்ச் வெளிச்சத்தில் உள்ளே பார்த்தார். ரமோட்ஸ்வே தானும் உதவிக்கு, கீழே வந்து பார்ப்பதாகத்தான் கூறினாள். ஆனால், அவள் மிகவும் பருமனாக இருப்பதால் உள்ளே நுழைவது சாத்தியமில்லாத காரியம் என்று மட்கோனிக்குத் தோன்றியதால் அவள் உதவியை மறுத்தார். பத்து நிமிடங்கள் கழித்து ஒரு காகிதத்தில் எழுதப்பட்ட நம்பருடன் அவர்கள் இருவரும் பூனை மாதிரி பெக்வானே வீட்டுத் தோட்டத்திலிருந்து வெளியேறி, தெருவில் நிறுத்தியிருந்த வெள்ளை நிற காருக்குள் நுழைந்தனர்.

இது மாத்திரம் போதுமா.. இதிலிருந்து அவர்கள் கண்டுபிடித்து விடுவார்களா? - ரமோட்ஸ்வே கேட்டாள்.

ஆமாம். அவர்களுக்குத் தெரியும்..

அவரை, அவர் வீட்டு வாசலில் இறக்கி விட்டு, இருட்டில் கையசைத்து விடை பெற்றாள் ரமோட்ஸ்வே. அவர் செய்த இந்த உதவிக்கு நிச்சயம் பதிலுதவியை அவள் செய்வாள்.

அந்த வாரக் கடைசியில் ரமோட்ஸ்வே, அவளுடைய சிறிய காரை எடுத்துக் கொண்டு எல்லைப்புறத்திலுள்ள ஊரான மா.ஃபிகெங்குக்குச் சென்று, நேரே ரயில்வே உணவகத்துக்குச் சென்றாள். ஒரு உள்ளூர் பத்திரிகையை வாங்கி, ஜன்னல் அருகிலுள்ள மேஜையில் அமர்ந்து படிக்கத் தொடங்கினாள். ஒன்றும் நல்ல செய்தி கிடைக்கவில்லை. அலுப்புடன் பத்திரிகையை வைத்து விட்டு, சுற்றியுள்ள சக வாடிக்கையாளர்களை பார்வை யால் மேய்ந்தாள்.

ரமோட்ஸ்வே..

அவள் சட்டென நிமிர்ந்துப் பார்த்தாள். பழைய பில்லி பிலானி. சற்று வயதாகி விட்டதைத் தவிர, வேறு மாற்றமில்லை. அவன், மொச்சுடி பள்ளியில் மேஜை அருகில் அமர்ந்து கனவு கண்டபடி இருந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது அவளுக்கு.

அவள், ஒரு பெரிய கோப்பை காபியும், கொறிப்பதற்கு இனிப்பு பன்னும் வாங்கிக் கொடுத்து, தன்னுடைய தேவையை விளக்கினாள்.

இந்த நம்பருடைய கார் யாருடையது என்று கண்டு பிடிக்க வேண்டும் பில்லி. நீ போலீஸில் இருப்பதால், உன்னால் அது சுலபமாக முடியும் என்றே நினைக் கிறேன்..

மட்கோனியினால் எழுதப்பட்ட அந்தத் துண்டுக் காகிதத்தை பில்லி பிலானி யிடம் கொடுத்தாள் ரமோட்ஸ்வே.

நீ கண்டுபிடித்தவுடன் அதன் சொந்தக்காரரிடமோ, இன்ஷுரன்ஸ் கம்பெனியிடமோ விவரத்தைச் சொல்லி காபரோன் நகரத்துக்கு அழைத்து வந்தால், ஒரு குறிப்பிட்ட இடத்தில் காரை பார்க்கலாம். அவர்கள் செய்ய வேண்டி யது எல்லாம், தென் ஆப்பிரிக்க நம்பர் உள்ள அந்த காரின் ஒரிஜினல் நம்பர் பிளேட்டை கொண்டு வந்தால் போதும். அந்த காரை அவர்கள் ஓட்டிச் செல்லலாம்.

பில்லி பிலானி ஆச்சரியத்துடன் கேட்டான்..

ஒன்றும் கொடுக்க வேண்டாமா.. சும்மாதானா?

ஒன்றும் தர வேண்டியதில்லை. ஒரு பொருளை அதன் சொந்தக்காரரிடம் சேர்ப்பதுதான் நோக்கம்.. அவ்வளவுதான். இதை நீ நம்புகிறாயா?

கண்டிப்பாக.. கண்டிப்பாக..

பில்லி உடனடியாகப் பதிலளித்தான்.

மேலும் பில்லி, நீ போலீஸ்காரன் என்பதை மறந்து விட வேண்டும். இந்த வழக்கைப் பொறுத்த வரையில், நீ யாரையும் கைது செய்ய வேண்டி யிருக்காது.

சின்ன கைதுகூட கிடையாதா? - அவன் ஏமாற்றத் துடன் கேட்டான்.

அதுகூட கிடையாது..'

ரமோட்ஸ்வே அழுத்தம் திருத்தமாகக் கூறினாள்.

பிலானி அடுத்த நாள் போன் செய்தான்.

திருட்டு போன வண்டிகளின் பட்டியலில் இருந்து அந்த காரைக் கண்டுபிடித்து விட்டேன் ரமோட்ஸ்வே.. அதற்கு இன்ஷூரன்ஸ் கம்பெனி நஷ்ட ஈடு கொடுத் திருக்கிறது. கார் திரும்ப

கிடைத்தால், அவர்கள் மிகவும் சந்தோஷமடைவார்கள். அவர்கள் கம்பெனி ஆள் ஒருவனை எல்லைக்கு அனுப்பி காரை எடுத்துப் போவார்கள்..

நல்லது..

ரமோட்ஸ்வே, செவ்வாய்க்கிழமை காலை ஏழு மணிக்கு காபரோனில் உள்ள அங்காடி வாயிலில் நம்பர் பிளேட்டுடன் அவர்கள் இருக்க வேண்டும் என்று கூறினாள்.

செவ்வாய்க்கிழமை காலை ஐந்து மணி சுமாருக்கு பெக்வானேவின் வீட்டுக்குச் சென்றாள். முந்தின இரவே அவர்கள் ஏற்பாட்டின்படி கார் சாவிகளை படுக்கை அறை ஜன்னலுக்கு வெளியே பெக்வானா தூக்கி எறிந்திருந்தாள். முன்பே, பெக்வானே ரமோஸ்வேயிடம், தன் கணவன் ஆழ்ந்து உறங்குவான் என்றும் காலை ஆறு மணிக்கு முன் எழுந்திருக்க மாட்டான் என்றும் கூறியிருந்தாள்.

காரை எடுத்து, வெளியே செல்லும் சத்தம் அவனுக்குக் கேட்க வாய்ப்பில்லை. எட்டு மணி நேரம் வரையில் கார் பறிபோன விஷயத்தை அவன் தெரிந்து கொள்ளவில்லை. தெரிந்த பின்போ -

கூப்பிடு போலீஸை..

பெக்வானேதான் கிறீச்சிட்டாள்.

ஆனால், அவள் புருஷனோ தயங்கினான்.

பிறகு வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம் - இப்படிப் பூசி மெழுகினான்.

அவள், அவனை நேராகக் கண்களுக்குள் பார்த்தாள். அவன் கூசி நெளிவது அவளுக்குத் தெரிந்தது. அவன் தவறுதான் செய்திருக்கிறான் என்று ஆரம்பத்திலிருந்தே அவள் நினைத்தது சரிதான்.

தான் திருடிய கார், பறிபோய் விட்டது என்று அவனால் போலீஸில் கூறமுடியாது.

திருடனுக்குத் தேள் கொட்டிய கதைதான்.

அன்று மாலை, அவள் ரமோட்ஸ்வேயைப் பார்த்து நன்றி கூறினாள்.

எனக்கு இப்போது ரொம்ப நிம்மதியாக இருக்கிறது. இனிமேல் அவர் செய்த தவறுக்கு நான் தூக்கமில்லாமல் இரவு முழுக்க அல்லாட வேண்டாம்..

எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. அவருக்கு இது ஒரு பாடமாகக் கூட இருக்கும். சுவையான பாடம்.. என்றாள் ரமோட்ஸ்வே

அவர் இனிமேல் இதுபோல் செய்ய மாட்டார். உங்களுக்கு நம் பழமொழி தெரியுமில்லையா.. ஓரிடத்தில் இடி விழுந்தால் மறுபடி அதே இடத்தில் தாக்காது என்று..

பெக்வானே சிரித்தாள்.



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 13

---------------------------------------------------------------

ஜீ ப்ரா டிரைவ்வில் உள்ள ரமோட்ஸ்வேயின் வீடு 1968-ல் கட்டப்பட்டது. கடைகள், அரசாங்கக் கட்டடங்கள் என்று ஊர் அப்போதுதான் கொஞ்சம் விரிவடைய ஆரம்பித்திருந்தது.

ரமோட்ஸ்வேக்கு தன் வீட்டைப் பற்றி மிகவும் கர்வம் உண்டு. வீட்டு விலையெல்லாம் யானை விலை, குதிரை விலை என்று எகிறி, நேர்மையாக உழைத்துச் சம்பாதிப்பவர்களால் வாங்க முடியாத நிலை ஏற்படு வதற்கு முன்பே, அவள் அந்த வீட்டை வாங்கியது பெரிய அதிர்ஷ்டம் என்றே நினைத்தாள்.

வெராந்தாவுக்கு அடுத்து பெரிய கூடம்.. அங்கிருந்த பெரிய ஜன்னல் வழியாக தோட்டத்துப் புல்வெளியைப் பார்க்கலாம். ஜன்னலுக்கு எதிரே, மிகவும் பெரிதாக ஒரு கனப்பு அடுப்பு.. அதன் மீது தன்னுடைய உயர் ரக சைனா கோப்பைகளையும் ராணி எலிசபெத்தின் படம் போட்ட தேநீர் கோப்பைகளையும் வைத்திருந்தாள். சுவரில் பங்க்வோட்டோ நகரத் தலைவர் ஸர் ஸிரிட்ஸ் காமாவின் புகைப்படம்.. அவர், ரமோட்ஸ்வேயைப் பார்த்துச் சிரிப்பது போல.. ஏன், ராணி எலிசபெத்துக்குக் கூட போட்ஸ்வேனா மக்களைப் பற்றி நிறைய தெரியும். அவர்களை ராணி மிகவும் விரும்புவார்.

ஆனால், ரமோட்ஸ்வே மிக உயர்வாக நினைத்தது அறுபது வயதில் எடுக்கப்பட்ட அவளுடைய தந்தையின் புகைப்படத்தைதான்.

ரமோட்ஸ்வே மிகவும் யதார்த்தமானவள்.. இருந்தபோதிலும், புகைப்படத்தில் இருக்கும் அவள் தந்தை சிரித்தபடி, தன்னைப் பார்த்து என் அருமை மகளே.. நீ ரொம்பவும் நன்றாக முன்னேறியிருக்கிறாய். உன்னைப் பற்றி நான் மிகவும் பெருமைப்படுகிறேன் என்று சொல்வது போன்ற அவளுடைய கற்பனைகளைத் தடுக்க முடிவதில்லை.

அப்பாவையும் தன் காரில் ஏற்றிக் கொண்டு, காபரோனைச் சுற்றிக் காட்டி, அங்கு ஏற்பட்டுள்ள மாற்றங்களை எல்லாம் காட்டினால்.. அவர் எவ்வளவு சந்தோஷப்படுவார்!

ரமோட்ஸ்வேயும் மகிழ்ச்சியாகத்தான் இருந்தாள். அவளுடைய துப்பறியும் நிறுவனம், அவளுடைய வீடு எல்லாம் அவளுக்குத் தேவைக்கு மேலேயே கிடைத்திருப்பதாக அவள் எண்ணினாள். எப்படி யெல்லாம் காலங்கள் மாறுகின்றன என்பதை அவள் உணர்ந்துதான் இருந்தாள்.

நோட் மொகோடியை மணம் செய்தபோது, சொல்லத் தெரியாத துக்கம், அவளை கறுப்பு நாயைப் போலத் தொடர்ந்து வந்ததைப் போல அவள் உணர்ந்தாள். இப்போது அது இல்லை.

தந்தையின் பேச்சையோ அல்லது அத்தையின் அறிவுரைகளையோ கேட்டிருந்தால், நோட்டை அவள் மணந்திருந்த மாட்டாள். அவ்வளவு துன்பத் தையும் அனுபவித்திருக்க மாட்டாள். அவள் கேட்க வில்லை. இருபது வயதுக்குரிய தலைக்கனமும் பிடிவாதமும் திமிரும் ஏராளமாகவே அவளுக்குள் இருந்தது. எல்லாம் எனக்கு தெரியும் என்கிற அகம் பாவமும் கூட. இம்மாதிரி கண்மூடித்தனமாக நடக்கும் இளைஞர்கள் உலகத்தில் ஏராளமாகவே இருக்கின்றனர். அவளுடைய அப்பாவுக்கு ஆரம்பத்திலிருந்தே நோட்டைப் பிடிக்கவில்லை. அதை அவர், நேரடியாகக் கூறவும் செய்தார். அதற்குப் பதிலாக அவள், அழுதபடி.. அவன் ஒருவன்தான் தன்னை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்வான் என்று கூறினாள்.

அவன் உன்னை சந்தோஷமாக வைத்துக் கொள்ள மாட்டான். உன்னை அடித்து, பலவிதத்திலும் துன்புறுத்து வான். அவனுக்கு தன்னைப் பற்றிய நினைவுதான் நிறைய.. அவனது தேவைதான் அவனுக்கு முக்கியம். இதுபோன்ற மனிதர்களை, நான் சுரங்கத்தில் வேலை செய்யும்போது பார்த்திருக்கிறேன்.. அப்படிப்பட்ட ஆசாமிதான் அவனும்.

அவள் தலையசைத்து மறுத்தபடி அறையிலிருந்து வெளியே ஓட, அவர் மெல்லிய குரலில் அவளை அழைத்தார். அந்தக் குரல் இப்போதும் அவள் செவிகளில் ஒலித்து, இதயத்தைக் கிழிப்பதுண்டு. ஒரு நல்ல அன்பான மனிதரை, அவளை அரவணைத்துப் பாதுக்காக்க வேண்டும் என்று அல்லும் பகலும் நினைத்து வாழ்ந்தவரை, அவள் ரொம்பவே காயப்படுத்தி விட்டாள். பழைய காலத்தை அழித்து விட்டு, புதிதாக, தவறில்லாமல் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்..

நான் கூட அப்படி நினைத்ததுண்டு மட்கோனி, அவளது கோப்பையில் தேநீரை நிரப்பியவாறு கூறினார்.

இப்போது நமக்கு உள்ள அறிவு, அப்போது இருந்திருந் தால்.. அடடா.. என் வாழ்க் கையை எத்தனையோ நன்றாக மாற்றியமைத்துக் கொண்டிருப் பேன்..

ரமோட்ஸ்வே தேநீரை உறிஞ்சினாள். அவளுக்கு அலுவலகத் தில் வேலை அதிகம் இல்லாத

போது, தன் சிநேகிதர் மட்கோனி யுடன் கொஞ்ச நேரம் பேசி விட்டுப் போவதுண்டு. இப்போது அவள், லாக்வாங் ரோடிலுள்ள ஸ்பீடி மோட்டார் நிறுவனத்தில், மட்கோனிக்கு உதிரி பாகங்கள் விற்பவரின் காலண்டருக்கு அடியில் அமர்ந்திருந்தாள்.

சில சமயங்களில் மனிதர் களுக்கு உண்மையைத் தேடுவதில் ஆர்வம் இருப்பதில்லை. அது போன்ற சமயங்களில் ரமோட்ஸ் வேக்கு வேலை இருக்காது.

ஒருவரும் தொலைந்து போக வில்லை. எவரும் தில்லுமுல்லு வேலைகளில் ஈடுபடவில்லை. அதுபோன்ற சமயங்களில் துப்பறியும் நிறுவனங்கள் தங்கள் ஆபீஸை மூடிவிட்டு, பூசணிச் செடி வளர்க்கப் போக வேண்டியதுதான். அவளுக்கு ஒன்றும் பூசணிச் செடி வளர்க்கும் எண்ணமெல்லாம் கிடையாது. நிம்மதியாக தேநீர் அருந்திவிட்டு, ஆப்பிரிக்க சூப்பர் மார்க்கெட்டுகளில் ஏதாவது சாமான்கள் வாங்குவதில் மதிய நேரத்தைச் செலவிட அவளுக்குப் பிடிக்கும். பிறகு, புத்தகக் கடைக்குப் போய், ஏதாவது புதிய புத்தகங்கள் வந்திருக்கிறதா என்று பார்ப்பாள்.

மட்கோனி தன் பேச்சைத் தொடர்ந்தார். நான் என் வாழ்க்கையில் நூற்றுக்கணக்கில் தவறுகளைச் செய்திருக்கிறேன், நூற்றுக்கணக்கில்..

அவள் அவரை வியப்புடன் பார்த்தாள். அவருடைய வாழ்க்கையில், எல்லாமே நல்லபடியாக அமைந்திருப்பதாகத்தான் அவள், இது வரையில் நினைத்துக் கொண்டிருந்தாள்.

நீங்கள் ஒன்றும் என்னை மாதிரி தவறு செய்ததில்லையே.. அப்படியெல்லாம் யோசிக்காமல் எந்த முடிவுக்கும் வரக்கூடியவரில்லை நீங்கள். அப்படி என்னால், நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. நீங்கள் மிகவும் புத்திக்கூர்மையானவர். எதையும் ஒருமுறைக்குப் பலமுறை ஆழ்ந்து யோசித்து, பிரச்னையின் எல்லா சாத்தியக் கூறுகளையும் அலசி மிகச் சரியாக முடிவெடுப்பவர். ஆனால், நான் அப்படியில்லை..

ரமோட்ஸ்வே பெருமூச்செறிந்தபடி தொடந்தாள்..

நான் நோட்டை மணந்து கொண்டேன்..

ஆழ்ந்த யோசனையில் இருந்த மட்கோனி தலையை அசைத்தார்.

ஆமாம். அது மிக மோசமான தவறுதான்...

சில விநாடிகள் மெௌனத்தில் கரைய, பின் அவர் எழுந்தார். அவர் மிகவும் உயரமானவர். அதனால் நிமிர்ந்து நிற்கும்போது, தலையில் இடித்துக் கொள்ளாமல், எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். அவருக்குப் பின்னால் காலண்டர் மாட்டப்பட்டிருந்தது. மேல் கூரையில் இருந்து ஈசல்கள் ஒட்டும் மெழுகுக் காகிதம் படபடத்தது. அவர், தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசத் தொடங்கினார்:

நீ என்னை மணந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அது ஒன்றும் தவறான முடிவாக நிச்சயம் இருக்காது என்றே நினைக்கிறேன்..

ரமோட்ஸ்வே வியப்பில் தாக்குண்டாள். அவள் தன் தேநீர் கோப்பையைத் தவறவிட்டோ, ஏதாவது பேசியோ, தன் அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளவில்லை. புன்சிரிப்புடன் தன் நண்பரைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நீங்கள் மிகவும் அன்பான, பரிவான மனிதர். ஆனால், என்னால் திரும்பவும் திருமணம் செய்து கொள்ள முடியாது.. எப்போதுமே. நான் இப்போது மகிழ்ச்சியாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என் நிறுவனம், என் வீடு.. இவை இரண்டும் என் வாழ்க்கைக்குத் தேவையான நிறைவைத் தந்து கொண்டிருக்கின்றன..

மட்கோனி மனமொடிந்து போனவராக உட்கார்ந்திருந்தார். ரமோட்ஸ்வே அவரை மெதுவே தொட முயற்சிக்க, அவர் வேகமாக அவளது கரத்தை உதறினார்.

இதைச் சொன்னதற்கு நான் ரொம்பவும் வருத்தப்படுகிறேன்.. - இப்படிச் சொன்ன ரமோட்ஸ்வே

தொடர்ந்தாள்..

ஒன்று மட்டும் நான் சொல்ல விரும்புகிறேன். எப்போதாவது நான் மறுமணம் செய்துகொள்ள விரும்பினால் - அநேகமாக அப்படி எதுவும் நடக்காது - நடந்தால், நான் உங்களைப் போன்ற ஒருவரைத்தான் தேர்ந்தெடுப்பேன். ஏன், உங்களையே கூடத் தேர்ந்தெடுக்கலாம். இது நிச்சயமான வார்த்தை..

மட்கோனி, அவளுடைய கோப்பையை எடுத்து, தேநீரை நிரப்பினார். அவர் இப்போது மௌனம் சாதித்தார். கோபத்தினாலோ, வெறுப்பினாலோ இல்லை. தன்னுடைய காதலை வெளிப் படுத்த மிகவும் முயற்சித்தவர், இனிமேல் சொல்வதற்கு ஒன்றுமில்லாததனால் மௌனமாக இருந்தார்.

ஆ லிஸ் பூஸாங், மிகுந்த பதட்டத்துடன் ரமோட்ஸ்வேயிடம் யோசனை கேட்க வந்திருந்தாள். மேஜையின் பின் உட்கார்ந்திருந்த பருமனான ரமோட்ஸ்வேயைப் பார்த்து விட்டு, சற்று மனம் தேறியவளாக தயக்கத்துடன் சொல்ல ஆரம்பித்தாள். ரமோட்ஸ்வேயின் அரவணைப்பது போன்ற பார்வை, அவளுக்கு மிகுந்த நம்பிக்கையை அளித்தது.

ஒரு பாதிரியாரையோ அல்லது ஒரு மருத்துவரையோ அணுகுவது போன்றது தான் இது.. யார் எதைச் சொன்னாலும், அவர்களுக்கு அதிர்ச்சி உண்டாகாது என்பதனால்.

நான், என் கணவரைச் சந்தேகப்படு கிறேன்.. காரணம், அவர் பல பெண்களுடன் சுற்றுவதாகக் கேள்விப்படுகிறேன்..

ரமோட்ஸ்வே தலையசைத்தாள். எல்லா ஆண்களுமே பெண்களுடன் பழகும்போது வழியத்தான் செய்கிறார்கள். சிலர் நிறைய; சிலர் கொஞ்சமாக.. ஆசிரியர்கள், பாதிரியார்கள் போன்றவர்களைத் தவிர.. இது அவளது அனுபவத்தின் வெளிப்பாடு.

நீ நேரில் பார்த்தாயா?

- ரமோட்ஸ்வே கேட்க, ஆலிஸ் இல்லையெனத் தலையசைத்தாள்.

நான் கவனத்துடன் கண்காணித்துக் கொண்டுதான் இருக்கிறேன். என் கண்களில் எதுவும் படவில்லை. ஆனால், அவன் தந்திரக்காரன்.

ரமோட்ஸ்வே இதைக் குறித்துக் கொண்டாள்.

அவர் மதுபானக் கடைகளுக்குச் செல்வதுண்டா?

ஆமாம்..

அங்குதான் இதுமாதிரியான பெண்களைக் காணலாம். இது போல, தண்ணியடிக்க வரும் ஆண்களைப் பிடிப்பதே இந்தப் பெண்களின் நோக்கம். நகரத்தில் இப்படிப்பட்ட பெண்கள் நிறைய இருக்கிறார்கள்..

அவள், ஆலிஸ்ஸைப் பார்த்தாள். அந்தப் பார்வையிலேயே அவர்கள் ஒருவரையருவர் புரிந்து கொண்டனர். போட்ஸ்வானாவில் உள்ள எல்லாப் பெண்களுமே, ஆண்களின் இப்படிப்பட்ட சபல புத்தியினால் பாதிக்கப்பட்டவர்கள்தான்.

திருமணம் செய்துகொண்டு குழந்தை, குட்டிகளுடன் நிம்மதியாக இருக்கும் ஆண்களைப் பார்ப்பதே மிக அரிதாகி விட்டது. இந்த நாட்களில், பழைய காலம் மாதிரி யாரும் இருப்பதில்லை.

நான் அவனைத் தொடர்ந்து சென்று அப்படி ஏதாவது தொடர்பு இருக்கிறதா.. எந்தப் பெண்ணுடனாவது சுற்றுகிறானா என்று கண்டுபிடிக்க வேண்டுமா? ஆமாம். எனக்கு, நான் எப்பேர்ப்பட்டவனை மணந் திருக்கிறேன் எனத் தெரிந்துகொள்ள ஆதாரம் தேவை.

ரமோட்ஸ்வே புன்னகையுடன் தலையசைத்தாள். அவளுக்கு அந்த வாரம் முழுவதும் கடுமையான

வேலை இருந்ததனால், அடுத்த வாரம்தான் ஆலிஸ் வழக்கை எடுத்துக் கொள்ள முடிந்தது. புதன்கிழமை, வைரம் பிரிக்கும் கட்டடத்தின் வாயிலில் அங்கு வேலை செய்யும் கிரெம்ஸன் பூஸாங்கைப் பார்ப்பதற்கு, தன்னுடைய சின்ன காரில் காத்திருந்தாள். ஆலிஸ் அவளிடம் அளித்திருந்த கிரெம்ஸனின் புகைப்படத்தை மடி மீது வைத்திருந்தாள். அவன் மிக அழகாக, பரந்த தோள்களும், விரிந்த சிரிப்பும் உள்ளவனாக புகைப்படத்தில் காட்சியளித்தான். மிக நல்ல கணவன் வேண்டுமென தோன்றினால், ஆலிஸ் இப்படிப்பட்ட அழகனை ஏன் தேர்ந்தெடுத்தாள்? மற்ற ஆண்களை மாதிரி அவன் இருக்கமாட்டான் என்கிற குருட்டு நம்பிக்கைதான் காரணமாக இருக்க முடியும். இவனை ஒருமுறை பார்த்தாலே போதும். அவன் தன் வீடு, தன் மனைவி என்று சமர்த்தாக அடங்கியிருக்க மாட்டான் என்பது தெரியும்!

பஸ் ஸ்டாண்டிலிருந்து, அருகிலுள்ள கோ கோ மதுபானக் கடை வரை, அவனுடைய நீல நிற காரை தன் காரில் பின்தொடர்ந்தாள் அவள். அவன் இறங்கி, கடைக்குள் நுழைய, சிறிது உதட்டுச் சாயத்தையும், கன்னங்களில் க்ரீமையும் பூசிக்கொண்டு உள்ளே நுழைந்தாள் ரமோட்ஸ்வே.

கோ கோ மதுபானக் கடையில் கும்பல் அதிகமாக இல்லை. இரண்டு பெண்கள்தான் இருந்தனர். இருவரும் ஒழுக்கமான பெண்கள் இல்லை என்பது பார்த்தாலே தெரிந்தது. அவர்கள் ரமோட்ஸ்வேயை வெறித்துப் பார்த்தனர். அதைக் கொஞ்சம் கூட லட்சியம் செய்யாமல் கிரெம்ஸன் பூஸாங் அமர்ந்துள்ள நாற்காலியிலிருந்து இரண்டு நாற்காலி தள்ளி இவள் உட்கார்ந்தாள்.

ஒரு பீர் கொண்டு வரச் சொல்லி விட்டு, அப்போதுதான் முதன்முதலாகப் பார்ப்பது போல் சுற்றும் முற்றும் பார்த்தாள் ரமோட்ஸ்வே.

நீங்கள் இதற்கு முன் இங்கே வந்ததில்லையா..?

கிரெம்ஸன் பூஸாங் வலிய இவளிடம் பேச்சுக் கொடுத்தான்.

இந்த ஊரின் நல்ல பார்களில் இது ஒன்று.. என்றான்.

ரமோட்ஸ்வே, அவனை நேரே பார்த்தபடி கூறினாள்..

நான், இன்று மாதிரி ஏதாவது விசேஷ தினமாக இருந்தால்தான் பாருக்கு வருவேன்..

கிரெம்ஸன் சிரித்தான்.

பிறந்த நாளா?

ஆமாம். நான் உனக்கும் ஒரு பீர் வாங்கித் தருகிறேன்.. அதைக் கொண்டாடுவதற்கு..

அவள், அவனுக்கும் ஒரு பீர் வாங்கித் தர, அவன் தன் இடத்தை விட்டு எழுந்து, இவளுக்குப் பக்கத்து நாற்காலியில் வந்தமர்ந்தான். அவன் புகைப்படத்தில் இருப்பது போலவே அழகாகவும் நேர்த்தியாகவும் இருப்பதையும், அவனது உடைகள் உயர்தரமாக இருப் பதையும் அவள் கவனித்தாள்.

இருவரும் பீரை அருந்தியபடியே பேசத் தொடங்கி னார்கள். அவன் தன் வேலை பற்றி கூறினான்..

நான் வைரங்களைத் தரம் பிரிக்கும் வேலையில் இருக்கிறேன். அது மிகவும் கஷ்டமான வேலை.. அதற்கு மிகக் கூர்மையானக் கண் பார்வை மிக அவசியம்.

ஓ.. எனக்கு வைரங்கள் என்றால் ரொம்பவே பிடிக்கும்.. - இது ரமோட்ஸ்வே.

நாம் மிகவும் அதிருஷ்டசாலிகள் தெரியுமா.. நம் நாட்டில்தான் எத்தனையெத்தனை வைரங்கள்..

அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ரமோட்ஸ்வே தனது இடது காலை லேசாக நகர்த்தினாள். அது, அவன் கால் மீது பட்டது. அவன் இதை உணர்ந்தவனாய் கீழே பார்ப்பதையும்

அவள் கவனிக்கத் தவறில்லை. ஆனால், அவன் தன் கால்களை நகர்த்திக் கொள்ள வில்லை.

நீங்கள் திருமணமானவரா?

அவள் மெதுவாகக் கேட்டாள்.

இல்லை. நான் திருமணமே செய்து கொள்ளவில்லை. தனியாக இருப்பதுதான் இந்தக் காலத்தில் சுதந்திரமாக இருக்கிறது..



தனியாக இருப்பதுதான் சுதந்திரமாக இருக்கிறது என்று கிரெம்ஸன் பூ சுற்ற, ரமோட்ஸ்வே தலையசைத்து ஆமோதித்தாள்.

நானும் கூட உன்னை மாதிரிதான். அப்போதுதான் நம் இஷ்டப்படி இருக்க முடியும். உன் நேரத்தை உன் இஷ்டப்படி செலவழிக்க முடியும்..

ரொம்ப சரியாகச் சொன்னாய்.. என்றான் கிரெம்ஸன்.

ரமோட்ஸ்வே தன் கோப்பையைக் காலி செய்தாள்.

நான் கிளம்புகிறேன்..”

- இப்படிச் சொன்னவள், சற்று இடைவெளி விட்டுக் கூறினாள்.

எங்கள் வீட்டிலும் பீர் வைத்திருக்கிறேன். நீ விரும்பினால் என் வீட்டுக்கு வரலாம்..

அவன் சிரித்தான்.

இது நல்ல ஐடியாதான். எனக்கும் இப்போது ஒரு வேலையும் இல்லை..

அவன் தன் காரில், அவளுடைய காரைப் பின் தொடர்ந்தான். இருவருமாக வீட்டுக்குள் நுழைய.. ரமோட்ஸ்வே, இசைத்தட்டைச் சுழல விட்டாள். அவனுக்கு ஒரு பீர் ஊற்றிக் கொடுத் தாள். அவன் அதில் பாதியை ஒரே மடக்கில் குடித்து விட்டான். பிறகு, தனக்கு நல்ல பருமனான பெண்களை மிகவும் பிடிக்கும் என்றான். ஒல்லியாக இருப்பது என்கிற விஷயமே ஆப்பிரிக்க நாட்டுக்கு சரிப்படாது என்றான்.

உன் மாதிரி குண்டுப் பெண்களையே ஆண்கள் மிகவும் விரும்புகிறார்கள்..

அவன் சொல்ல, ரமோட்ஸ்வே கொஞ்சம் அசடு போல மழுப்பலாகச் சிரித்தாள். இந்த சந்திப்புக்கும், இவனது குண விசேஷத்துக்கும் ஒரு அத்தாட்சி வேண்டும் என்பதை அவள் மறக்க வில்லை. அது கொஞ்சம் கஷ்டம்தான். இருந் தாலும், இத்தனை அருமையான மாலைப் பொழுது ஒரு நினைவுச் சின்னம் கூட இல்லாமல் போவது வருத்தமானதுதான் என்று பிரியம் தொனிக்கும் குரலில் கூறினாள்.

நாம் இரண்டு பேரும் சேர்ந்து ஒரு போட்டோ எடுத்துக் கொள்ளலாம். அதைப் பார்க்கும்போதெல்லாம் இந்த இனிமையான நேரத்தை நினைத்துப் பார்க்க முடியும்..

அவன் சிரித்தபடியே அவளை செல்லமாக கிள்ளினான்.

குட் ஐடியா..

அவள் தனது கேமராவை தயார் நிலையில் வைத்துவிட்டு, ஓடி வந்து அவனருகில் உட்கார்ந்து கொண்டாள். அவன், அவளை மறுபடியும் கிள்ளி விட்டு, தன் கரத்தால் அவளை இழுத்து அணைக்கப் பார்த்தான். கேமரா வெளிச்சத்துடன் அந்தக் காட்சியை விழுங்கியது.

ஆலிஸ், வெள்ளிக்கிழமை ரமோட்ஸ்வேயின் நிறுவனத்துக்கு வந்தபோது, ரமோட்ஸ்வே தயாராகக் காத்துக் கொண்டிருந்தாள்.

உன் கணவன் நம்பிக்கைக்கு உரியவன் இல்லை. இதைச் சொல்ல எனக்கு மிகவும் வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனாலும், என்னிடம் அதற்கான ஆதாரம் இருக்கிறது..

ஆலிஸ் கண்களை மூடிக் கொண்டாள். இது, அவள் எதிர் பார்த்த ஒன்றுதான் என்றாலும் இன்னொருவர் சொல்லக் கேட்கும்போது, உயிரே போய் விடும்போல வலித்தது. அவனைக் கொன்று விட் டால் கூடப் பரவாயில்லை என்று அவளுக்குத் தோன்றியது. ஆனால், அது முடியாது. அவள் அவனை விரும்பினாள்; இல்லை, வெறுத்தாள்..இல்லையில்லை, காதலிக் கிறாள்.

ரமோட்ஸ்வே, தான் எடுத்த புகைப் படத்தை அவள் கையில் கொடுத்தாள்.

இதோ நீ கேட்ட சாட்சி..

ஆலிஸ் அதை வெறித்துப் பார்த்தாள். புகைப் படத்தைத் தரையில் வீசினாள்.

நீயா என் கணவருடன் சென்றாய்?

ரமோட்ஸ்வே, நெற்றியைச் சுருக்கியபடி அவளைப் பார்த்தாள்.

நீதானே அவனை ஆதாரத்தோடு வளைத்துப் பிடிக்கச் சொன்னாய்? என்றாள்.

ஆலிஸ் கண்களில் பொறி பறக்க, நெட்டுக்குத்தாக ரமோட்ஸ்வேயைப் பார்த்தாள்.

நீ மோசமானவள்! நீயும்தான் என் கணவரைத் திருடுகிற திருடி!

ரமோட்ஸ்வே, மிகுந்த கவலையுடன் ஆலிஸைப் பார்த்தாள்.

போச்சு. இந்த கேஸில் பணம் வராது.. திரும்பி வராத - வசூல் ஆகாத - கணக்கில் எழுத வேண்டியது தான்!

மிகக் கேவலமாகப் பேசி ஆர்ப்பாட்டம் செய்த ஆலிஸை, ஆபீஸிலிருந்து அப்புறப்படுத்துவதற்குள் ரமோட்ஸ்வேயும் மகுட்சியும் ஆடிப்போய் விட்டார்கள்.

தடிப் பொம்பள.. நீ துப்பறியறவள்னு சொல்லிட்டு, கட்டுப்பாடு இல்லாம அலையறவ. அந்த பார்ல இருக்கிற பெண்களை விடவும் அருவருப்பானவள். இவள் துப்பறிபவளே இல்லை. இது நம்பர் 1 கணவனைத் திருடும் நிறுவனம்!

இந்த அமர்க்களம் எல்லாம் ஓய்ந்த பிறகு, ரமோட்ஸ் வேயும் மகுட்சியும் ஒருவரையருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர். சிரிக்காமல் என்ன செய்ய? அந்தப் பெண்ணுக்குத் தன் கணவன் எப்படிப்பட்டவன் என்பது நன்கு தெரிந்தே இருந்தது. இருந்தும் அதற்கு ஆதாரம் கேட்டாள். ஆதாரத்தைக் கொடுத்தும், அதைக் கொடுத்தவளையே குறை கூறினால் எப்படி?

ரமோட்ஸ்வே, மகுட்சியிடம் கூறி விட்டுப் புறப் பட்டாள்..

இது பற்றி நான் மட்கோனியிடம் பேசியே ஆக வேண்டும். அவருடைய கார் காரேஜ் வரைக்கும் போய் வருகிறேன். நீ ஆபீஸைப் பார்த்துக் கொள்..

அவர், கண்ணாடியால் தடுக்கப்பட்ட அறையில், ஏதோ கார் உதிரி பாகத்தைத் தட்டிக் கொண்டிருந்தார்.

இந்த மணல் எல்லா இடத்திலும் போய்ப் புகுந்து கொள்கிறது. இதோ பார்..

ஒரு மணல் துணுக்கை, உலோகத்தினால் ஆன ஒரு குழாயின் உள்ளிருந்து வெற்றிகரமாக வெளியே எடுத்தார்.

இந்தத் துக்குணூண்டு மணல், ஒரு பெரிய லாரி யையே, நடுவழியில் நின்று போக வைத்து விட்டது..

ரமோட்ஸ்வே மொச்சுடி அரசாங்கப் பள்ளி ஆசிரியை சொல்லித் தந்த பாடலை நினைவு கூர்ந்தாள்..

ஒரு ஆணி இல்லாததனால்..

மீதி, அவள் நினைவுக்கு வர மறுத்தது.

குதிரை கீழே விழுந்தது..

- மட்கோனி அதை முடித்தார்.

எனக்கும் இதை சொல்லிக் கொடுத்திருக் கிறார்கள்.

அவர், கையில் இருந்த ஆயுதத்தை மேஜை மீது போட்டு விட்டு எழுந்தார். கெட்டிலில் தண்ணீர் பிடித்து, ஸ்டவ்வில் வைத்தார். பகல் மிகவும் வெப்பமாக இருந்தது. ஒரு தேநீர் அருந்தினால் களைப்பு போய் விடும் என்றே தோன்றியது.

ஆலிஸ் பூஸாங் பற்றியும் தான் கொடுத்த ஆதாரத்தைப் பார்த்ததும், அவளது அதிரடியான எதிர்த் தாக்குதலைப் பற்றியும் ரமோட்ஸ்வே, மட்கோனியிடம் கூறினாள்.

நீங்கள் அந்த பூஸாங் கைப் பார்த்திருக்க வேண்டும். பெண்களை தன் பக்கம் இழுக்கும் படியான ஆசாமி. தலை முடியை நன்கு சீவி கறுப்புக் கண்ணாடி, காலில் புத்தம் புது ஷு.. எல்லாமே.. இதெல்லாம் எவ்வளவு தமாஷாக இருந்தது என்று அவனுக்குத் தெரியவில்லை. நான் சாதாரணமான, இயல்பான ஆடைகளை உடுத்துகிற ஆண்களையே விரும்புவேன்..

மட்கோனி உடனே குனிந்து, தன் காலணிகளைப் பார்த்துக் கொண்டார். மிகச் சாதாரணமான, புழுதி படிந்த அழுக்கு ஷுக்கள், கால்சட்டை.. ரமோட்ஸ்வே அகராதிப்படி இயல்பாக இருக்கிறதா என்றுதான் தெரிய வில்லை.

அத்தனை அமர்க்களத்துக்குப் பிறகு, அவளிடம் என்னுடைய சம்பளத்தைக் கேட்க முடியவில்லை.

- ரமோட்ஸ்வே கூறினாள். மட்கோனி தலையசைத் தார். அவர் ஏதோ சிந்தனையில் மூழ்கியிருப்பது போலத் தோற்றமளித்தார். தான் பழுது பார்ப்பதற்காக வைத்திருந்த வாகனத்தின் உதிரி பாகங்களைக் கூட தொடாமல், ஜன்னல் வழியே வெறித்துக் கொண்டிருந்தார்.

எதைப் பற்றிக் கவலைப்படுகிறீர்கள்...

ரமோட்ஸ்வே மிருதுவாகக் கேட்டாள். ஒருவேளை, அவரது காதலை தான் மறுத்ததனால் ஏதாவது

மனவருத்தம் இருக்குமோ என்று கூட எண்ணினாள். அவர், இதற் கெல்லாம் ஆத்திரப்படுபவரோ, மனசுக்குள் கோபத்தை வைத்து மறுகுபவரோ இல்லையே..

ஒருவேளை, தன்னை அவர் வெறுக்கிறாரோ.. தான் அடிக்கடி அங்கு வருவது அவருக்குப் பிடிக்க வில்லையோ..

ரமோட்ஸ்வே, அவருடைய நட்பை இழக்க விரும்பவில்லை. அந்த ஊரில் மிகச் சிறந்த துணையாக அவர் மட்டும் இல்லையென்றால், தன் வாழ்க்கையே வெறிச்சோடி இருக்கும் என அவள் நினைத்தாள்.

ஏன் இந்தக் காதலும் - காமமும் வாழ்க்கையை இப்படியெல்லாம் அலைக் கழிக்கிறது? அது இல்லாமலேயே வாழ்க்கை நிம்மதியாக இருக்கிறது.. இப்போது அவளது வாழ்க்கையில் காமத்துக்கே இடமில்லை. அது ஒரு பெரிய ஆறுதலான விஷயமாக இருக்கிறது அவளுக்கு. பிறர் தன்னைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்றோ, மற்றவர்களது பார்வையில் தான் எப்படியிருக்கிறோம் என்றோ அவள் துளிக்கூடக் கவலைப்பட்டதில்லை.

ஆணாகப் பிறந்து, எப்போது பார்த்தாலும் படுக்கை அறையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பது எவ்வளவு அவஸ்தை? எல்லா ஆண்களுமே அப்படித் தானா? ஏதோ ஒரு புத்தகத்தில், ஒரு சாதாரண மனிதன், ஒரு நாளைக்கு அறுபது முறையாவது அதைப் பற்றி நினைக்கிறான் என்று போட்டிருந்ததை அவள் படித்திருந்தாள். அவள் அதை நம்பாவிட்டாலும், அந்தப் புள்ளி விவரம் அவ்வாறுதான் கூறியது.

நாள் முழுதும் ஏதாவது வேலையில் மூழ்கி இருப்பவர்கள், இது பற்றி எப்படி நினைத்துக் கொண்டிருக்க முடியும்? நாடித்துடிப்பை சரிபார்க்கும் டாக்டர் இப்படிப்பட்ட நினைப்பில் மூழ்க முடியுமா.. அல்லது, மேஜை மேல் உள்ள கேஸ் ஃபைல்களை ஆராய்ந்து கொண்டிருக்கும் வக்கீல்கள்.. அல்லது விமான ஓட்டிகள்...? இது கொஞ்சம் கூட நம்ப முடியாத ஒன்றாக அவளுக்குத் தோன்றியது.

கள்ளமற்ற முகமும் தெளிவான சிந்தனைகளும் கொண்ட மட்கோனி, கார் பாட்டரியை மாற்றும்போதும், காரின் மற்ற பழுது பார்க்கும் வேலைகளில் ஈடுபடும் போதும் அதைப் பற்றியா எண்ணிக் கொண்டிருப்பார்? அப்படிப்பட்ட நினைப்புடையவர்கள் இப்படி ஒரு பெண்ணின்

கண்களை நேரிடப் பார்த்துச் சிரிக்கத்தான் முடியுமா.. அல்லது வேலையின் மும்முரத்தில் நாக்கைத் துருத்திக் கொண்டு, செய்கிற காரியத்திலேயே கண்ணாக இருக்க முடியுமா..? இல்லை.. அது முடியாத ஒன்று.

நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்..?

இப்படிக் கேட்டு விட்டு, உடனே தன் தவறை உணர்ந்தவளாக நாக்கை கடித்துக் கொண்டாள்.

அவளது கேள்வி, நீ உன் மனசுக்குள் இப்போது நினைக்கும் விகாரங்களை வெளியே சொல்லேன்.. பார்க்கிறேன் என சவால் விடுவது மாதிரி அவளுக்குத் தோன்றியது.

அவர் எழுந்து, ஒருக்களித்து வைத்திருந்த கதவை நன்றாக மூடினார். அவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்க யாருமே இல்லை. இரண்டு எடுபிடி பையன்களும் மற்றொரு கோடியில் இருந்தனர்.

நீ வரவில்லை என்றால், நானே உன்னைப் பார்க்க வருவதாக இருந்தேன். நான் ஒன்று கண்டு பிடித்திருக்கிறேன்..

ரமோட்ஸ்வே நிம்மதிப் பெருமூச்சு விட்டாள்.

நல்லவேளை, நான் திருமணத்துக்கு ஒப்புக் கொள்ள வில்லை என்பதால் இவருக்கு வருத்தமில்லை..

என்ன விஷயம்? - அவள் எதிர்பார்ப்புடன் அவரை நோக்கினாள்.

ஒரு விபத்து... ரொம்பவும் பெரிய விபத்து ஒன்றுமில்லை. ஒருவருக்கும் அடிபடவில்லை. அதிர்ச்சி தவிர வேறு ஒன்றும் பெரிதாக இல்லை. பழைய நான்கு முக்கு வீதியில் நடந்தது.. ஒரு பெரிய டிரக், சுற்று வழியில் நிறுத்தாமல் வந்தான். கிராமத்திலிருந்து வந்த கார் மீது மோதிவிட்டான்.

பக்கத்திலிருந்த சாக்கடைக் குழியில் விழுந்து காருக்கு ஏகப்பட்ட நசுங்கல். டிரக்கின் முன் விளக்கு உடைந்து விட்டது. ரேடியேட்டரும் கொஞ்சம் நசுங்கி விட்டது. அவ்வளவுதான்.

அப்புறம்..?

மட்கோனி உட்கார்ந்து, தன்னுடைய கையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்தக் குழியிலிருந்து காரை மீட்க என்னைக் கூப்பிட்டனுப்பினார்கள். என்னுடைய கார் தூக்கும் வண்டியை எடுத்துப் போய் அதை மீட்டோம். அதை இழுத்து வந்து இங்கேதான் பின்புறத்தில் நிறுத்தி வைத்தோம். பிறகு அதை நான் உனக்குக் காட்டு கிறேன்..

மேலே பேசுவதற்கு அவர் மிகவும் தயங்கினார். இதுவரை அவர் சொன்ன விஷயம் சாதாரணமானதாகத் தோன்றியது ரமோட்ஸ்வேக்கு. இருந்தாலும் அவர் தயங்குவதைப் பார்த்து, சொல்ல வந்த விஷயம் வேறு ஏதோ இருக்கிறது என்பதை அவளால் ஊகிக்க முடிந்தது.

அந்த வண்டியைப் பிரித்துப் பார்த்தேன். காரின் டாஷ்போர்ட்டைத் திறந்து பார்க்கும்படி நேர்ந்தது. அதற்குள் ஒரு சின்னப் பையைப் பார்த்தேன். அதை நான் திறந்து பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. ஆனாலும் பார்த்தேன்.

ரமோட்ஸ்வேயின் நெஞ்சு படபடவென அடித்துக்கொண்டது.

ஏதோ கடத்தல் சமாசாரம் போலிருந்தது.

வைரமா?

இல்லை என்ற மட்கோனி உடனேயே சொன்னார்..

அதை விட மோச மானது..

அவர், அந்தப் பையை எடுத்து மேஜை மீது வைத்தார்.

அது தோலினால் ஆன, சின்ன மணி பர்ஸ் மாதிரி இருந் தது. அம்புகளுக்குத் தடவும் பசை, மருந்துச் செடிகள் போன்றவை (பஸார்வா என்கிற இனத்தவர் உபயோகிப்பது) வைக்கும் பை போல இருந்தது.

நானே திறக்கிறேன். நீ அதைத் தொட வேண்டாம்..

பையின் வாயை இறுக்கியிருக்கும் கயிறுகளைப் பிரிக்கும்போது, கெட்ட வாடையையுடைய வஸ்துவை எடுப்பது போல அவரது முகம் மாறியது.

ஒரு விதமான பழைய அழுகிய நாற்றம் அடித்தது.

அவர், அவற்றை மேஜையில் பரப்பும் வரையில் ரமோட்ஸ்வே ஒன்றும் சொல்லவில்லை.

அந்தப் பரிதாபகரமான சின்னங்கள்..

எலும்பும் தோலின் பாகமும், சின்ன மரத்தினால் செய்யப்பட்ட மூடியுடன் கூடிய குப்பி, அதன் உள்ளே இருக்கும் பயங்கரம்..

என்னவென்று சொல்வது?

மட்கோனி, கையினால் தொட விருப்பமின்றி, பென்சிலால் அதை நகர்த்தினார்.

அது ஒரு எலும்புத் துண்டு!

-------------------------------------------------------------

ஈகரை தமிழ் களஞ்சியம் - www.eegarai.net

நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 15

-------------------------------------------------------------

ஆ லிஸின் கணவருடன் தான் எடுத்துக் கொண்ட புகைப்படத்தை ரமோட்ஸ்வே காட்ட, கோபத்தில் ரமோட்ஸ்வேயை மிகக் கேவலமாக திட்டுகிறாள் ஆலிஸ். இந்த விஷயத்தை மட்கோனியிடம் பகிர்ந்து கொள்ள செல்கிறாள் ரமோட்ஸ்வே. அப்போது அவளிடம் விபத்தில் சிக்கிய ஒரு காரில் இருந்து தான் கண்டெடுத்த பொருளைக் காட்டுகிறார் மட்கோனி. அது அழுகிய சதையுடன் கூடிய ஒரு எலும்புத் துண்டு!

பா ர்.. இதுதான் எனக்குக் கிடைத்தது.. என்றார் மட்கோனி.

ரமோட்ஸ்வே எழுந்து, கதவை நோக்கிச் சென்றாள். அவளுக்கு வயிற்றைப் புரட்டியது.

நான் அந்த எலும்பை எடுத்துப் போய் பரிசோதிக்க விரும்புகிறேன்.. அது ஒருவேளை ஏதாவது மிருகத்தினுடையதாக இருக்கலாம். மான் அல்லது வேறு வகையானதின் எலும்பாக இருக்கலாம்.

மட்கோனி அதை மறுத்தார். தலையைக் குலுக்கியபடி கூறினார்:

அது என்னவென்று எனக்குத் தெரியும்..

இருந்தாலும் பரவாயில்லை. அதை ஒரு உறையில் போட்டுக் கொடுங்கள். நான் எடுத்துச் செல்கிறேன்..

மட்கோனி மறுப்பதற்கு வாயெடுத்து, பின்னர் பேசாதிருந்து விட்டார். இம்மாதிரி விஷயங்களில் விளையாடுவது ஆபத்தானது என்று எச்சரிக்கை செய்ய விரும்பினார். அப்படி எச்சரித்தால், அந்தக் குறிப்பிட்ட இனத்தாரின் பழக்க வழக்கங்களிலும், அவர்களின் அமானுஷ்ய சக்தி பற்றிய கருத்துக்களிலும் அவருக்கும் நம்பிக்கை இருப்பதாக ஆகிவிடும். அவருக்கு அந்த சக்தியில் கொஞ்சமும் நம்பிக்கை கிடையாது.

அவள், அந்த உறையைக் கையில் எடுத்துக் கொண்டு சிரித்தாள்.

எனக்கு ஒன்றும் ஆகாது. எனக்கு வேண்டிய பாதுகாப்பு இருக்கிறது..

மட்கோனிக்கு அவளது ஜோக்கைக் கேட்டுச் சிரிக்க வேண்டும் போல இருந் தது. ஆனால், சிரிக்க முடியவில்லை.

அவள் அப்படிச் சொன் னது, கடவுளையே சவாலுக்கு அழைப்பது போன்றது. அதனால், அவளுக்கு ஒரு தீங்கும் வரக் கூடாது என அவர் நினைத்தார்.

எனக்கு ஒன்று மட்டும் தெரிய வேண்டும். அந்த காரின் சொந்தக்காரர் யார்?

மட்கோனி வேலை செய்யும் பையன்களைப் பார்த்தார். அவர்கள் மிகவும் தொலைவில், இவர்களுடைய பேச்சு காதில் விழாத தூரத்தில் இருந்தபோதிலும், குரலை மிகவும் தாழ்த்தி, சார்லி கோட்ஸ்ஸே.. அவன்தான் என்றார்.

ரமோட்ஸ்வே விழிகளை அகல விரித்தாள்.

கோட்ஸ்ஸேவா? அந்தப் பெரிய புள்ளியா?

மட்கோனி தலையசைத்தார். கோட்ஸ்ஸேவை அனைவரும் அறிவார்கள். மிகவும் செல்வாக்கு உள்ளவன், அவனுக்கு எல்லோரையும்.. அதாவது, முக்கியமானவர்கள் எல்லோரைப் பற்றியும் தெரியும். அவனுக்கு எல்லா வீட்டுக் கதவுகளும் திறந்திருக்கும். அவனுடைய தேவை, விருப்பம் எதுவானாலும் அதை மறுக்க ஒருவரும் இல்லை. கோட்ஸ்ஸேக்கு மக்களிடம் உள்ள பயம் கலந்த மதிப்பே தனி.

அவன் யாரிடமாவது, ஏதாவது ஒன்று செய்யும்படி கேட்டால், அவர்கள் அதை கண்டிப்பாகச் செய்யத்தான் வேண்டும். மறுத்தால் பல இடைஞ்சல்களை சந்திக்க வேண்டியிருக்கும். அவனது செயல்பாடுகள் மிகவும் சாமர்த்தியமாக இருக்கும். உதாரணத்துக்கு நீ அவனுக்கு விருப்பமில்லாமல் ஒரு அனுமதிக்கு விண்ணப்பித்தால் - வியாபாரத்துக்கோ, கார் ஓட்டுவதற்கோ எதுவானாலும் சரி, எதிர்பாராத தாமதங்கள்.. நீ போகும் பாதையில் வேகக் கட்டுப்பாடு தடைகள் அல்லது உன்னுடைய ஆட்கள் உன்னை விட்டு விலகி வேறு இடத்துக்கு வேலைக்குப் போய் விடுவது.. போன்ற பல துன்பங்கள் உண்டாகும். இவர்தான் காரணம் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாத காரணங்கள்..

அடப் பாவமே.. என்றாள் ரமோட்ஸ்வே.

உண்மைதான். என்ன செய்வது.. என்றார் மட்கோனி.

கா பரோனில் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இந்த அளவுக்குத் தொழிற்சாலைகள் இல்லை. இப்போது காபரோன் அடையாளமே தெரியாமல் மாறியிருந்தது. ரமோட்ஸ்வேக்கு ஒன்றிரண்டு தொழிற் சாலை நிர்வாகிகளையும் ஒரு தொழிற்சாலை உரிமை யாளரையும் தெரிந்திருந்தது.

அந்த உரிமையாளர் போட்ஸ்வானாவில் இருந்து வந்தவர். அவர் அங்கே சிறிய தாழ்ப்பாள் ஆணி தயாரிப்புத் தொழிலை ஆரம்பித்தார். புலவாயோவில் பழைய இயந்திரங்களை மலிவான விலைக்கு வாங்கினார். வேலைகளைச் செய்வது, அவரும் அவருடைய மைத்துனர் களும் மட்டுமே. மரத்தடியில் உட்கார்ந் திருக்கும் மனவளர்ச்சி குன்றிய ஒரு பையனும் இவர்களுடன் இருந்தான். ஆனால், அவன் ஆணிகளைத் தரம் பிரிப்பதில் கெட்டிக்காரனாக இருந்தான்.

அவரது தொழில் நன்றாக வளர்ச்சி அடைந்தது, ஏனெனில், அவரது எண்ணங்கள் எளிமையாக இருந்தன. அந்தத் தொழிற்சாலை ஒரே விதமான ஆணிகளை மட்டுமே தயாரித்தது. இரும்புத் தகடுகளைக் கூரையாக இணைப்பதற்கு உதவும் ஆணிகள்தான் அவை. அதற்குத் தேவையானதெல்லாம் ஒரேயரு இயந்திரம் மட்டும்தான். அதுவும் அடிக்கடி தொந்தரவு, ரிப்பேர் எதுவும் வராத இயந்திரமாக இருந்தது.

ஹெக்டர் லெபோடைஸ்.. இந்தத் தொழிற்சாலையின் உரிமையாளரின் பெயர் இதுதான். ராமோட்ஸ்வேக்கு அவரை முதலில் தெரிய வந்தபோது, அவரிடம் முப்பது ஆட்கள் வேலை பார்த்தனர். வடக்கு மாலாவாய் வரையில் அவர் செய்த ஆணிகள் விற்பனைக்கு அனுப்பப்பட்டன.

அவரிடம் வேலை செய்தவர்களில், மனநிலை குன்றிய சிறுவனைத் தவிர மற்றவர்கள் எல்லாருமே அவருடைய உறவினர்கள். அந்தச் சிறுவனுக்குக் கூட, தேநீர் கொண்டு வந்து தரும் பையனாக பதவி உயர்வு தரப்பட்டது.

தொழில் வளர வளர உறவினர்கள் எண்ணிக்கை போதாமல், வெளி மனிதர்களையும் ஹெக்டர் வேலைக்குச் சேர்த்துக் கொண்டார். ஆரம்பத்தில் இருந்த மாதிரியேதான் எல்லோரிடமும் மனிதாபிமானத்துடன் நடந்து கொண்டார். யாராவது இறந்து விட்டாலோ, அல்லது உண்மையாகவே உடல் நலமில்லாமல் போனாலோ முழுச் சம்பளத்துடன், விடுப்பும் கொடுத்தார். அவருடைய ஆட்கள், அவரிடம் மிகவும் விசுவாசத்துடன் இருந்தனர். முப்பது வேலையாட்களில் பன்னிரண்டு பேர் மாத்திரமே உறவினர்கள். சில நேரங்களில் ஹெக்டரின் மனிதாபிமானத்தை சுயநலத்துக்காக பயன்படுத்துபவர்களும் இருந்தார்கள். அப்படி ஒரு தொழிலாளி விஷயத்தில்தான் அவருக்கு ரமோட்ஸ்வேயின் உதவி தேவைப்பட்டது.

எனக்கு என்ன செய்வது என்றே தெரிய வில்லை..

காபியை பருகியவாறு கூறிய ஹெக்டர்..

முதலிலிருந்தே எனக்கு அவன் மீது அவநம்பிக்கையாகத்தான் இருந்தது. ஆறு மாதம் முன்புதான் என்னிடம் வேலைக்குச் சேர்ந்தான். இப்போது இது வேறு.. என்றார்.

அவன், இதற்கு முன்பு எங்கே வேலை செய்து கொண்டிருந்தான்? எனக் கேட்ட ரமோட்ஸ்வே, அவனைப் பற்றி அவர்கள் என்ன சொல்கிறார்கள்? என்றும் கேட்டாள்.

ஹெக்டர் தோளைக் குலுக்கிக் கொண்டார்.

எல்லைப்புறத் தொழிற்சாலை ஒன்றிலிருந்து, அவனது நன்னடத்தைக் கான சான்று இருந்தது. நான் அவர்களுக்கு எழுதினேன். ஆனால், அவர்கள் பதில் ஒன்றும் போடவில்லை. சிலர் நம் பிரச்னைகளில் அக்கறை காட்டுவதே இல்லை.

ரமோட்ஸ்வே அதை ஆமோதித்தாள்.

எல்லாருமே மோசமானவர்கள் எனச் சொல்லிவிட முடியாது. ஆனால், முக்கால்வாசிப் பேர் ரொம்பவும் மோசமாக இருப்பதனால், சில நல்ல மனிதர்களின் நல்ல சுபாவங்களும் அடிபட்டுப் போய்விடுகிறது. இது ரொம்பவும் வருந்தத்தக்கது..

அவன் என்னிடம் ஆறு மாதங்களுக்கு முன்புதான் வந்தான். அவன் நன்றாக வேலை செய்ததால், ஒரு டச்சுக்காரரிடம் நான் வாங்கிய புதிய இயந்திரத்தில் வேலை செய்ய அவனை அனுமதித்தேன். ஐம்பது புலா உயர்த்திக் கொடுத்தேன். திடீரென்று ஒரு நாள் வேலையை விட்டு நின்று விட்டான்..

ஏதாவது காரணம் உண்டா?

ரமோட்ஸ்வே கேட்க, ஹெக்டர் தீவிரமாக யோசித்து, எனக்குத் தெரிந்து எந்தக் காரணமும் இல்லை. வெள்ளிக்கிழமை சம்பளத்தை வாங்கிக் கொண்டு சென்றவன் திரும்பவேயில்லை. இது இரண்டு மாதங்களுக்கு முன்பு நடந்த விஷயம். அடுத்து, மாஃபேயிலிருந்து, ஒரு வக்கீல் என்னைத் தொடர்பு கொண்டார். அவன் என் தொழிற்சாலையில் வேலை பார்த்தபோது ஏற்பட்ட விபத்தில் விரலை இழந்ததனால், நஷ்ட ஈடாக நாலாயிரம் புலா நான் தர வேண்டும் என எச்சரிக்கை விடுத்திருக்கிறார் அந்த வக்கீல்..

ரமோட்ஸ்வே இந்தப் புதிய தகவலை அசை போட்டபடியே, இருவருக்கும் இன்னொரு கோப்பை காபியை ஊற்றினாள்.

ஏதாவது விபத்து நடந்ததா என்ன?

விபத்துப் புத்தகம் எங்கள் ஆபீஸில் உள்ளது. யாராவது, ஏதேனும் விபத்தில் பாதிக்கப்பட்டால், அதை அந்தப் புத்தகத்தில் எழுத வேண்டும். வக்கீல் சொன்ன தேதியைப் பார்த்தபோது, மாரெட்ஸி, வலது கை விரலில் காயம் பட்டதாக எழுதியிருந்தான். நான் எல்லோரையும் விசாரித்தேன். அவன், விரலில் அடிபட்டு விட்டதாகக் கூறியிருக்கிறான். அவன் இயந்திரத்தைச் சற்று நிறுத்திவிட்டு விரலுக்குக் கட்டுப் போட்டு வருவதாகச் சொல்லிப் போனானாம். அவர்கள், அது ஒன்றும் பெரிய காயமாக இருக்காது என்றே நினைத்தனர். எல்லோரும் அது பற்றி மறந்தும் போய்விட்டனர்.

அப்புறம் அவன் போய் விட்டான்..

ஆமாம்.. சில நாட்கள் கழித்து..

ஹெக்டர் கூற, ரமோட்ஸ்வே அவரைப் பார்த்தாள்.

ஒரு நல்ல, நாணயமான முதலாளியாகத்தான் அவர் தோற்றமளித்தார்.

யாருக்கு ஆபத்து என்றாலும், அவரால் முடிந்த உதவியை உடனே செய்திருப்பார் என்றே அவள் நம்பினாள்.

ஹெக்டர் காபியில் ஒரு மிடறு விழுங்கினார்.

நான் அவனை நம்ப வில்லை. எப்போதுமே நம்பவில்லை என்றுதான் நினைக்கிறேன். என்னுடைய தொழிற்சாலையில் அவன் நிச்சயம் விரலை இழந்திருக்க முடியாது. வேறு எங்கேயாவது அந்த விபத்து நேர்ந்திருக்க லாம். அதற்கும் எனக்கும் ஒரு தொடர்பும் இல்லை..

ரமோட்ஸ்வே புன்னகைத் தாள்.

அந்த விரலைத் தேடி கண்டுபிடிக்க வேண்டும். அதற்காகத்தானே என்னைக் கூப்பிட்டனுப்பினீர்கள்?

ஹெக்டர் பெரிதாகச் சிரித் தார்.

ஆமாம், ஆமாம்.. அது மட்டுமில்லை. நான், இங்கு வந்து உட்கார்ந்து உன்னுடன் பேசிக் கொண்டிருப்பதை மிகவும் விரும்புகிறேன். உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று கூட எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நீ ஒரே பதிலைத்தான் கூறுவாய் என்பது எனக்குத் தெரியும்..

ரமோட்ஸ்வே, அந்த சிநேகிதனின் கையை ஆதரவாக தட்டிக் கொடுத்தாள்.

திருமணம் எல்லாம் நன்றாகத்தான் இருக்கும். ஆனால், துப்பறியும் நிறுவனம் நம்பர் 1 ஆக இருப்பது என்பது அத்தனை சுலபமானதல்ல. என்னால், வீட்டில் உட்கார்ந்து சமைத்துப் போட முடியாது. உங்களுக்கே அது தெரியும்..

ஹெக்டர் தலையசைத்தார்.

ஒரு சமையல்காரி இல்லை.. இரண்டு சமையல்காரியை ஏற்பாடு செய்கிறேன். நீ துப்பறியும் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கலாம்..

ரமோட்ஸ்வே வேகமாக மறுத்தாள்.

நீங்கள் எவ்வளவுதான் என்னிடம் கேட்டாலும் என் பதில் இதுதான். நீங்கள் என் சிநேகிதராக இருப்பது எனக்குப் பிடித்திருக்கிறது. கணவனாக முடியாது. எனக்கு கணவன் வேண்டியதில்லை. என் வாழ்வில் கணவன் என்கிற வார்த்தைக்கே இடமில்லை.

ஹெக்டர், அவளையே பார்த்தார்.

ரமோட்ஸ்வே, ஹெக்டரின் அலுவலகத்தில் உள்ள காகிதங்களை ஆராய்ந்தாள்.

மேஜை மீது ரசீதுகள், பில், தொழில் சம்பந்தமான பட்டியல் எல்லாம் ஏகத்துக்கும் இறைபட்டுக் கிடந்தன.

எனக்கு ஒரு மனைவி இருந்தால், இந்த ஆபீஸ் இவ்வளவு களேபரமாக இருந்திருக்காது. உட்காரப் போதுமான இடம் இருந்திருக்கும். மேஜை மீது பூங்கொத்துக்கள் அலங்கரித் திருக்கும். ஒரு பெண் இருந் தால், அதுவே தனிதான்..

ஹெக்டர் சொல்ல, ரமோட்ஸ்வே புன்னகைத்தபடி பதில் பேசாமல் இருந்தாள். பிசுக்கு பிடித்த புத்தகம் ஒன்றை ஹெக்டர் மேஜை மீது வைக்க.. அதைப் புரட்டினாள். அதுதான் விபத்து பற்றிய விவரங்கள் அடங்கிய புத்தகம். மாரெட்ஸியின் கொட்டைக் கையெழுத்தில், அரைகுறை யாகப் படித்தவன் போல இந்த விபத்து பற்றி அவன் எழுதியிருந்தான்.

மாரெட்ஸியின் கட்டை விரலுக்கு அடுத்த இரண்டாவது விரல்தான் இயந்திரத்தினால் பாதிக்கப்பட்டது. வலது கை. தனக்குத் தானே கட்டு போட்டிருக்கிறான்.

மாரெட்ஸி தன் கையெழுத்தைப் போட்டிருந்தான். சாட்சிக் கையெழுத்து ஜீசஸ் க்ரைஸ்ட் என இருந்தது.. அதைத் திரும்பப் படித்த ரமோட்ஸ்வே, வக்கீலின் கடிதத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தாள். தேதிகள் சரியாக இருந்தன.

என் வாடிக்கையாளர், இந்த விபத்து மே மாதம் 10-ம் தேதி நடந்ததாகக் கூறுகிறார். மறுநாள் பிரின்ஸஸ் மெரினா மருத்துவ மனைக்குப் போனதாகக் கூறுகிறார். அவர்கள் கட்டுப் போட்டு அனுப்பினார்கள். ஆனால், அது அழுக ஆரம்பித்து விட்டதால், க்ஷமறு வாரம் அறுவை சிகிச்சை மூலம் அந்த விரல் அகற்றப்பட்டது (காண்க: மருத்துவமனையின் சான்றிதழ்). இயந்திரத்தின் ஓடும் பாகங்களை, உங்கள் நிறுவனம் சரியானபடி மூடி வைக்காத அலட்சிய மனப்பான்மைதான் இந்த இழப்புக்குக் காரணம் என்கிறார், என்னுடைய கட்சிக்காரர். அதனால், நஷ்ட ஈடு கேட்டு வாங்கித் தருமாறு என்னிடம் கேட்டுக் கொண்டார்.

எல்லோருடைய நன்மைகளையும் கருத்தில் கொண்டு, விரைவில், அவர் கேட்ட 4,000 புலாவை கொடுத்து விடுவது நல்லது. கோர்ட், கேஸ் என்று போனால் விதிக்கப்படும் நஷ்ட ஈட்டை விடவும் இது குறைவானதுதான். இருப்பினும் என் கட்சிக்காரர், இந்தத் தொகைக்கு ஒப்புக் கொள்கிறார்.

ரமோட்ஸ்வே, அந்த மருத்துவச் சான்றிதழைக் கூர்ந்து படித்தாள். சான்றிதழ் மிகச் சரியாக இருந்தது. வக்கீல் கூறியது போல இருந்தது. தேதி சரியாக இருந்தது. கீழே டாக்டரின் கையெழுத்து இருந்தது. அந்த டாக்டரை ரமோட்ஸ்வேக்குத் தெரியும்.

அவள் தலையை உயர்த்தியபோது, எதிரில் ஹெக்டர் எதிர்பார்ப்புடன் நின்று கொண்டிருந்தார்.

எல்லாம் சரியாக இருக்கிறது.. அவன் கையில் காயம் பட்டு, புரை யோடிப் போய் விட்டது. இன்ஷூரன்ஸ் காரர்கள் என்ன சொல்கிறார்கள்?

ஹெக்டர் பெருமூச்செறிந்தார்.

நான் கொடுக்கத்தான் வேண்டும் என்று சொல்கிறார்கள். அவர்கள், எனக்கு நஷ்ட ஈடு அளிப்பார்களாம். அதுதான் சிக்கனமான வழி. வக்கீல்களுக்கு சம்பளம் கொடுத்து வழக்கை நடத்தினால் நஷ்ட ஈட்டுத் தொகையை விடவும் அதிகமாக ஆகும். 10,000 புலாக்கள் வரை நஷ்ட ஈடாகக் கொடுப்பது கூடப் பெரிய விஷயமில்லை. ஆனால், இது பற்றி வெளியே தெரிய வேண்டாம் என்கிறார்கள். தெரிந்தால், அவனவன் பிடுங்க ஆரம்பித்து விடுவான் என்கிறார்கள்.

நீங்கள் அப்படியே செய்யலாமே.. - ரமோட்ஸ்வே சொன்னாள்.

விபத்து நடக்கவே இல்லை என்று நிரூபிப்பது ரொம்பவும் கஷ்டம். அந்த மனிதனுக்கு விரல் போனதென்னவோ உண்மை. இன்ஷுரன்ஸ் கம்பெனி, இந்த நஷ்ட ஈட்டைத் தருவதற்குச் சம்மதிக்கும்போது உங்களுக்கு என்ன பிரச்னை?

அவள் கேட்கவில்லை. ஆனால், இந்த எண்ணம் அவள் மனதில் ஓடியது.

ஹெக்டர் அவள் நினைப்பதைப் புரிந்து கொண்டார்.

நான் தர முடியாது. கண்டிப்பாக முடியாது. எவனோ ஒருவன் ஏமாற்றுவதற்கு நான் ஏன் பணம் தர வேண்டும்? நான் இப்போது கொடுத்தால், அவன் இன்னொருவனிடம் வேலைக்குப் போவான். அங்கேயும் இப்படி ஏதாவது செய்வான். அதை விட 4,000 புலாவை, நியாயமாகத் தேவைப்படுவோர் யாருக்காவது தரலாம்.

அவர், ஆபீஸையும் தொழிற் சாலையையும் இணைக்கும் கதவைச் சுட்டிக் காட்டினார். அங்கே ஒரு பெண்மணி வேலை செய்கிறாள். அவளுக்குப் பத்து குழந்தைகள். அவள் நன்றாக வேலை செய்வாள். 4,000 புலா அவளுக்குக் கிடைத் தால், பாவம்.. என் னென்ன செய் வாள்..?

ஆனால், அவளுக்கு விரல் போக வில்லையே.. - ரமோட்ஸ்வே சிரித்தாள். அவனுக்கு, பழையபடி நன்றாக வேலை செய்ய முடியாதபோது, இந்தப் பணம் உதவி யாக இருக்கும் இல்லையா?

சேச்சே.. அவன் ஒரு பெரிய கில்லாடி. அவனை வேலையை விட்டு நீக்க எனக்கு ஒரு காரணமும் கிடைக்கவில்லை. ஆனால், அவன் நம்பகமானவன் இல்லை என்று எனக்குத் தோன்றியது. இன்னும் இங்கே இருக்கிற சில பேருக்குக் கூட அவனைப் பிடிக்காது. மூளை வளர்ச்சி குன்றிய அந்தத் தேநீர் பையன் கூட அவனுக்கு தேநீர் எடுத்துப் போக மாட்டான். அவனுடைய உள்ளுணர்வுக்குக் கூட ஏதோ தோன்றியிருக்கிறது.

ஆனால், சந்தேகப்படுவது என்பது வேறு.. அதை சாட்சியங்களுடன் உறுதி செய்வது என்பது வேறு.. - ரமோட்ஸ்வே கூறினாள்.

லாபாட்ஸேயில் உள்ள ஹைகோர்ட்டில் இவன் சரியானவன் இல்லை என்று சும்மா அளந்து விட முடியாது. ஜட்ஜ் உங்களைப் பார்த்து சிரிப்பார். இப்படிச் சொன்னால் சும்மா சிரிக்கத்தான் செய்வார்கள். வேறென்றும் செய்ய மாட்டார்கள்.

ஹெக்டர் மௌனமாக இருந்தார்.

பேசமால், இன்ஷுரன்ஸ் மனிதர்கள் கூறுவது போல நஷ்ட ஈடு கொடுத்து விடுங்கள். இல்லாவிட்டால், 4,000 புலாவுக்கு அதிகமாகவே நீங்கள் செலவு செய்ய வேண்டியிருக்கும்.

ஹெக்டர் தலையாட்டி மறுத்தார்.

ஒருக்காலும் நான் செய்யாத ஒன்றுக்கு பணம் தர முடியாது..

இப்படி பல்லைக் கடித்தவாறு கூறினார்.

இந்த ஆள் என்ன சூழ்ச்சி செய்கிறான் என்பதை நீ கண்டுபிடிக்க வேண்டும். இன்னும் ஒரு வாரத்துக்குள் நான் செய்வது தவறு என்று நீ கூறினால், நான் தயங்காமல், முணுமுணுக்காமல் பணத்தைக் கொடுத்து விடுகிறேன். சரிதானா..

ரமோட்ஸ்வே சம்மதித்தாள். நஷ்ட ஈடு தர வேண்டிய அவசியம் இல்லாதபோது தருவதற்கு அவளுக்கும் விருப்பமில்லை. ஒரு வாரத்துக்கு அவள் கேட்கப் போகும் சம்பளமும் அதிகமாக இருந்து விடப் போவதில்லை.

ஹெக்டரிடம் நிறைய பணம் இருந்தது. தன்னுடைய கொள்கைகளை அவரால் கடைப்பிடிக்க முடியும். ஒருவேளை, மாரெட்ஸி பொய் சொல்லியிருந்தால் அவனுக்கு பதிலடி கொடுப்பது சரிதான். அதனால் அவள் ஒப்புக் கொண்டாள். காரை ஓட்டிச் செல்லும்போதே, காணாமல் போன விரலுக்கும் ஹெக்டரின் தொழிற் சாலைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதை எப்படி நிரூபிப்பது என்று யோசித்தபடியே சென்றாள்.

அவளுடைய அலுவலக அறைக்குள் அவள் நுழையும்போது, அவளுக்கு இது பற்றி எந்தவொரு வழியும் தெரியவில்லை. தீர்வு காண முடியாத வழக்காகவே அவளுக்குத் தோன்றியது. சமையலறைக்குச் சென்று தேநீர் போட ஆரம்பித் தாள்.

ஹெக்டரைப் பற்றி அவள் சிந்தனை ஓடியது. அவர் மிகவும் பிடிவாத குணமுள்ளவர். அது எல்லோருக்குமே தெரியும். இருந்தாலும், அதற்காகவே அவள் அவரை மதித்தாள்.

எதற்காக நஷ்ட ஈடு தர வேண்டும்? இவர் என்ன சொன்னார்.. இப்போது நான் கொடுத்தால், அவன் இன்னொருவனிடம் சென்று ஏதாவது கோல்மால் செய்ய மாட்டான் என்பது என்ன நிச்சயம்? என்றுதானே சொன்னார்..

ஒரு நிமிட யோசனைக்குப் பிறகு, தேநீர் கோப்பையை மேஜை மீது வைத்தாள்.

அவள் மனதில் திடீரென்று ஓர் எண்ணம்.. நல்ல யோசனைகள் எல்லாம் அவளுக்கு அப்படித்தான் உதய மாகும்.







ஒ ருவேளை மாரெட்ஸி முன்னதாகவே யாரிடமாவது இதேபோல் வம்படியாக நஷ்ட ஈடு

வாங்கியிருக்கலாம் இல்லையா? ஹெக்டர்தான் முதல் மனிதராக இருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லையே..

இந்த க்ளூ தோன்றிய பிறகு ரமோட்ஸ்வேயால் நிம்மதியாகத் தூங்க முடிந்தது. மறுநாள் காலையில் எழுந்தவுடன் சில விசாரிப்புகள், மால்.ஃ.பேயில் இருக்கும் அந்த வக்கீலின் அலுவலகத்துக்கு ஒரு நடை போய் வருவது.. இதுவே அவனுடைய பொய்யான நஷ்ட ஈட்டுத் தொந்தரவுக்கு ஒரு முடிவு கட்டக் கூடியதாக இருக்கும் என்கிற நம்பிக்கையுடன் எழுந்தாள். சீக்கிரமாகவே காலை உணவை முடித்து கொண்டு தன் அலுவலகத்துக்குச் சென்றாள்.

அவள் அலுவலகத்தைப் பெருக்கும் பெண்மணி இவள் போகும்போதே வந்து விட்டிருந்தாள். ரமோட்ஸ்வே, அவளுடைய குடும்ப நிலை பற்றி விசாரித்தாள். அவளுடைய ஒரு மகன் ஜெயில் வார்டனாக வேலை பார்த்து வந்தான். இன்னொருவன் ஒரு ஹோட்டலில் சமையல் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தான். அவர்கள் இருவருமே தங்கள் தொழிலில் வளர்ச்சி அடைந்திருந்தனர். ரமோட்ஸ்வேக்கு அவர்களது சாதனைகளைக் கேட்டு அறிவது மிகவும் விருப்பமான ஒன்று. ஆனால், இன்று அதிகமாகப் பேசாமல் வேலையில் மும்முரமாகி விட்டாள். வணிகப் புத்தகத்தில் அவள் தேடிய செய்தி கிடைத்தது. காபரோனில் பத்து இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் இருந்தன. அதில் நான்கு சிறிய நிறுவனங்கள் தனிப்பட்ட விசேஷ முறையில் இயங்கி வந்தன. மற்ற ஆறு கம்பெனிகளும், அந்தச் சிறிய நிறுவனங்களுக்கான வேலைகளையும் சேர்த்துச் செய்யும். அந்த நிறுவனங்களின் பெயர், போன் நம்பர், விலாசம்.. இவற்றைப் பட்டியலிட்டு வேலைகளை ஆரம்பித்தாள்.

போட்ஸ்வானா ஈகிள் கம்பெனிக்கு முதலில் போன் செய்தாள். அவர்கள் உதவி செய்யத் தயாராக இருந்தும், இவளுக்குத் தேவையான தடயங்கள் கிடைக்கவில்லை. அதே மாதிரி மியூச்சுவல் லை.ஃப் கம்பெனி, சதர்ன் ஸ்டார் கம்பெனி போன்றவற்றிலிருந்தும் அவளுக்குத் தேவையான தகவல்கள் கிடைக்கவில்லை. கலஹாரி விபத்து நஷ்ட ஈட்டு கம்பெனியிலிருந்து மூன்று மணி நேரத் தேடலுக்குப் பிறகு, அவளுக்குத் தேவையான தகவல்கள் தரப்பட்டன.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு கார் ரிப்பேர் கம்பெனியில் மாரெட்ஸி என்கிற பெயரில் ஒரு ஆள், பெட்ரோல் போடும்போது, பம்ப்பை மாட்டுகையில் விரல் சிக்கித் துண்டாகி விட்டதாக நஷ்ட ஈடு கேட்டிருக்கிறான் .. - என்று அந்தக் கம்பெனியிலிருந்த பெண்மணி கூறியவுடன், ரமோட்ஸ்வேயின் இதயம் துள்ளிக் குதித்தது!

4,000 புலாவா?

கிட்டத்தட்ட அந்தத் தொகைதான் இருக்கும். 3,800 புலாவுக்கு நாங்கள் ஒப்புக் கொண்டோம்.

வலது கைதானே.. கட்டை விரலிலிருந்து இரண்டாவது விரல்தானே..

குமாஸ்தா, காகிதங்களைப் புரட்டிப் பார்த்து விட்டு, ஆமாம்.. டாக்டர் சர்டி.ஃ.பிகேட் கூட இருக்கிறது.. அது மெடிக்கல் லாங்குவேஜில் இருப்பதால், எனக்கு முழுசாகச் சொல்லத் தெரியவில்லை என்றாள்.

அதாவது, விரலின் ஆரம்ப மூட்டுப் பகுதியிலிருந்து வெட்டப்பட்டிருக்கிறது.. அப்படித்தானே?

அதேதான்...

குமாஸ்தா உறுதிபட சொன்னாள்.

ரமோட்ஸ்வே இன்னும் சில விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, குமாஸ்தாவுக்கு நன்றி கூறினாள்.

இத்தனை சீக்கிரம் ஏமாற்று வேலையைக் கண்டுபிடித்த திருப்தியை, சில நிமிடங்கள் அனுபவித்து அசை போட்டாள். ஆனாலும் இன்னும் சில விவரங்கள் அவளுக்குத் தேவைப்பட்டன. அதற்கு அவள் மால்.ஃ.பே போய்த்தான் ஆக வேண்டும். மாரெட்ஸியையும்.. முடிந்தால், அவனுடைய வக்கீலையும் பார்க்க அவள் மிகவும் ஆவலாக இருந்தாள். இரண்டு மணி நேர, கடினமான .ஃ.பிரான்ஸிஸ் டவுன் ரோடு பயணம் - ஆனால், அது பயனுள்ளதாக இருக்கும் என்கிற நினைப்பே அவளுக்கு மகிழ்ச்சியளித்தது.

அந்த வக்கீல், அன்று பகலே அவளை சந்திக்க சம்மதித்தார். ஹெக்டர் தன்னுடைய

கட்சிக்காரனின் கோரிக்கைக்கு சம்மதித்து அவளை அனுப்பியிருப்பதாக அவர் எண்ணினார். எப்படியாவது சரிக்கட்டி தன்னுடைய கட்சிக்காரர் கேட்ட தொகையை வாங்கித் தர வேண்டும்.. முடிந்தால் பல புதிய எதிர்பாராத திருப்பங்களினால் 4,000 புலா போதவில்லை.. சற்று அதிகமாகக் கேட்க நேரிடுகிறது என்று கூட அவர், அவளுடன் வாதாட எண்ணினார். தன்னுடைய சட்ட நுணுக்கமான பேச்சினால் அவளை அப்படியே அலற அடிக்க முடியும் என்றும் கோட்டை கட்டினார். அதுவும் ஒரு பெண்ணையா சரிக்கட்ட முடியாது?

இங்கு, ரமோட்ஸ்வே மனதுக்குள் சிரித்துக் கொண்டாள். மாரெட்ஸி ஏதாவது ஒரு மதுபானக் கடையில் உற்சாகமாக, வரப் போகும் 4,000 புலாவை எண்ணிக் கொண்டாட்டம் போட்டுக் கொண்டிருப்பான் என்று எண்ணினாள். ஆனால், எதிர்பாராத ஏமாற்றம் காத்திருப்பது அவனுக்கு எப்படித் தெரியும்?

மால்.ஃ.பேயில் கசாப்பு கடைக்கு அருகில் இருந்த தன்னுடைய அலுவலகத்தில் வக்கீல் ஜேம்ஸன் உட்கார்ந்திருந்தார்.

என் கட்சிக்காரன் வருவதற்கு சிறிது தாமதமாகும். இப்போதுதான் அவனுக்கு நான் அனுப்பிய செய்தி கிடைத்ததாம். மீதி விவரங்களை அவன் வருவதற்கு முன்பே நாம் பேசி, ஓரளவுக்கு முடிவு கட்டலாம் என்று நான் நினைக்கிறேன்.

ரமோட்ஸ்வே அவர் கூறிய செய்தியை ரசித்தபடி, மிகவும் தாறுமாறாகக் கிடந்த அவரது ஆபீஸை சுற்றும் முற்றும் பார்த்தாள்.

இப்போது தொழில் அத்தனை நன்றாக இல்லையோ உங்களுக்கு?

ஜேம்ஸனுக்கு சுருக்கென்றது.

அதெல்லாம் ஒன்றுமில்லை. எனக்கு கழுத்து மட்டும் வேலை.. இதோ பாருங்கள்.. காலையில் ஏழு மணிக்கு இங்கே வருகிறேன். மாலை ஆறு மணி வரைக்கும் சற்று நேரம் கூட ஓய்வு ஒழிச்சல் இல்லை.

தினமும் அப்படித்தானோ?

ரமோட்ஸ்வே வெகுளித்தனமாகக் கேட்பதுபோல கேட்டாள்.

ஜேம்ஸன், எரிச்சலான பார்வையை அவள் மீது வீசினார்.

ஆமாம். தினமும்.. சனி, ஞாயிறில் கூட சிலசமயம் நான் ஓய்வின்றி இருக்கிறேன்.

ஆமாம்.. ஆமாம்.. உங்களுக்கு நிறையவே வேலை இருக்கிறது.

வக்கீல், இதை ரமோட்ஸ்வேயின் சமாதானப் பேச்சாகவே கருதி புன்னகைத்தார்.

ஆனால், அவரது சந்தோஷத்தை அவள் நீட்டிக்கவில்லை.

மிக அதிகமாகத்தான் வேலை இருக்கும். கட்சிக்காரர்கள் எப்போதும் கூறும் பொய்களை வைத்துப் பொய்யாக வழக்கு ஜோடிக்கவும், சில நேரங்களில் உண்மைகள் வந்தால் அதைச் சமாளிக்கவும் வேண்டியிருக்கலாம்..

அது நேரம் வரையில் பேனாவைக் கையில் வைத்து உருட்டிக் கொண்டிருந்த ஜேம்ஸன், அதை மேஜை மீது போட்டார். அவளை முறைத்துப் பார்த்தார்.

யார் இந்தத் திமிர் பிடித்த பெண்.. அவருடைய கட்சிக்காரர்களைப் பற்றி தரக்குறைவாகப் பேசுவதற்கு? இவள் இப்படித்தான் நடந்து கொள்வாள் என்றால், சமாதானமாகப் பேசி, நஷ்ட ஈடு வாங்காமலேயே, கேஸை கோர்ட்டுக்கு எடுத்துச் செல்ல வேண்டும். ஜேம்ஸன், தன்னுடைய சம்பளத்தைக் கூடத் தியாகம் செய்யத் தயாரானார். அதனால், நஷ்ட ஈடு வருவதற்கு

காலதாமதமானாலும் சரி என்று கூடத் தீர்மானித்து விட்டார்.

என்னுடைய கட்சிக்காரர்கள் மற்றவர்களைப் போல பொய் பேசுவது இல்லை. அவர்களைப் பொய்யர்கள் என்று சொல்ல உனக்கு எந்த உரிமையும் கிடையாது.. என்றார்.

அப்படியா?

ரமோட்ஸ்வே புருவத்தை உயர்த்தினாள்.

அப்படியானால், உங்கள் கட்சிக்காரருக்கு எத்தனை விரல்கள் என்று சொல்லுங்கள்..

ஜேம்ஸன் அவளை மிக இகழ்ச்சியாகப் பார்த்தார்.

ஏற்கெனவே பாதிக்கப்பட்டவரை கேவலமாகப் பேசி, கேலி செய்வது மிகவும் மட்டமான சமாசாரம். உனக்கு நன்றாகத் தெரியும்.. மாரெட்ஸிக்கு ஒன்பது விரல்கள். இன்னும் ரொம்பத் தெளிவாகச் சொல்லப் போனால் ஒன்பதரை விரல்கள்.

அப்படியானால் அவன் எப்படி மூன்று வருடங்களுக்கு முன்பு பெட்ரோல் ஸ்டேஷனில் விரல் வெட்டுப்பட்டதற்கு கலஹாரி விபத்து இன்ஷுரன்ஸ் கம்பெனியிலிருந்து நஷ்ட ஈடு வாங்கியிருக்க முடியும்?

வக்கீல் திகைத்தார்.

மூன்று வருஷங்களுக்கு முன்பா.. விரலுக்காகவா? - மெதுவாகக் கேட்டார்.

ஆமாம். 4,000 புலா கேட்டு, அவனுக்கு 3,800 புலாவுக்குத் தொகை தரப்பட்டதற்கான விவரம்

இருக்கிறது. அந்த விவரம் அடங்கிய பேப்பரின் நம்பர் கூட என்னிடம் இருக்கிறது. நீங்கள் வேண்டுமானல் அவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஏதேனும் இன்ஷுரன்ஸ் விஷயமான தில்லுமுல்லு என்றால் அவர்கள் அதற்காக உதவி செய்யத் தயாராக இருக்கிறார்கள்.

ரமோட்ஸ்வேக்கு, ஜேம்ஸனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவளுக்கு வக்கீல்களைக் கண்டால் பிடிக்காது. ஆனால், அவர்களும் பிழைப்பு நடத்த வேண்டியிருக்கிறதே.. ரொம்பவும் கடுமையாக நடந்து கொண்டோமோ என்று கூட அவளுக்குத் தோன்றியது.

பாவம்.. ஒருவேளை வயதான பெற்றோரைக் காப்பாற்றிக் கொண்டிருப்பவராகக் கூட இருக்கலாம்..

மெடிக்கல் சர்டி.ஃ.பிகேட் இருக்கிறதா மிஸ்டர் ஜேம்ஸன்..? அதைப் பார்க்க விரும்புகிறேன்..

இதோ..

அவர் ஒரு கோப்பிலிருந்து சான்றிதழை எடுத்து நீட்டியபடி சொன்னார்..

எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. சந்தேகப்படும்படி எதுவும் இல்லை..

அதை வாங்கி, உற்றுப் பார்த்த ரமோட்ஸ்வே தலையாட்டினள்.

இதோ பாருங்கள்.. நான் நினைத்த மாதிரியே தேதியை அழித்து மாற்றியிருக்கிறான். ஒருமுறை விரல் போனதென்னவோ உண்மைதான். அது விபத்தினால் கூட இருக்கலாம். ஆனால், இப்போது அவன் செய்தது ஏதோ ஒரு திரவம் போட்டு அழித்ததுதான்..

வக்கீல் அந்தக் காதிதத்தைத் தூக்கி வெளிச்சத்தில் பார்த்தார். சிரமம் எதுவுமில்லாமலேயே அந்தத் தடயம் நன்றாகத் தெரிந்தது.

முதலிலேயே இதை நீங்கள் கவனிக்காதது எனக்கு மிகவும் வியப்பாக இருக்கிறது. இதைக் கண்டுபிடிக்க பெரிய லாபரட்ரி எதுவும் தேவைப்படாது..

வக்கீல் தலைகுனியும் இந்த நேரத்தில்தான் மாரெட்ஸி உள்ளே நுழைந்தான். நேராக வந்து ரமோட்ஸ்வேயிடம் கைகுலுக்க கை நீட்டினான். கையைப் பார்த்த ரமோட்ஸ்வேக்கு ஒரு விரல் இல்லாதது தெரிந்தது. அவள், அவன் நீட்டிய கையைக் கண்டுகொள்ளாமல் இருந்தாள்.

உட்கார்.. - ஜேம்ஸன் கோபமாகக் கூறினார். மாரெட்ஸிக்கு இது ஆச்சர்யத்தைக் கொடுத்தாலும், அவர் சொன்னபடி செய்தான்.

நீங்கள்தான் பணம் கொடுக்க வந்திருப்பவரா..? - அவன் கேட்க.. வக்கீல் அவனைத் தடுத்து நிறுத்தினார்.

அவள் உனக்குப் பணம் தர வரவில்லை. நீ எதற்காக அடிக்கடி தொலைந்த விரல்களுக்கு நஷ்ட ஈடு கேட்கிறாய் என்பதைத் தெரிந்து கொள்ளவே வந்திருக்கிறாள்..

வக்கீல் பேசும்போது, மாரெட்ஸியின் முகபாவங்களை ரமோட்ஸ்வே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள். அவனுடைய முகத்தில் தோன்றிய கலவரமே அவளுக்கு சாதகமாக இருந்தது. திடீரென்று உண்மை வெளிப்படும்போது, மனிதர்கள் திணறி விடுவார்கள். மிகச் சிலரே அதைச் சமாளிக்கும் திறமை உள்ளவர்களாக இருப்பார்கள்.

அடிக்கடியா..

- அவன் ஈனஸ்வரத்தில் கேட்க..

ஆமாம். நீ மூன்று விரல்களை இழந்து விட்டதாக நஷ்ட ஈடு கேட்டிருந்தாய். இப்போது எப்படி திடீரென்று இரண்டு விரல்கள் முளைத்து விட்டது என்று தெரியவில்லை. வெட்டப்பட்ட விரல்கள்

திரும்பவும் வளர ஏதோ புது வகையான மருந்து கண்டு பிடித்திருப்பார்கள் என்று தோன்றுகிறது..

என்ன.. மூன்றா? - வக்கீல் அதிர்ந்தார்.

ரமோட்ஸ்வே, மாரெட்ஸியைப் பார்த்தாள்.

வந்து.. கலஹாரி விபத்து ஒன்று.. அப்புறம் அடடா.. நான் எதிலோ குறித்து வைத்திருந்தேன்.. அது என்ன வென்று கூற முடியுமா?

மாரெட்ஸி, உதவி வேண்டி தனது வக்கீலைப் பார்க்க, அவர் முகத்தில் சினத்தைத்தான் கண்டான்.

ஸ்டார் இன்ஷூரன்ஸ்.. என மெதுவாகக் கூறினான்.

வக்கீல், அந்தக் காகிதத்தை அவன் முகத்தில் வீசியெறிந்தார்.

இந்த மாதிரி ஏமாற்று வேலை செய்து என்னை முட்டாளாக்கப் பார்க்கிறாயா? தப்பித்துக் கொள்ளலாம் என்று நினைத்து விட்டாயா?

மாரெட்ஸி பேசவில்லை. ரமோட்ஸ்வேயும்தான். அவள் ஆச்சர்யப்படவில்லை. தங்கள் பெயரின் பின்னால், சட்டப் படிப்பு பட்டம் இருந்தாலும், வக்கீல்களும் தங்கள் கேஸ்களில் இது போல வழுக்கி விழுவார்கள் என்பது அவளுக்குத் தெரியும்.

எது எப்படியானாலும் உன்னுடைய சாயம் வெளுத்து விட்டது. ஏமாற்று வேலை செய்ததற்கான குற்றச்சாட்டு உன் மேல் பதிவு செய்யப்படும். அப்போது, நான் உனக்காக நிச்சயம் வாதாட மாட்டேன். வேறு யாரையேனும் வக்கீலைப் பார்த்துக் கொள்.

மாரெட்ஸி, ரமோட்ஸ்வேயைப் பார்த்தான். அவனை நேராகப் பார்த்தவள், நீ ஏன் இப்படிச் செய்தாய்? தப்பித்துக் கொண்டு விடுவோம் என நினைத்தாயா.. எனக் கேட்டாள்

மாரெட்ஸி, சட்டைப் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்து மூக்கைச் சிந்தினான்.

நான்தான் என் பெற்றோரைக் காப்பாற்றுகிறேன்.என்னுடைய சகோதரி தீராத நோய் வாய்ப்பட்டிருக்கிறாள். அவளுக்கு குழந்தைகள் வேறு. அவர்களையும் நான்தான் பார்த்துக் கொள்கிறேன்.

ரமோட்ஸ்வே, அவன் கண்களை நேருக்கு நேர் பார்த்தாள். அவன் உண்மையைத்தான் கூறுகிறான் என்பது அவளுக்குத் தெரிந்தது. அவள் துரிதமாக சிந்தித்தாள்.

இவனை ஜெயிலுக்கு அனுப்புவதில் எந்தவித பலனும் இல்லை. அதனால் அவனுடைய பெற்றோரும் சகோதரியும் மேன்மேலும் கஷ்டங்களைத்தான் அனுவிப்பார்கள்..

நல்லது.. இதுபற்றி நான் போலீஸுக்கு எதுவும் சொல்ல மாட்டேன். என்னுடைய கட்சிக்காரரும் சொல்ல மாட்டார். ஆனால் ஒன்று.. இது மாதிரி திருட்டு வேலைகளில் ஈடுபட மாட்டேன் என்று எனக்கு நீ சத்தியம் செய்து தர வேண்டும். புரிந்ததா?

மாரெட்ஸி, வேகமாக தலையாட்டினான்.

நீங்கள் உண்மையான கிறிஸ்தவப் பெண்மணி. கடவுள் உங்களுக்கு சொர்க்கத்தில் இடம் கொடுப்பார்.

வக்கீலைப் பார்த்தவாறு ரமோட்ஸ்வே புன்னகையுடன் கூறினாள்..

இந்த நாட்டில் சிலர் பெண்கள் என்றால் சாதுவானவர்கள்.. அவர்களை இஷ்டப்படி ஆட்டி

வைக்கலாம் என்று நினைக்கிறார்கள். ஆனால், நான் அப்படிப்பட்டவள் இல்லை.. ஒரு ஆபத்து என்று வரும்போது, விஷமுள்ள நாகப்பாம்பைக் கூட இரண்டாக வெட்டிப் போடக் கூடிய தைரியம் எனக்கு இருக்கிறது..

அவள் தனது வலது கை இரட்டை விரலை, கத்தரி போல அவர் முன் காட்டி விட்டுக் கிளம்பினாள்.

வக்கீலின் வாய் திறந்தே இருந்தது. பேச்சுதான் வரவில்லை!



நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 17

------------------------------------------------------------

எ ல்லாம் சரிதான்.. ஒரு வழக்கை எடுத்து துரிதமாக முடிப்பது வாடிக்கையாளரைப் பொறுத்தவரையிலும் - ஏன்.. ரமோட்ஸ்வே வரையிலும் கூட மிகவும் திருப்தியான ஒன்றுதான். ஆனால், அவளது மேஜை இழுப்பறையில் இருந்த அந்தக் காகித உறையையும் அதில் இருந்த பொருட்களையும் பற்றி அவளால் அலட்சியமாக இருக்க முடியவில்லை.

அதை அவள் காரியதரிசி மகுட்சி கண்ணில் படாமல் மறைவாக எடுத்து வைத்துக் கொண்டாள். மகுட்சி நம்பிக்கையானவள்தான். ஆனால், இம்மாதிரியான விஷயங்கள் மிகவும் ஆபத்தானவை. அதனால், மிக மிக ரகசியமாக வைத்திருப்பது அவசியம்.

வங்கிக்குப் போவதாகச் சொல்லி விட்டு, அவள் ஆபீஸிலிருந்து கிளம்பினாள். நிறைய காசோலைகள் இருந்ததால், அவற்றை வங்கியில் போட வேண்டியிருந்தது. ஆனால், அவள் உடனே நேரடியாக வங்கிக்குச் செல்லவில்லை. இளவரசி மரீனா மருத்துவமனைக்கு சென்று, ரசாயன பரிசோதனை கூடத்தை நோக்கிச் சென்றாள்.

ஒரு நர்ஸ் அவளைத் தடுத்து நிறுத்தினாள்..

இங்கே இறந்தவரின் சடலத்தை அடையாளம் காட்டவா வந்திருக்கிறீர்கள்?

ரமோட்ஸ்வே இல்லை என தலையசைத்தாள்.

நான் டாக்டர் குலுபனேவை பார்க்க வந்திருக்கிறேன். அவரிடம் அப்பாய்ன்ட்மென்ட் எதுவும் வாங்கவில்லை. ஆனால், நான் அவருடைய பக்கத்து வீட்டில் வசிக்கிறேன். அதனால், என்னைப் பார்க்க அனுமதிப்பார்..

நர்ஸ் நம்பவில்லை என்பதை அவளது பார்வையே சொல்லியது. இருப்பினும் டாக்டரை அழைத்து வரச் சென்றாள். சில நிமிடங்களில் திரும்பி வந்து, டாக்டர் சிறிது நேரத்தில் வந்து பார்ப்பார் எனக் கூறினாள்.

நீங்கள் இந்த மாதிரி, ஹாஸ்பிடல்ல வந்து தொந்தரவு செய்யக் கூடாது. எல்லாருமே இங்கே தலைக்கு மேல் வேலை பளுவோடு இருக்கிறார்கள். ஒருவருக்கும் நேரம் இருக்காது.

ரமோட்ஸ்வே, அந்த நர்ஸைப் பார்த்தாள். பத்தொன்பது அல்லது இருபது வயசுதான் இருக்கும். அவளுடைய தந்தையின் காலத்தில், இத்தனை சிறிய பெண் முப்பத்தைந்து வயதான பெண்ணை, தொந்தரவு செய்யும் குழந்தையை விரட்டுவது போலப் பேச மாட்டாள். ஆனால், இப்போது காலம் மாறி விட்டது. திடீரென மேலே வந்தவர்களுக்கு வயதானவர்களுக்கோ, பெரியவர்களுக்கோ எப்படி மரியாதை தர வேண்டும் என்பது தெரியவில்லை. தான் துப்பறிபவள் என்பதைச் சொல்லி விடலாமா என்று கூட நினைத்தாள் அவள். ஆனால், அவளிடம் சொல்வது, உபயோகமில்லாத ஒன்று. இது மாதிரிப்பட்டவர்களைக் கண்டு கொள்ளாமல் இருப்பதுதான் நல்லது.

டாக்டர் குலுபனே வந்து சேர்ந்தார். பச்சை நிற அங்கியை அணிந்திருந்தார். எந்த கண்றாவியான வேலையில் ஈடுபட்டிருந்தாரோ தெரியவில்லை. ஆனால், இது மாதிரி ஒரு இடைவெளி கிடைத்ததில் மகிழ்ச்சியடைந்தவர் போல காணப்பட்டார்.

என்னுடைய தனி அறைக்குப் போகலாம்.. வாருங்கள். அங்கே போய்ப் பேசலாம்..

ரமோட்ஸ்வே, வெராந்தாவின் கோடியில் இருந்த சிறு அறையை அடைந்தாள். அங்கே மேஜை சுத்தமாக, ஒன்றுமில்லாமல் வெறிச்சென இருந்தது. அரசாங்க குமாஸ்தா அலுவலகம் மாதிரிதான் இருந்தது. ஆனால், மருத்துவ சம்பந்தமான புத்தகங்கள் வைத்திருந்ததால், அது ஒரு டாக்டரின் அறை என்பதை ஊகிக்க முடிந்தது.

உங்களுக்கு தெரிந்திருக்கும்.. நான் ஒரு துப்பறியும் பெண் என்று..

டாக்டர், அகலச் சிரிப்பு ஒன்றை உதிர்த்தார். அவருடைய வேலையின் தன்மையில், அவர் மிகவும் உற்சாகமான மனிதராக இருந்தது அபூர்வமான ஒன்று..

என்னுடைய நோயாளிகளைப் பற்றி எதுவும் பேச மாட்டாய் என்று நினைக்கிறேன்.. அவர்கள் இறந்திருந்தாலும் கூட.

ரமோட்ஸ்வே, அவரது நகைச்சுவையை ரசித்தபடி இல்லையில்லை.. நான் உங்களிடம் காட்டும் சில பொருட்களை என்ன என்று கண்டுபிடித்துக் கூறினால் போதும் என்றாள். பின்னர், தன்னிடமிருந்த காகித உறையை எடுத்துப் பிரித்து, மேஜை மீது கவிழ்த்தாள்.

குலுபனே, சிரிப்பதை உடனே நிறுத்தி விட்டு, மூக்குக்கண்ணாடியைச் சரி செய்தபடி அந்த எலும்பை எடுத்துப் பார்த்தார். மூன்றாவது விரலுக்கும் மணிக்கட்டுக்கும் நடுவில் உள்ள எலும்பு.. எட்டு அல்லது ஒன்பது வயது குழந்தையுடையது.

- அவர் சொல்ல, ரமோட்ஸ்வேக்கு மூச்சு வாங்கியது.

குழந்தையா..

அதில் சந்தேகமேயில்லை. ஒரு சிறு குழந்தையுடையதாகத்தான் இருக்க முடியும். பெரியவர்கள் என்றால் இவ்வளவு சின்னதாக இருக்காது. பார்த்தவுடனேயே தெரிகிறது. ஏழு அல்லது எட்டு

வயது இருக்கலாம். இல்லை, சற்று பெரிய குழந்தையாகவும் இருக்கலாம்..

எலும்பை மேஜை மீது வைத்து விட்டு, ரமோட்ஸ்வேயைப் பார்த்தார். உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தது?

ரமோட்ஸ்வே தோள்பட்டையைக் குலுக்கிக் கொண்டாள்.

யாரோ என்னிடம் காட்டினார்கள். என்னுடைய வாடிக்கையாளர்களைப் பற்றி நீங்களும் விசாரிக்க மாட்டீர்கள்.. இல்லையா?

டாக்டர் அருவருப்புடன், இது மாதிரியான பொருட்கள், கை விட்டு, கை மாறிப் போகக் கூடாது என்றார்.

இந்த மனிதர்களுக்கு மரியாதையே தெரியாமல் போய் விட்டது..

ரமோட்ஸ்வே அதை ஆமோதித்தாள்.

வேறு ஏதாவது உங்களால் சொல்ல முடியுமா.. அதாவது, குழந்தை எப்போது இறந்திருக்கலாம் என்று..

டாக்டர், மேஜை இழுப்பறையிலிருந்து ஒரு பூதக்கண்ணாடியை எடுத்து, அந்த எலும்பை உள்ளங்கையில் வைத்து, திரும்ப நன்றாக ஆராய்ந்தார்.

ரொம்ப காலம் முன்பு என்று சொல்ல முடியாது. ஓரளவு சமீபத்தில்தான் இருக்க வேண்டும். அந்த எலும்பின் மீது சிறிய தசைப் பகுதி இருக்கிறது. ரொம்பவும் உலர்ந்து போகவில்லை. சில மாதங்களாகியிருக்கலாம். நிச்சயமாகக் கூற முடியாது..

ரமோட்ஸ்வே பயத்தில் மெலிதாக அதிர்ந்தாள். சாதாரண எலும்பைக் கையாளுவது வேறு.. ஆனால், மனித எலும்பைக் கையாளுவது என்பது வேறு.

இன்னொரு விஷயம்.. என்ற டாக்டர், இந்த எலும்புக்கு உரிய குழந்தை இறந்திருக்கும் என்று ஏன் நினைக்கிறீர்கள்? நீங்கள் ஒரு துப்பறிபவர். கை, கால் இழந்தாலும் கூட ஒரு குழந்தை உயிருடன் இருக்க முடியும். இதைப் பற்றி நீங்கள் நினைத்துப் பார்த்தீர்களா.. என்று கேட்டார்.

இந்தத் தகவலை, அன்றிரவு மட்கோனி டின்னருக்காக ரமோட்ஸ்வே வீட்டுக்கு வந்தபோது, அவள் சொன்னாள். அவர், ஏற்கெனவே இரவு சாப்பாட்டுக்கு வர சம்மதித்திருந்தார். ஒரு பெரிய பானையில் ஸ்டு என்கிற குழம்பும், அரிசி, பூசணி சேர்ந்த ஒரு வகை உணவும் தயாரித்திருந்தாள். பாதி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது அவள், டாக்டரிடம் திரட்டிய தகவலைச் சொன்னாள். மட்கோனி சாப்பிடுவதைப் பாதியில் நிறுத்தினார்.

ஐயோ, குழந்தையா.. என திகைப்புடனும் கவலையுடனும் கேட்டார்.

டாக்டர் குலுபனே அப்படித்தான் சொன்னார். ஏழு அல்லது எட்டு வயது இருக்கலாம் என்று..

மட்கோனி சிலிர்த்துக் கொண்டார். அந்தப் பை, அவரிடம் கிடைக்காமலேயே இருந்திருக்கலாம். இந்த மாதிரியான சம்பவங்கள் நடப்பது எல்லோரும் அறிந்த ஒன்று. அதில் யாருக்குமே தலையிட பயம். அதுவும், சார்லி கோட்ஸ்ஸே சம்பந்தப்பட்டது என்றால் கேட்கவே வேண்டாம். தீராத கஷ்டங்கள்தான் ஏற்படும்.

நாம் என்ன செய்யலாம்? என்றாள் ரமோட்ஸ்வே.

மட்கோனி, கண்களை மூடிக் கொண்டு, எச்சிலை விழுங்கினார்.

போலீஸுக்குப் போகலாம். போனால், நான்தான் அந்தப் பையை எடுத்தவன் என்று

கோட்ஸ்ஸேவுக்குத் தெரிந்து விடும். அவ்வளவுதான். என் கதை முடிந்து விடும்.

ரமோட்ஸ்வே, அவர் சொல்வதை ஆமோதித்தாள். குற்றங்களைக் கண்டுபிடிப்பதில் போலீஸுக்கு அத்தனை ஆர்வம் கிடையாது. அதில், சில சமாசாரங்களை துப்பறிவதில், அவர்களுக்குத் துளி கூட விருப்பமே கிடையாது. நாட்டில் அதிகாரம் மிகுந்த ஒருவன் மாந்திரீகத்தில் ஈடுபட்டிருந்தால், அந்தப் பக்கமே போலீஸார் தலை வைத்துப் படுக்க மாட்டார்கள்.

நாம் போலீஸுக்குப் போக வேண்டுமென எனக்குத் தோன்றவில்லை.. - ரமோட்ஸ்வே கூறினாள்.

அப்படியானால், இதை மறந்து விடலாம்.. என்று மட்கோனி, பரிதாபமாக அவளைப் பார்த்தார்.

இல்லை. அப்படிச் செய்ய முடியாது. எல்லாருமே இப்படிப்பட்ட விஷயங்களை மறந்துதான் விடுகிறார்கள். வெகுகாலமாகவே அப்படித்தான் நடக்கிறது. நாம் கண்டிப்பாக அப்படி இருக்கக் கூடாது..

மட்கோனி தலையைக் குனிந்து கொண்டார். அவருக்கு பசியே பறந்து போயிற்று. ஸ்டு தட்டில் ஆறிக் கொண்டிருந்தது.

நாம் முதலில் செய்ய வேண்டியது என்னவென்றால், கோட்ஸ்ஸே, சர்வீஸுக்காக உங்களிடம் அனுப்பியுள்ள காரின் முன் பக்கக் கண்ணாடியை உடைத்து விடுவதுதான். அப்புறம், கோட்ஸ்ஸேவுக்கு போன் செய்து, யாரோ திருடர்கள் உடைத்து விட்டார்கள் என்றும், உங்களுடைய பாதுகாப்பில் இருக்கும்போது இப்படி நடந்து விட்டதால், நீங்களே அதற்கு புதிய கண்ணாடி போட்டு விடுவதாகவும் சொல்லுங்கள். அவன் என்ன கூறுகிறான் என்று பார்ப்போம்..

அப்புறம்?

அவன் வந்து ஏதோ ஒன்று, காருக்குள் இருந்தது காணாமல் போய் விட்டதாகக் கூறினால், நீங்கள் அந்தப் பொருளை மீட்க முயற்சிப்பதாகவும், உங்களுக்கு ஒரு சிறந்த துப்பறியும் பெண்மணியைத்

தெரியும் என்றும், அவள் அந்தப் பொருளை கண்டுபிடித்துக் கொடுத்து விடுவாள் என்றும் கூறுங்கள்.. அதாவது, என் மூலமாக..

மட்கோனியின் முகம் வாடி விட்டது.

அப்படியெல்லாம் கோட்ஸ்ஸேவிடம் பேசிவிட முடியாது. ஏகப்பட்ட சிபாரிசுகள் இருந்தால்தான் அவனை அணுக முடியும்..

அப்புறம்.. நான் அந்தப் பையை எடுத்துக் கொண்டு அவனைப் பார்க்கப் போகிறேன். அந்த மாந்திரீக வைத்தியரின் பெயரையும் கண்டுபிடிக்கிறேன். அப்புறம் என்ன செய்வது என்று யோசிப்போம்.

அவள் சொல்லும்போது, அது மிகவும் சுலபமான வேலையாகத்தான் தோன்றியது மட்கோனிக்கு. இந்தத் திட்டம் செயல்படக் கூடியது என்றும் தோன்றியது. நம்பிக்கை என்பது ஒரு சந்தோஷமான தொற்று நோய் மாதிரி. ஒருவரிடமிருந்து ஒருவருக்குப் போகும்.

மட்கோனிக்கு பசி திரும்பியது. இன்னொரு முறை ஸ்டுவுடன் ஒரு பிடி பிடித்தார். பெரிய கோப்பை நிறைய தேநீர் அருந்தினார். அவர் கார் வரையில் கூடவே சென்ற ரமோட்ஸ்வே அவரை வழி அனுப்பினாள்.

இருட்டில் காரின் வெளிச்சம் மறையும் வரையில் பார்த்துக் கொண்டு நின்றாள். டாக்டரின் வீட்டு விளக்குகள் எரிவது அவளுக்குத் தெரிந்தது. திரைச்சீலைகள் அகற்றப்பட்டிருந்தன. டாக்டர் அங்கு நின்று இருட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார். ரமோட்ஸ்வே இருளில் நின்று கொண்டிருந்ததனால், அவரால் அவளைப் பார்க்க முடியாது. ஆனால், அவர் வெளிச்சத்தில் நின்றபடி இவள் இருக்கும் பக்கமே ஊன்றிப் பார்ப்பது தெரிந்தது.

## நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 18

--------------------------------------------------------------

மெ க்கானிக் பையன் கிரீஸ் படிந்த பிசுக்கு விரல்களால் மட்கோனியின் தோளைத் தட்டிக் கூப்பிட்டான். அவன் எப்போதுமே இப்படித்தான் செய்வான். இது, மட்கோனிக்கு துளிக்கூட பிடிப்பதில்லை. மிகவும் கோபம்தான் வரும்.

எனக்கு ஒரு பெயர் உண்டு. என்னை பெயர் சொல்லிக் கூப்பிட்டுப் பேசு. உன் அழுக்குப் படிந்த விரல்களால் எதற்காக அநாவசியமாக என்னைத் தொட்டுப் பேசுகிறாய்..

இப்படி பல சமயங்களில் கோபித்துக் கொண்டிருக்கிறார். அந்தப் பையன் அப்போதைக்கு மன்னிப்பு கேட்பான். அவ்வளவுதான். மறுநாளே திரும்பவும் தொட்டுப் பேசுவான். இவனைத் திருத்தவே முடியாது என்கிற முடிவுக்கு வந்து விட்டார் அவர்.

யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்கிறார். உங்கள் ஆபீஸில் காத்துக் கொண்டிருக்கிறார்.

கையிலுள்ள ஸ்பேனரை கீழே போட்டுவிட்டு, கையைத் துடைத்துக் கொண்டு எழுந்தார் மட்கோனி. அந்த சமயத்தில் அவர் மிகவும் இடைஞ்சலான வேலையில் ஈடுபட்டிருந்தார். கிரேஸ் என்பவனின் காரை சரிபார்ப்பது என்பது கஷ்டமான வேலைதான். ஏனென்றால், அவன் எப்போதும் காரை மிக வேகமாகவே ஓட்டுவான். அவனது காரின் சத்தம் காத தூரத்துக்குக் கேட்கும். அது, தன்னுடைய கை வண்ணம் என்பதில் மட்கோனிக்கு அளவிட முடியாத மகிழ்ச்சி. அவருக்கு அது ஒரு விளம்பரமாகக் கூட இருந்தது. ஆனால், அவன் காரை மிகவும் தகர டப்பாவாக்கி வைத்திருந்தான். அந்த காரை ஓட வைப்பது என்பது அத்தனை சுலபமான காரியமாக இல்லை.

வந்திருந்தவன் ஆபீஸ் அறையில் உட்கார்ந்திருந்தான்.. அதுவும் மட்கோனியின் நாற்காலியில். மட்கோனி நுழையும்போது, கார் டயர் பற்றிய புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தவன், அவரைப் பார்த்ததும் மேஜை மீது புத்தகத்தை வீசி எறிந்து விட்டு எழுந்தான்.

அவனது தோற்றத்தை கண நேரம் எடை போட்டார் மட்கோனி. ராணுவ வீரன் போல காக்கி நிற உடை அணிந்திருந்தான். விலையுயர்ந்த பாம்புத் தோலினாலான பெல்ட் இடுப்பைச் சுற்றி.. கையில் பெரிய கைக்கடிகாரம் ஆரவாரமான ஆடம்பரத்துக்கு எடுத்துக்காட்டாக.. அதிலும் விநாடி முள் நீளமானதாகக் காணப்பட்டது. இது போல, நீண்ட விநாடி முள் உடைய கடிகாரத்தை அணிபவர்களுக்கு, ஒவ்வொரு விநாடியும் மதிப்புடையதாக இருக்கும்போல என்று தோன்றியது அவருக்கு.

நீங்கள் இன்று காலை கோட்ஸ்ஸேவுக்கு போன் செய்தீர்கள் அல்லவா.. அவர்தான் என்னை இங்கு அனுப்பினார்.

மட்கோனி, இதை ஆமோதிக்கும் வகையில் தலையசைத்தார்.

காரின் முன்பக்க கண்ணாடியை உடைத்து கண்ணாடிச் சில்லுகளை அங்குமிங்கும்.. காருக்கு வெளியேயும், அருகிலேயும் இறைப்பது மிகச் சுலபமான வேலையாகத்தான் இருந்தது. கோட்ஸ்ஸே வீட்டுக்கு போன் செய்து, கார் உடைக்கப்பட்டு விட்டதாகக் கூறுவதும் ஒன்றும் கடினமான வேலையாக இல்லை. ஆனால், நேருக்கு நேர் பொய் சொல்லும்போதுதான் மிகவும் கஷ்டமானதாக இருந்தது. அது கோட்ஸ்ஸே அல்ல.. அவன் ஆள்தான் என்றாலும் - முகத்தைப் பார்த்துப் பேச முடியவில்லை.

எல்லாம் இந்த ரமோட்ஸ்வேயினால் வந்த வினை. நான் சாதாரண மெக்கானிக். இந்த மாதிரி துப்பறியும் விளையாட்டில் எல்லாம் ஈடுபட வேண்டிய அவசியமே இல்லை.. நான் மிகவும் பலவீனமானவன்..

உண்மைதான். ரமோட்ஸ்வே சம்பந்தப்பட்ட எதுவானாலும் அவர் பலவீனமானவர்தான். அவள் எதைச் சொன்னாலும் அவரால் தட்ட முடியாது.

அவர் மனதில் ஒரு கற்பனை இருந்தது. அவரும் ரமோட்ஸ்வேயும் கலஹாரி பாலைவனத்துக்குப் போகிறார்கள். அப்போது ரமோட்ஸ்வேயை ஒரு சிங்கம் தாக்க வருகிறது. அவர் குரல் கொடுத்து, சிங்கத்தின் கவனத்தைத் திசை திருப்புகிறார். அது, இவரைப் பார்த்து உறுமுகிறது. அதன் கவனம் திசை திருப்பப்பட்டதால் ரமோட்ஸ்வே தப்பி ஓட, அவர் இந்த சிங்கத்தை கத்தியால் குத்திக் கொல்கிறார்.

ரமோட்ஸ்வேயை சிங்கத்திடமிருந்துகூட காப்பாற்ற அவர் தயார்தான். ஆனால், இந்த விஷயமே வேறு. போலீஸிடம் கூட பொய்யான தகவலைத் தரும்படி இருக்குமோ என பயந்தார். போலீஸ் வரையில் போகாவிட்டாலும், அவருடைய பலவீனத்தினால் இப்போது ஒரு குற்றவாளியாகி விட்டார். ரமோட்ஸ்வேயிடம் அவர் கண்டிப்பாக முடியாது என மறுத்திருக்க வேண்டும். காதலுக்காக பெரிய தியாகியாக மாற வேண்டிய அவசியமே இல்லை.

கோட்ஸ்ஸே மிகவும் கோபமாக இருக்கிறார். பத்து நாட்களாக அந்த கார் உங்களிடம்தான் உள்ளது. இப்போது போன் செய்து, உடைக்கப்பட்டிருப்பதாகச் சொல்கிறீர்கள். இது என்ன பாதுகாப்பு? உங்கள் வாட்ச்மேன் என்ன செய்து கொண்டிருந்தான்? உங்கள் மீது எப்படி நம்பிக்கை வரும்?

மட்கோனி வியர்த்து விறுவிறுத்தார். என்ன ஒரு சங்கடமான நிலைமை!

திறமையான பழுது பார்ப்பவர்கள் அதிக நேரம் எடுத்துக் கொண்டார்கள். தவிர, புதிதாக சாமான்கள் வாங்கும்படியாயிற்று.. இது மாதிரியான விலையுயர்ந்த கார்களுக்கு, கையில் கிடைக்கிற உதிரி பாகத்தைப் பொருத்தி விட முடியாது.. இல்லையா?

சரி.. சரி.. இந்த ஆட்கள் எவ்வளவு சோம்பேறிகள் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் காரை காட்டுங்கள்..

இருவரும் ஆபீஸ் அறையிலிருந்து வெளியே வந்தனர். இப்போது அந்த ஆள், அத்தனை முரடனாகத் தெரியவில்லை. கோபத்தை அவ்வளவு சீக்கிரம் மாற்றிக் கொள்ள முடியுமா..? அதுவும் தெரியவில்லை.

காரின் முன் வந்து நின்றனர். மட்கோனியின் ஆட்கள் காருக்கு புதிய கண்ணாடியை மாற்றியிருந்தனர். இருந்தாலும் அந்த உடைந்த கண்ணாடியை சுவரில் சாய்த்து வைத்திருந்தனர். முன்னெச்சரிக்கையாக சில கண்ணாடித் துண்டுகள் டிரைவர் இருக்கையிலும் சிதறிக் கிடந்தன.

வந்தவன் கார் கதவைத் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

நான் என் செலவிலேயே கண்ணாடியை மாற்றியிருக்கிறேன். பில்லை மிகவும் குறைத்தே போடுகிறேன்.. என்றார் மட்கோனி.

அவன் ஒன்றும் பதில் பேசவில்லை. கார் ஸீட்டின் மீது சரிந்து, முன்பக்கம் உள்ள அறையைத் திறந்தான். மட்கோனி அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

காரிலிருந்து வெளியே வந்தவன், கையைத் தன்னுடைய காற்சட்டையிலேயே துடைத்துக் கொண்டான். சிறிய கண்ணாடித் துண்டுகள் அவன் கையைப் பதம் பார்த்து விட்டன.

அந்த டாஷ் போர்ட் கம்பார்ட்மென்ட்டில் இருந்த பொருட்கள் காணப்படவில்லை. அது பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா? தெரியாது என மட்கோனி, மூன்று முறை தலையசைத்தார். அந்த மனிதன் கையை வாயில் வைத்து, வெட்டுப்பட்ட இடத்தை உறிஞ்சினான்.

கோட்ஸ்ஸேவுக்கு அதில் வைத்திருந்தது நினைவேயில்லை. கார் உடைக்கப்பட்டு விட்டது என்று நீங்கள் சொன்னவுடன்தான் நினைவுக்கு வந்தது. இந்த மாதிரி பொருட்கள் காணாமல் போனால் அவருக்கு மிகவும் கோபம் வரும்.

மட்கோனி சிறிய கந்தல் துணியை அவன் கையில் கொடுத்தார்.

உங்கள் கையில் கண்ணாடி குத்தி விட்டதைப் பார்க்க ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. முன்பக்க கண்ணாடி உடைந்ததால், எங்கு பார்த்தாலும் கண்ணாடித் துண்டுகள் பரவிக் கிடக்கும்..

என்னைப் பற்றி இப்போது கவலைப்பட வேண்டியதில்லை. கோட்ஸ்ஸேவுக்கு சொந்தமான பொருளை யாரோ திருடி விட்டதுதான் இப்போது பிரச்னை.

மட்கோனி தலையைச் சொறிந்து கொண்டார்.

போலீஸினால் ஒரு உபயோகமும் இல்லை. இந்த மாதிரியான சமாசாரங்களை கண்டுபிடிக்கும் ஒருவரை எனக்குத் தெரியும்..

அப்படியா.. யாரது?

ஒரு துப்பறியும் பெண்மணி. கலே மலை செல்லும் வழியில் ஒரு ஆபீஸ் வைத்திருக்கிறாள். நீங்கள் பார்த்திருப்பீர்களே..

இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம்..

மட்கோனி புன்னகைத்தார்.

அவள் மிகவும் திறமையான பெண்மணி. அவளுக்கு நடக்கும் எல்லா விஷயங்களும் தெரியும். நான் கேட்டுக் கொண்டால், யார் இப்படி செய்திருப்பார்கள் என்பதை கண்டுடித்து விடுவாள். தொலைந்த பொருட்களைக் கூட சில சமயம் மீட்டுத் தருவாள். அது என்ன பொருள்?

பொருளா.. மிஸ்டர் சார்லி கோட்ஸ்ஸேவுக்கு சொந்தமான சிறிய பொருள்.

அப்படியா..

அந்த மனிதன் ரத்தத்தைத் துடைத்த துணியை விசிறி எறிந்தான்.

அப்படியானால், அந்தப் பெண்மணியைக் கேட்டு, பொருளை மீட்டுத் தருகிறீர்களா..? - அவன் எரிச்சலுடன் கேட்டான்.

கண்டிப்பாக. நான் இன்றே அவளுடன் பேசி விடுகிறேன். அவள் நிச்சயமாக ஏதாவது செய்வாள் என்று நான் நம்புகிறேன். கார் சரியாகி விட்டது. எப்போது வேண்டுமானாலும் காரை எடுத்துச் செல்லலாம் என்று கோட்ஸ்ஸேவிடம் கூறுங்கள். நான் கண்ணாடித் துண்டுகளை சுத்தப்படுத்தி விடுகிறேன்..

அப்படியே செய். கண்ணாடி குத்தினால் கோட்ஸ்ஸே சும்மா இருக்க மாட்டார்..

கோட்ஸ்ஸேவுக்கு விரலில் கண்ணாடி குத்தினால் பிடிக்காதோ.. - மனதுக்குள் மட்கோனி சிரித்துக் கொண்டார்.

நீ பயங்கரமான சின்ன புத்திக்காரன். உன் மாதிரியான நிறைய பேரை எனக்குத் தெரியும். நான் பள்ளியில் படிக்கும்போது இப்படித்தான் ஒருவன், விளையாட்டு மைதானத்தில் எல்லாரையும் வம்புக்கு இழுத்து, அடித்து, உதைத்து, விலையுயர்ந்த பொருட்களை நாசம் செய்து.. ஆசிரியர் பிரம்படி கொடுத்தபோதும், அழாமல் தைரியமாக இருப்பது போலக் காட்டிக் கொள்வான். அதே மாதிரிதான் இந்த கோட்ஸ்ஸேவும். கெட்ட நடவடிக்கையும், விலையுயர்ந்த காரும் வைத்திருந்தாலும் அவனும் சின்னத்தனமானவன்தான்.

இந்த மாதிரி ரமோட்ஸ்வேக்கு அபரிமிதமான சலுகை கொடுத்திருப்பதும் தவறுதான் என மனதுக்குள் உறுதிபட நினைத்தார் மட்கோனி. அவள்பாட்டுக்கு எதைச் சொன்னாலும் இவர் செய்வார் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள். இவரும்தான் அவள் சொல்வதற்கெல்லாம் தலையை ஆட்டிக் கொண்டிருக்கிறார். எதுவும் அவள் இஷ்டப்படிதான் நடக்கிறது. ஏனெனில் இவர் எந்தவித எதிர்ப்பையும் காட்டுவதில்லை.

இதோடு போதும். நான் யார் என்று உடனே அவளுக்குப் புரிய வைக்கிறேன். இந்தத் துப்பறியும் வேலைக்கெல்லாம் ஒரு முடிவு கட்டி விடுகிறேன்.

காரேஜை விட்டு, மிகவும் எரிச்சலுடனும் கோபத்துடனும், அவளிடம் எப்படி பேச வேண்டும் என்கிற ஒத்திகையுடனும் ரமோட்ஸ்வேயின் அலுவலகத்தை நோக்கிச் சென்றார் மட்கோனி.

ரமோட்ஸ்வே, நீ என்னை பொய் சொல்ல வைத்து விட்டாய். ஒரு கேலிக்குரிய - ஆபத்தான இக்கட்டில் என்னைச் சிக்க வைத்திருக்கிறாய். இது நமக்கு சம்பந்தமே இல்லாத சமாசாரம். என்னால் காரைத்தான் ரிப்பேர் செய்ய முடியும். பிறருடைய வாழ்க்கையை அல்ல. இந்தக் கடைசி வாக்கியம் அவருக்கு மிகவும் வலுவானதாகத் தோன்றியது. திரும்பத் திரும்ப அதை அனுபவித்தபடி சொல்லிப் பார்த்துக் கொண்டார். அவளுக்கும் அவருக்கும் இடையே உள்ள மிகப் பெரிய வேறுபாடே இதுதான். அவள், மனிதர்களை - அவர்களின் வாழ்க்கையைச் சீரமைக்கிறாள். இவரோ, காரை - அவற்றின் இயந்திரங்களைச் சரி செய்கிறார். தான் இதைக் கண்டிப்பாகச் சொல்லத்தான் வேண்டும்.. அதை அவள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இதனால் தங்களுடைய நட்பு அழியாது என அவர் நம்பினார். அவரால் இந்தப் பொய், ஏமாற்று வேலைகளில் ஈடுபட முடியாது. இப்போது போலீஸிடம் மட்டுமில்லை.. மிகவும் அதிகார வெறி பிடித்த மனிதன் சம்பந்தப்பட்ட சிக்கலிலும் அவர் மாட்டிக் கொண்டு விட்டார்.

அவர் அவளை, அவளுடைய துப்பறியும் நிறுவன அலுவலக வாசலில் சந்தித்தார். தேநீர் கோப்பையில் உள்ள துகள்களை, தோட்டத்தில் அவள் சுத்தம் செய்து கொண்டிருந்தபோது, அவரது கார் அங்கு வந்து நின்றது.

என்ன.. எல்லாம் திட்டப்படி நடந்ததா?

ரமோட்ஸ்வே, நான் என்ன நினைக்கிறேன் என்றால்..

அவனே வந்தானா.. இல்லை அவனுடைய ஆட்கள் யாரையாவது அனுப்பியிருந்தானா..?

ஒரு ஆள்தான் வந்திருந்தான். இரு.. நான் சொல்வதைக் கேள்.. நீயோ மனித வாழ்க்கையை சரி செய்ய முயற்சிக்கிறாய். நானோ ஒரு சாதாரண..

நீங்கள், நான் அந்தப் பொருட்களை மீட்டுத் தருவேன் என்று கூறினீர்களா.. அவனுக்கு அதில் அக்கறை இருந்ததா?

நான் இயந்திரங்களைத்தான் சரி பார்ப்பேன்.. என்னால் முடியாது.. இங்கே பார்.. என் வாழ்க்கையில் நான் எப்போதுமே பொய் பேசியதில்லை. நான் சிறுவனாக இருந்தபோதுகூட பொய் பேச என் நாக்கு ஒத்துழைக்காது. என்னால் பொய் சொல்லவே முடியாது..

ரமோட்ஸ்வே, கடைசி தடவையாக தேநீர் குடுவையை தலைகீழாகக் கவிழ்த்துக் குலுக்கினாள். மிச்ச சொச்ச துகள்கள் வெளியேறின.

நீங்கள் மிகவும் சரியாக செய்திருக்கிறீர்கள். ஒரு நல்ல காரணம் என்றால், தாராளமாகப் பொய் சொல்லலாம். ஒரு அறியா சிறுவனைக் கொன்றது யார் என்பதைத் தெரிந்து கொள்வது அவசியமா இல்லையா? பொய் சொல்வது என்ன, கொலை செய்வதை விட பெரிய தவறா.. மட்கோனி, சொல்லுங்கள்..

கொலை மிகப் பெரிய குற்றம்தான். ஆனால்..

பார்த்தீர்களா.. நீங்கள் அது பற்றி சிந்திக்கவே இல்லை. இப்போது தெரிந்து விட்டதல்லவா?

அவள், அவரைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

உடனே மட்கோனியின் மனம் அப்படியே அவள் வசம் திரும்பியது.

நான் மிகவும் கொடுத்து வைத்தவன். இவள், என்னைப் பார்த்துச் சிரிக்கிறாள். இந்த உலகில் என்னிடம் அன்பு செலுத்த யாருமே இல்லை. ஆனால், இவள் என்னைப் பார்த்து அன்புடன் சிரிக்கிறாள். இவள் சொல்வது சரிதான். கொலை செய்வதென்பது ஒரு பொய் சொல்வதை விடவும் மிகப் பெரிய குற்றம்தான்..

ரமோட்ஸ்வே புன்னகை மாறாமல் அழைத்தாள்..

உள்ளே வாருங்கள். என் காரியதரிசி மகுட்சி சூடாக தேநீர் வைத்திருக்கிறாள். அதைக் குடித்தபடி அடுத்து என்ன செய்வது என்று திட்டமிடலாம்..

-----------------------------------------------------------

ஈகரை தமிழ் களஞ்சியம் - www.eegarai.net

நம்பர் 1 பெண்கள் துப்பறியும் நிறுவனம்! - 19

-----------------------------------------------------------

சா ர்லி கோட்ஸ்ஸே, ரமோட்ஸ்வேயை உற்றுப் பார்த்தார். அவருக்கு பருமனான பெண்களிடம் மதிப்பு உண்டு. ஐந்து வருடங்களுக்கு முன்பு ஒரு குண்டுப் பெண்ணை மணந்து கொண்டவர்.

நீங்கள்தான் மட்கோனியிடமிருந்து வரும் பெண்ணா?

அவளுக்கு, அவர் கேள்வி கேட்ட விதம், குரல் எதுவும் பிடிக்கவில்லை. குரல், உப்புத்தாள் கொண்டு தேய்ப்பது போல கரகரவென்றிருந்தது. அது மட்டுமின்றி வார்த்தை சரியாகப் படவில்லை.

உனக்கு என் அதிகாரமும் அந்தஸ்தும் புரிகிறதுதானே.. அதோடு நிறுத்திக் கொள். என் தேவை என்னவோ, அதை மட்டும் செய் என்கிற தொனி அதில் இருந்தது.

மட்கோனி என் உதவியைக் கேட்டார். நான் ஒரு துப்பறிபவள்..

கோட்ஸ்ஸே, ஒரு ஏளனச் சிரிப்புடன் அவளை உற்றுப் பார்த்தார். நான், உன்னுடைய நிறுவனத்தை, காரில் போகும்போது பார்த்திருக்கிறேன். பெண்களுக்கான துப்பறியும் நிறுவனம் மாதிரி ஏதோ என்று எண்ணிக் கொண்டிருந்தேன்..

இது பெண்களுக்காக மட்டும் இல்லை. நாங்கள் பெண்களாக இருந்தாலும், ஆண்களுக்காகவும் வேலை செய்கிறோம்.. பட்டேல் கூட எங்களை கலந்தாலோசித் திருக்கிறார். அவருடைய சிரிப்பு இன்னும் விரிந்தது.

ஆண்களுக்குக் கூட நீங்கள் யோசனை கூறுவீர் களா?

ரமோட்ஸ்வே நிதானமாகப் பதிலளித்தாள்: சில சமயங்களில், சில விஷயங்களில் ஆண்கள் மிகவும் கர்வத்துடன் நடந்து கொள்வார்கள். இவள் என்ன சொல்வது.. நாம் என்ன கேட்பது என்பது போலிருப் பார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு நாங்கள் எதுவும் செய்ய மாட்டோம்.

அவர், கண்களை இடுக்கிக் கொண்டு, அவளைப் பார்த்தார். அவளுடைய பேச்சு, சந்தேகமாகவும், பல பொருள்படும்படியும் இருந்தது.

அவள், கர்வம் பிடித்தவன் என்கிறாளா.. அல்லது பிற ஆண்களைப் பற்றி கூறுகிறாளா?

எதுவும் புரியவில்லை. ஆனால், அப்படி நிறைய பேர் இருக்கிறார்களே.. எது எப்படியானாலும் சரி. என்னுடைய காரில் இருந்து பொருட்கள் களவு போயிருக்கிறது. நீங்கள் அதை யார் எடுத்தார்கள் என்று கண்டுபிடித்து விட்டீர் கள்.. என்றார்.

ரமோட்ஸ்வே ஆமோதித்து, தலையசைத்தாள்.

உங்கள் காரை உடைத்தது யார் என்று கண்டுபிடித்து விட்டேன். சில பையன்கள்தான் அதைச் செய்திருக் கிறார்கள்.

கோட்ஸ்ஸேவுக்கு கோபம் வந்தது.. அவர்கள் யார் என்று சொல்.. யார்?

நான் அதைச் சொல்ல முடியாது.. என்றாள் ரமோட்ஸ்வே.

நான் அவர்களை அடித்து, கொன்று போட வேண்டும். சொல்..

ரமோட்ஸ்வே பயப்படவில்லை. கோட்ஸ்ஸேவை நேராகப் பார்த்தாள். சில நிமிடங்கள் எதுவும் பேசவில்லை. பிறகு அவள் கூறினாள்..

அவர்கள் எடுத்த பொருளை திருப்பிக் கொடுத்து விட்டால், அவர்களைக் காட்டிக் கொடுக்க மாட்டேன் என்று ஒப்பந்தம். அது எங்களுடைய ஒப்பந்தம்..

பேசும்போதே அவளுடைய கண்கள், அந்த அறையைத் துழாவியது..

கடைகள் நிரம்பிய அங்காடிக்குப் பின்புறம் ஒரு குறுகிய சந்தில் கோட்ஸ்ஸே என்டர்பிரைசஸ் என்கிற பெரிய நீல நிறப் பலகையுடன் அமைந்திருந்தது அந்த அறை. உள்ளே, மிகவும் சாதாரண மேஜை, நாற்காலிகள் தான் காணப்பட்டன. அங்கே சுவரில் தொங்கும் புகைப் படங்கள் மட்டும் இல்லையென்றால், ஒரு பெரிய பணக்காரருடைய அலுவலக அறை என்று யாரும் நம்ப மாட்டார்கள். ஆனால், அந்தப் புகைப்படங்கள் அவரது பெருமையை பறைசாற்றின. கோட்ஸ்ஸே, பஸாத்தோவின் அரசருடன் இன்னும் பல பிரபலங்களுடன் எடுத்துக் கொண்ட புகைப்படங்கள்.. இப்படி அவரது நாட்டைக் கடந்தும் அவர் பெயர் எத்தனை தூரம் பரவியிருந்தது என்பது புரிந்தது.

நீ என் சார்பில் அவர்களுக்கு வாக்கு கொடுத்தாயா..

ஆமாம். அப்படித்தான் செய்தேன். அந்த ஒரு வழியில் தான் பொருட்கள் திரும்பக் கிடைக்கும் என்று செய்தேன்..

கோட்ஸ்ஸே ஒரு நிமிடம் யோசிப்பது போலத் தோற்றமளித்தார். ரமோட்ஸ்வே, ஒரு பெரிய தொகைக்கு கோட்ஸ்ஸே காசோலை கொடுப்பது போன்ற புகைப் படத்தை பார்த்தபடி இருந்தாள். புகைப்படத்தில் எல்லாரும் மலர்ந்த முகத்துடன் இருந்தனர். ஏதோ ஒரு நல்ல காரியத்துக்கு கொடுக்கப்பட்ட மிகப் பெரிய தொகை என்கிற விளம்பரங்கள் காணப்பட்டன.

நல்லது. அவ்வளவுதான் செய்ய முடியும் என்று நினைக்கிறேன். அந்தப் பொருள் எங்கே?

ரமோட்ஸ்வே, தன் கைப்பையிலிருந்த அந்த தோல் பையை எடுத்தாள்.

இதுதான் அவர்கள் கொடுத்தது..

அவள், மேஜை மீது வைத்ததை கோட்ஸ்ஸே கையில் எடுத்துக் கொண்டார்.

இது என்னுடையது இல்லை. என்னுடைய ஆட்களில் ஒருவனுக்கு சொந்தமானது. இதை, அவனுக்காகத்தான் பத்திரப்படுத்தி வந்தேன். இது என்ன என்று கூட எனக்குத் தெரியாது..

முட்டி.. மந்திரவாதி மருத்துவன் கொடுத்தது தானே..

இறுகிய பார்வையுடன் கோட்ஸ்ஸே கேட்டார்.

மூட நம்பிக்கையுள்ளவர்களுக்கு ஏதோ வசியமருந்து மாதிரியா?

ரமோட்ஸ்வே தலையைக் குலுக்கிக் கொண்டாள்.

நான் அப்படி நினைக்கவில்லை. அது ரொம்பவும் வீரியமான மருந்து, மிகவும் விலையுள்ளதாக இருக்கும்..

வீரியமானதா.. கோட்ஸ்ஸேவின் தலை அசையவில்லை. அதை ரமோட்ஸ்வே கவனித்துக் கொண்டாள். அவள் உதடுகள் மட்டும் வார்த்தைகளை மெதுவாக வெளியிட்டன.

ஆமாம். அது மிகவும் உபயோகமுள்ளது. எனக்கு கூட அது மாதிரி கிடைத்தால் உபயோகமாக இருக்கும்..

கோட்ஸ்ஸே, ரமோட்ஸ்வேயைக் கண்களால் அளந்தார்.

ஒருவேளை உங்களுக்கு நான் உதவக் கூடும்..

ரமோட்ஸ்வே, உடனே யோசித்து, நீங்கள் எனக்கு உதவி செய்ய முடிந்தால் நல்லது. நானும் ஏதேனும் செய்ய முடியும்.. என்றாள்.

கோட்ஸ்ஸே, மேஜை மீதிருந்த சிகரெட்டை எடுத்து, பற்ற வைத்தபடியே அவளைப் பார்த்தார்.

எந்த விதத்தில் நீ எனக்கு உதவ முடியும்? நான், தனி ஆளாக இருக்கிறேன் என்று நினைக்கிறாயா?

நீங்கள் தனி ஆசாமி இல்லை, உங்களுக்கு நிறைய பெண் சிநேகிதிகள் உண்டு என்பதும் எனக்குத் தெரியும். இன்னொரு பெண் உங்களுக்குத் தேவையில்லை..

அதை நான்தானே தீர்மானிக்க முடியும்!

இல்லை. உங்களுக்கு பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளப் பிடிக்கும். அப்படி தெரிந்தால்தான் நீங்கள், உங்களுடைய அதிகாரத்தைச் செலுத்த முடியும். நீங்கள் இன்னும் உங்களை வலுப்படுத்த முட்டி யையும் வைத்திருக்கிறீர்கள்...அப்படித்தானே..

அவர், உதட்டிலிருந்த சிக ரெட்டை எடுத்து பெரிய கண்ணாடி சாம்பல் தட்டில் வைத்தார். இப்

பொழுது பேசினார். வார்த்தை களைத் தெளிவாக உச்சரித்துப் பேசவும் முடியும் இந்த மனிதரால் என்பது போல..

மாந்திரீகத்தைப் பற்றி பேசுபவர்கள், கண்டிப்பாகப் பின்னால் வருத்தப்படுவார்கள்.. நான் ஒன்றும், உங்களை குற்றம் கூறவில்லையே.. நானே அதை உபயோகிக்கிறேன் என்று சொல்லவில்லையா.. நான் சொல்வது என்னவென்றால், இந்த ஊரில் என்னென்ன நடக்கிறது என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லையா? அதுதானே உங்கள் பலம்? உங்கள் காதுகளை மெழுகினால் அடைத்துக் கொண்டால், பல விஷயங்களை நீங்கள் தவற விட்டு விடுவீர்களே..

கோட்ஸ்ஸே, திரும்பவும் சிகரெட்டை எடுத்து ஊதினார். உன்னால் பல விஷயங்களைக் கூற முடியும். இல்லையா?

ரமோட்ஸ்வே ஆமோதித்தாள்.

என் தொழிலில் நான் பல சுவாரஸ்யமான தகவல்களை அறிந்து கொள்ள முடிகிறது. அங்காடியில் உங்களுடைய கடைக்கு அருகில் புதிய கட்டடம் கட்டுபவனைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? காபரோனுக்கு வருவதற்கு முன் அவன் என்னவெல்லாம் செய்தான் என்று தெரியுமா? அது பற்றி மற்றவர்கள் அறிவதை அவன் விரும்ப மாட்டான்..

கோட்ஸ்ஸே, தன் பல்லிடுக்கில் மாட்டியிருந்த சிகரெட் துணுக்கை எடுத்தார்.

நீ மிகவும் சுவாரஸ்யமான பெண்மணிதான். உன்னை என்னால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது. அந்த மந்திரவாதியின் பெயரைக் கூறுகிறேன். நீ இந்த உபயோகமான தகவலைக் கொடுத்தாய் பார்.. அதற்காக.. சரியா?

ரமோட்ஸ்வே தலையசைத்தாள்.

இது மிகவும் நல்லது. எனக்கு ஏதாவது புது தகவல்கள் கிடைக்கும். அது, உங்களுக்கும்

உபயோகமாக இருக்கும் பட்சத்தில், உங்களுக்கும் சொல்கிறேன்..

நீ மிகவும் நல்லவள்.

கோட்ஸ்ஸே ஒரு காகிதத்தை எடுத்தார்.

இந்த மாந்திரீகன் ஒரு காட்டில் மோஸோ போலே அருகே வசிக்கிறான். அவன் இருப்பிடத்தைக் கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டம். நான் அவன் இடத்துக்குப் போகும் வழியை வரைந்து தருகிறேன். அவன், மிகவும் அதிகமாகப் பணம் வாங்குபவன். ஆனால், கோட்ஸ்ஸே வின் சிநேகிதி என்று நீ சொன்னால் இருபது சதவிகிதம் சலுகை காட்டிக் குறைப்பான். பரவாயில்லையா?

பா றைகளுக்கு இடையே வளைந்து செல்லும் ஒரு புழுதி படிந்த பாதை. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பகல் வெயிலில் தகிக்கும் வானம். கோட்ஸ்ஸே வரைந்து காட்டிய வரைபட வழியில் ரமோட்ஸ்வே தன்னுடைய காரை எங்கே பாறைகளில் இடிபடுமோ என்கிற பயத்துடன் ஓட்டினாள்.

இது ஒரு வறண்ட பூமி. கால்நடைகளோ, ஆடுகளோ இல்லாமல் வெறும் முட்புதர்களும் கற்றாழைச் செடிகளும் நிறைந்த உயிரில்லாத பூமி. கிராமத்திலிருந்தும் நகரத்திலிருந்தும் வெகு தொலைவில் இருந்து இங்கு வந்து யார் இருப்பார்கள் என்பதே விடை காண முடியாத கேள்வி.

அவளது பார்வையில் மரங்களின் பின்னே மறைந்து கிடந்த அந்த வீடு தெரிந்தது. மிகப் பழமையான வீடு. மண்ணால் பூசப்பட்ட சுவர்கள். கண்ணாடியில்லாத ஜன்னல்கள். முழங்கால் அளவு சுவரால் சுற்றிலும் கட்டப்பட்ட முற்றம். இதுதான் அந்த வீடு. முன்பு குடியிருந்தவர்கள் சுவர்களில் பல சித்திரங்கள் தீட்டியிருந்தனர். அவையெல்லாம் உரிந்து வெளிறிக் கிடந்தன.

காரை நிறுத்தி விட்டு, மூச்சை உள்ளிழுத்துக் கொண்டாள் அவள். ஏமாற்றுக்காரர்கள், பொறாமை பிடித்த மனைவிகள், கோட்ஸ்ஸே போன்றவர்கள் என பலரையும் அவள் சந்தித்திருக்கிறாள். ஆனால், இந்த சந்திப்பு மிக வித்தியாசமாக இருக்கும் என எதிர் பார்த்தாள். இது, பாவமே உருவான ஒன்று.. இருளடைந்த ஒன்று.. அவமானச் சின்னம்.. இங்குள்ள மனிதன், மாயமந்திரம் என்று சொல்லி கொலை செய்பவன்.

கார் கதவைத் திறந்து கொண்டு வெளியே இறங்கினாள். சூரியனின் உஷ்ணம் மிகுந்த கதிர்கள் அவள் மேனியைத் தீய்த்தன.

அந்த இடம் மேற்குப்புறத்தில் கலஹாரி பாலைவனத்தின் மிக அருகில் இருந்தது. அவளுடைய தயக்கம் அதிகரித்தது. இது, அவள் வளர்ந்த அன்பான ஆப்பிரிக்கா இல்லை. இரக்கமற்ற, நீரில்லாது வறண்ட ஆப்பிரிக்கா.

அவள் அந்த வீட்டை நோக்கி நடக்கும்போது, யாரோ அவளைப் பார்த்துக் கொண்டிருப்பது போன்ற உணர்வு. எந்த சலனமும் இல்லா விட்டாலும், வீட்டின் உட்புறமிருந்து கண்கள் அவளைப் பார்ப்பது போல் உணர்ந்தாள்.

வீட்டு வாசலில் அவர்கள் வழக்கப்படி நின்று கூப்பிட்டாள்.

எனக்கு வெயிலின் சூடு தாங்கவில்லை. சிறிது தண்ணீர் வேண்டும்..

வீட்டின் உள்ளிருந்து எந்தவொரு பதிலும் வரவில்லை. ஆனால், இடதுபுறமிருந்த புதர்கள் சலசலத்தது.. குற்றவுணர்வுடன் திரும்பினாள். ஒரு பெரிய வண்டு, தனது கூர்மையான மூக்கினால், ஏற்கனவே வெயிலில் சுருண்டு இறந்து விட்ட பூச்சியை புரட்டிக் கொண்டிருந்தது.

சின்னச் சின்ன விபத்துக்கள்.. சின்னச் சின்ன வெற்றிகள்.. மனிதர்கள் மாதிரிதான் இந்த வண்டுகள்..

யார்..?

சட்டெனத் திரும்பினாள் ரமோட்ஸ்வே. ஒரு பெண்மணி தன் கையைத் துடைத்தவாறு, வீட்டு வாசலில் நின்றாள்.

சுவரின் இடைவெளி வழியே நுழைந்த ரமோட்ஸ்வே, நான் ரமோட்ஸ்வே.. வணக்கம் என்றாள்.

அந்தப் பெண்மணி தலையசைத்தாள்.

நான் நோட்ஷி..

ரமோட்ஸ்வே, அந்தப் பெண்மணியை நன்கு பார்த்தாள். வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். நீண்ட அங்கி போன்ற பாவாடையை அவள் அணிந்திருந் தாள்.

நான் உன் கணவரை சந்திக்க வந்திருக்கிறேன்.. அவரிடம் ஒன்று கேட்க வேண்டும்.

அந்தப் பெண், இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வந்து, ரமோட்ஸ்வேயை, கூர்மையாக சங்கடத்தை உண்டாக்கும் விதமாகப் பார்த்தாள்.

நீ எதையாவது என் கணவரிடம் இருந்து வாங்கு வதற்கு வந்திருக்கிறாயா?

அதை ஆமோதித்த ரமோட்ஸ்வே, அவர் மிக நல்ல மருத்துவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எனக்கு ஒரு பெண்ணுடன் தகராறு. அவள், என் கணவரை, தன் பிடியில் வைத்துக் கொண்டு இருக்கிறாள். அதை நான் நிறுத்த விரும்புகிறேன்.. என்றாள்.

அந்தப் பெண்மணி புன்னகைத்தாள்.

அவர் உனக்கு உதவ முடியும். அவரிடம் ஏதேனும் இருக்கும். ஆனால், அவர் இங்கு இல்லை. லோபட்ஸ்வேக்குப் போயிருக்கிறார். சனிக்கிழமை வரை அங்கேதான் இருப்பார். அதற்கு அப்புறம் நீ எப்பொழுது வேண்டுமானாலும் வந்து பார்க்கலாம்..

ரமோட்ஸ்வே பெருமூச்சு விட்டாள்.

ரொம்ப தொலைவிலிருந்து வந்திருக்கிறேன். எனக்கு ஒரே தாகமாக இருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் தருகிறாயா சகோதரி?

உள்ளே வா.. உட்கார்ந்து தண்ணீர் குடிக்கலாம்.

அது மிகச் சிறிய அறை. ஒரு ஓட்டை மேஜையும் இரண்டு நாற்காலிகளும் இருந்தன. தானியம் சேமித்து வைக்கும் சால் ஒன்றும் நசுங்கிய டிரங்கு பெட்டி ஒன்றும் இருந்தன.

ரமோட்ஸ்வே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள். பெரிய வெள்ளை நிறப் பானையில் அந்தப் பெண்மணி தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். சற்று உப்பு கரித்தது போலிருந்தாலும் ரமோட்ஸ்வே நன்றியுடன் அதைக் குடித்தாள்.

பானையைக் கீழே வைத்து விட்டு, அந்தப் பெண்ணைப் பார்த்தாள்.

நான் ஒன்றை வாங்குவதற்குத்தான் வந்திருக்கிறேன். ஆனால், உன்னை எச்சரிக்கை செய்வது அவசியம் என்று நினைக்கிறேன்.. என்றாள்.

அந்தப் பெண்மணி, அப்படியே இன்னொரு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"எச்சரிக்கை செய்ய வந்தாயா?" என்ற மாந்திரீகனுடைய மனைவி, ரமோட்ஸ்வேயை விறைத்துப் பார்த்தாள்.

"ஆமாம். நான் ஒரு டைப்பிஸ்ட். அப்படி என்றால் என்ன என்று தெரியுமா?"

'தெரியும்' என்பது போல, அந்தப் பெண்மணி தலையசைத்தாள்.

"நான் போலீஸுக்கு வேலை செய்கிறேன். உன் கணவரைப் பற்றிய விவரங்களை நான் டைப் செய்தேன். காட்ஸானாவிலிருந்து பையனை அழைத்துப் போய் அவன் கொன்று விட்டான் என்பது போலீஸ§க்குத் தெரியும். முட்டி மந்திரவாதிக்காக அவன்தான் அந்தப் பையனைக் கடத்திச் சென்றான் என்பதும் போலீஸ் இலாகாவுக்குத் தெரியும். அவர்கள் சீக்கிரமே உன் புருஷனை கைது செய்து, தூக்கில் தொங்க விடப் போகிறார்கள். நீயும் அதில் சம்பந்தப்பட்டிருக்கிறாய் என அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், பெண்களைத் தூக்கில் போடுவதை நான் விரும்பவில்லை. நான் எதற்கு இங்கே வந்தேன் என்றால், உன்னை என் கையோடு கூட்டிப் போய், போலீஸிடம் நீ எல்லா உண்மைகளையும் சொல்ல முன் வந்தால்.. உன்னை விட்டு விடுவார்கள். இந்த அபாண்டத்திலிருந்து உன்னை மீட்கலாம். உண்மையை ஒப்புக் கொண்டால் அவர்கள் உன்னை நம்புவார்கள். இல்லையென்றால், அநேகமாக நீ அடுத்த மாதத்துக்குள் தூக்கில் தொங்க நேரலாம். போலீஸ§க்கு ஆண், பெண் என்கிற பாகுபாடெல்லாம் கிடையாது."

ரமோட்ஸ்வே இப்படிக் கூறி விட்டு நிறுத்தினாள். அந்தப் பெண்மணி, கையிலிருந்த துணியை நழுவ விட்டு, ரமோட்ஸ் வேயையே பயத்துடன், வைத்த கண் வாங்காமல் பார்த்தாள்.

ரமோட்ஸ்வேக்கு, பயப்படுபவர்களின் வாசனை தெரியும். இப்போது அந்த அறை முழுவதும் பயத்தின் வாடை நிறைந்திருந்தது.

"உனக்கு நான் சொல்வது புரிந்ததா?"

"நான் அந்தப் பையனைக் கொல்லவில்லை" - அந்த மந்திரவாதியின் மனைவி, பீதியுடன்

முனகினாள்.

"எனக்கு நன்றாகத் தெரியும்.. பெண்கள் இவ்வாறு செய்ய மாட்டார்கள் என்று. ஆனால், போலீஸ§க்கு அது பற்றி கவலையில்லை. அரசாங்கத்திடம் உனக்கு எதிரான ஆதாரங்கள் இருக்கின்றன. உன்னையும் சேர்த்துதான் தூக்கில் போடுவார்கள். முதலில் உன் கணவன்.. அடுத்தது நீ! இந்த மாயமந்திரங்கள் எல்லாம் போலீஸ§க்கோ, அரசாங்கத்துக்கோ பிடிக்காது. அது அவமானப்பட வேண்டிய ஒன்று என அவர்கள் நினைக்கிறார்கள். இந்தக் காலத்துக்கு ஏற்றதில்லை என்று கருதுகிறார்கள்.."

"அந்தப் பையன் இறக்கவில்லை. ஆடு, மாடுகளை வைத்திருக்கும் இடத்தில் அவன் வேலை செய்கிறான். அவன் உயிருடன்தான் இருக்கிறான்.."

அவ்வளவுதான்.. ரமோட்ஸ்வே, அந்தப் பெண்மணியையும் காரில் ஏற்றிக் கொண்டு, கார் கதவை அறைந்து சாத்தினாள். காரைச் சுற்றி வந்து, டிரைவிங் ஸீட்டில் ஏறி உட்கார்ந்தாள். சூரிய வெப்பம், உடை வழியே ஊடுருவிச் சென்று தகித்தெடுத்தது. ஆனால், அதையெல்லாம் இப்போது அவள் லட்சியம் செய்யவில்லை. அந்தப் பெண் சொன்னது போல, சுமார் நான்கு மணி நேரம் பயணம் மேற்கொள்ள வேண்டும். இப்போது மதியம் ஒரு மணி. இதே வேகத்தில் போனால் மாலை ஐந்து மணிக்குள் அங்கு சென்று விடலாம். திரும்பி வருவதற்குள் இருட்டி விட்டால், வண்டியிலேயே தூங்க வேண்டியதுதான். அந்தப் பையனை எப்படியாவது காப்பாற்றி விட வேண்டும். அதுதான் இப்போது முக்கியம்.

அவர்கள் பயணம் மௌனமாக கடந்தது. அந்தப் பெண்மணி ஏதோ பேச முயற்சித்தபோது, ரமோட்ஸ்வே அதைக் கண்டுகொள்ளவில்லை. அவளுக்கு, அந்தப் பெண்மணியுடன் முகம் கொடுத்துப் பேசப் பிடிக்கவில்லை.

"நீ நல்ல பெண் இல்லை. நான் உன்னுடன் பேச இவ்வளவு முயற்சித்தும், நீ என்னை அலட்சியப் படுத்துகிறாய். உனக்கு, என்னைவிடவும் நீ உயர்ந்தவள் என்கிற நினைப்பு.. அப்படித்தானே?"

ரமோட்ஸ்வே, அரை வட்டமாகக் கழுத்தைத் திருப்பி, அவளைப் பார்த்தாள்.

"நீ உயிர்பிழைக்க வேண்டும் என்கிற ஒரே எண்ணத்தினாலும் பயத்தினாலுமே, அந்தப் பையன் இருக்கும் இடத்தைக் காட்டத் துணிந்திருக்கிறாய். அவன், தன் பெற்றோரிடம் போய்ச் சேர வேண்டும் என்கிற எண்ணம் உனக்குத் துளி கூடக் கிடையாது. நீ மிகவும் கொடூரமானவள். நீயும் உன் கணவனும் இது போன்ற மாந்திரீக வேலைகளில் ஈடுபட்டிருப்பது அரசாங்கத் துக்குத் தெரிய வந்தால், உன்னை ஜெயிலுக்கு அனுப்பி, தீர்த்துக் கட்டி விடுவார்கள். அவர்கள் இல்லையென்றாலும் நிறைய நண்பர்கள் உண்டு. காபரோனில் அவர்கள் வந்து, போலீஸ§க்கு உதவுவார்கள். நான் சொல்வது உனக்கு புரிகிறதா?"

நேரம் சென்று கொண்டிருந்தது. கடைசியாக கால்நடைகள் இருக்கும் இடமும் சில மரங்களும் சில குடிசைகளும் தென் பட்டன.

"இதுதான் மந்தைகள் தங்குமிடம். அங்கே பாஸர்வா ஆணும் பெண்ணும், அந்தப் பையனும் இருக்கிறார்கள்."

"அந்தப் பையன் ஓடி விட மாட்டானா.."

"சுற்றிலும் பார். அவன் எங்கே ஓட முடியும்? அவன் கொஞ்ச தூரம் போவதற்குள், அவனைப் பிடித்து விடுவார்கள்.."

ரமோட்ஸ்வேக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது.. 'பையன் உயிருடன் இருந்தால், எலும்புத் துண்டு எப்படி, எங்கிருந்து வந்தது..?'

அவள், உடனே கேட்டாள்..

"காபரோனில் உள்ள ஒருவன், உன் கணவரிட மிருந்து எலும்பு ஒன்றை வாங்கியிருக்கிறான். அது எங்கே கிடைத்தது?"

அந்தப் பெண் ரமோட்ஸ்வேயை வெறுப் புடன் பார்த்தபடி, "ஜோஹன்ஸ்பர்க்கில் எவ்வளவு எலும்பு

வேண்டுமானாலும் வாங்கலாம். அது உனக்குத் தெரியாதா? விலை அதிகமில்லை.." என்றாள்.

பாஸர்வா ஆணும் பெண்ணும் ஒரு குடிசையின் முன்னால் உட்கார்ந்தபடி, கரடு முரடான ஏதோ ஒன்றைக் கடித்துக் கொண்டு, கஞ்சியை சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் மிகவும் சிறிய, உலர்ந்த தோற்ற முடையவர்களாகவும், வேட்டையாடுபவர்கள் போல பெரிய கண்களை உடையவர்களாகவும் இருந்தனர். வந்தவர்களை வெறித்துப் பார்த்தனர். அந்த ஆண் எழுந்து, மந்திரவாதியின் மனைவிக்கு வணக்கம் செலுத்தினான்.

"ஆடு, மாடுகள் எல்லாம் நன்றாக இருக்கின் றனவா?" - அவள் கடுமையாகக் கேட்டாள்.

அந்த மனிதன், நாக்கை மடித்து ஒரு மாதிரி ஓசை எழுப்பி, "ஆம்.. ஒன்றும் சாகவில்லை. இங்குள்ள பசு நிறைய பால் தருகிறது" என்றான்.

'ஸெட்ஸ்வானா' மொழியில் அவர்கள் பேசிய போதிலும், அதைப் புரிந்து கொள்ள சற்று கூர்ந்து கவனிக்க வேண்டியிருந்தது. கலஹாரியைச் சேர்ந்தவர்கள் பேசுவது போல அவர்களது உச்சரிப்பு இருந்தது.

"அந்தப் பையன் எங்கே?" - மந்திரவாதியின் மனைவி கடுப்புடன் கேட்டாள்.

"அந்தப் பக்கம்" என்றவள், 'அதோ பாருங்கள்' என சுட்டிக் காட்டினாள்.

புதரின் அருகில் அழுக்கு உடையுடனும் கையில் குச்சியுடனும் அந்தப் பையன் நின்ற படி, இவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"இங்கே வா.." - மந்திரவாதியின் மனைவி அழைத்தாள்.

அந்தப் பையன், தன் முன்னால் குனிந்து பார்த்தபடி இவர்களை நோக்கி வந்தான். அவனது முன்

காலில் தடிமனான கறுத்த தழும்பு காணப்பட்டது. உடனேயே அது சாட்டையினால் அடித்த வடு என்று ரமோட்ஸ்வேக்குத் தெரிந்து விட்டது.

ரமோட்ஸ்வே, தன் கையை அவனது தோளில் வைத்தபடி, "உன் பெயர் என்ன.. நீதானா அந்த காட்ஸானா வாத்தியாரின் மகன்?" என கேட்டாள்.

பையனின் உடம்பில் நடுக்கம் தோன்றியது.

"நான் இப்போது இங்கே வேலை செய்கிறேன். இவர்கள், என்னை மாடு மேய்க்க வைக்கிறார்கள்."

"இந்த மனிதன் உன்னை அடித்தானா..?"

ரமோட்ஸ்வே குனிந்து, ரகசியமாக அந்தச் சிறுவனைக் கேட்டாள்.

"எப்போதும்.."

அவளை விடவும் மெதுவான குரலில் கூறிய பையன் கூடவே இதையும் சொன்னான்..

"நான் தப்பி ஓட முயன்றால், காட்டுக்குள் தேடிப் பிடித்து, கூர்மையான கம்பியினால் என்னைக் குத்திக் கொன்று விடுவதாகக் கூறுவான்.."

"நீ இப்போது பத்திரமாக இருக்கிறாய்.. நீ என்னுடன் வரப் போகிறாய்.. என் முன்னால் பேசாமல் நட.. நான் உன்னைப் பார்த்துக் கொள்கிறேன்.."

அவன் பாஸர்வாக்களைப் பார்த்தபடி, காரை நோக்கிச் சென்றான். ஒருமுறை திரும்பிப் பார்த்தான்.

"நீ போய்க் கொண்டே இரு.. நான் உன் பின்னால் வருகிறேன்.."

அந்த மந்திரவாதியின் மனைவி, "நில்.. நான் இவர்களிடம் சில சமாசாரங்களைப் பேசி விட்டு வருகிறேன். சற்று நேரம் பொறு" என ரமோட்ஸ்வேயைப் பார்த்து கத்தினாள்.

ரமோட்ஸ்வே பையனை காரில் ஏற்றி விட்டு, டிரைவர் ஸீட்டில் உட்கார்ந்து, காரை அறைந்து சாற்றி விட்டு கிளம்பினாள். வண்டி ஒரு வட்டமடித்துத் திரும்ப, அந்தப் பெண்மணி, கத்தியபடியே வண்டியின் பின்னே ஓடி வந்தாள். ஆனால், புழுதிப் புகை அவள் கண்களை மறைத்ததனால், கல் தடுக்கி கீழே விழுந்தாள்.

ரமோட்ஸ்வே, பயத்துடனும் குழப்பத்துடனும் உட்கார்ந்திருந்த அந்தப் பையனைப் பார்த்தாள்.

"நான் உன்னை, உன் வீட்டுக்கு அழைத்துப் போகிறேன். ஆனால், அது மிகவும் தொலைவில் இருக்கிறது. அதனால் ராத்திரி எங்காவது தங்கும்படி நேரிடலாம். காலையில் எழுந்தவுடன் சீக்கிரம் போய் விடலாம்.."

அந்தச் சிறுவன் கண்ணீர் மல்க தலையாட்டினான்.

ஒரு மணி நேரம் கடந்த பின், வண்டியை ஒரு வறண்ட நதிக்கரையோரம் நிறுத்தினாள். எங்கும் கும்மிருட்டு. நட்சத்திரங்களின் ஒளி, கீற்றுகளாக அவர்கள் மேல் படிந்தது. அந்தப் பையன் ஒரு போர்வைக்குள் நன்றாக சுருண்டு, இவள் கைகளின் மேல் தலையை வைத்தவாறு தூங்கிக் கொண்டிருந்தான்.

ஆகாயத்தை நோக்கியவாறு விழித்திருந்த ரமோட்ஸ்வேயும் சிறிது நேரத்தில் கண்ணயர்ந்தாள்.

காட்ஸானா கிராமத்தில், அந்தப் பள்ளி ஆசிரியர் வீட்டுக்கு வெளியே வந்து பார்த்தபோது, ஒரு வெள்ளை நிற கார் அவர் வீட்டின் முன்னே நின்று அதிலிருந்து ரமோட்ஸ்வே இறங்குவதைப்

பார்த்தார்.

'இவள் யார்.. யார் அந்தக் குழந்தை? ஒருவேளை அந்தக் குழந்தையைப் பெற்றவளாக இருக்குமோ.. என்ன காரணத்துக்காக அழைத்து வருகிறாள்..?'

அவர் வீட்டை விட்டு வெளியே வந்து தனது வீட்டின் முன்பகுதி புல்வெளியைக் கடந்து 'கேட்'டைத் திறந்தார்.

"நீங்கள்தான் ஆசிரியர் 'ரா'வா?"

"ஆமாம். நான்தான். உங்களுக்கு என்ன வேண்டும் மேடம்?"

அவள், இதற்குப் பதிலளிக்காது, காரில் இருந்த சிறுவனுக்கு இறங்கி வரும்படி சைகை காட்டினாள்.

கார் கதவு திறந்து அவருடைய மகன் வெளிப்பட, ஆசிரியர் கதறி விட்டார். ஓடிச் சென்றவர், சற்று தயங்கி, 'இது உண்மைதானா..' என்பதுபோல ரமோட்ஸ்வேயைப் பார்த்தார். அவள் ஆமோதிப்பதுபோலப் புன்னகைக்க, மறுபடியும் ஓடி, கால் தடுமாறியபடி பையனை வாரி அணைத்தார். சிறுவன் மகிழ்ச்சியுடன் ஊர் முழுக்கக் கேட்கும்படியாகக் கத்தி, தான் திரும்பி வந்து விட்டதைத் தெரிவித்தான்.

ரமோட்ஸ்வேக்கு அவர்களது அந்தரங்கமான மகிழ்ச்சியைக் கெடுப்பதில் விருப்பமில்லை. ஆதலால், இடையூறு செய்யாமல் தன்னுடைய வண்டியை நோக்கிச் சென்றாள். அவளும் அழுதபடி தன் கையை இறுகப் பிடித்தபடியே, எப்போதோ வேறு உலகத்துக்குச் சென்று விட்ட தன் குழந்தையின் மறைவை நினைத்துக் கொண்டாள். ஆப்பிரிக்காவில் துன்பங்களுக்குப் பஞ்சமே இல்லை. தோளைக் குலுக்கியபடி அதை அலட்சியம் செய்து விட்டு நடக்கலாம் என்று தோன்றும்.

ஆனால், அது எப்போதுமே முடியாது.. அவளால் முடியாது..

மைல் கணக்காக, கஷ்டப்பட்டு நிற்காமல் ஓடிக் கொண்டிருந்த, அந்தப் புழுதி படிந்த வெள்ளை கார், அவ்வளவு தொலைவு தொந்தரவு கொடுக்காமல் ஓடியதே பெரிய விஷயம். டவுனுக்கு வந்தவுடன் திணற ஆரம்பித்து விட்டது.

நிச்சயம் இதுவும் புழுதி செய்த வேலைதான் எனத் தீர்மானித்தாள் ரமோட்ஸ்வே.

மட்கோனியைத் தொந்தரவு செய்ய விருப்பமின்றி, அவருடைய நிறுவனத்துக்கு போன் செய்தாள். காரிய தரிசி வெளியே சென்றிருந்ததால், அவரேதான் போனை எடுத்தார். காரைப் பற்றி அவள் கவலைப்பட வேண்டாம் என்றும், மறுநாள் சனிக்கிழமையாதலால் தானே வந்து சரிசெய்து விடுவதாகவும் அவர் கூறினார்.

"எனக்கு அப்படி, அதை சுலபமாகச் சரிசெய்து விட முடியும் என்று தோன்றவில்லை.. அது மிகவும் வயதான பசுமாடு மாதிரி இருக்கிறது. வந்த விலைக்கு விற்று விடுவது நல்லது என தோன்றுகிறது.." - ரமோட்ஸ்வே கூறினாள்.

"அதற்குத் தேவையே இருக்காது. எது எப்படியானாலும் சரிசெய்து விடலாம்.." என்ற மட்கோனி, தனக்குள் நினைத்துக் கொண்டார்..

'எப்படியானாலும் சரி செய்து விடலாம்.. எப்படி யானாலும்.. இதயமே இரண்டு துண்டானாலும் அதை சரிசெய்து விட முடியுமா? கேப் டவுனில் இருக்கும் டாக்டர் பெர்னார்ட்டிடம் கேட்க வேண்டும்.. தனிமை யினால் ரத்தம் வடிந்து கொண்டிருக்கும் மனிதனின் இதயத்தை சரி செய்ய முடியுமா என்று..'

ரமோட்ஸ்வே அன்று காலை மார்க்கெட்டுக்குப் போய் இருந்தாள். சனிக்கிழமை காலை என்றாலே அவளது முக்கிய மான வேலைகளில் ஒன்று - அங்காடிக்குச் சென்று மளிகை சாமான்கள் வாங்குவதும், வெளியில் உள்ள நடைபாதை கடைகளில் காய்கறிகளை வாங்குவதும்.

அன்றும் அப்படித்தான். பிறகு பிரசிடென்ட் ஹோட்டலுக்குச் சென்று காபி குடித்தாள்.

வீடு திரும்பி, செய்தித்தாளுடன் வெராந்தாவில் அமர்ந்து படிக்க ஆரம்பித்தாள். அவளுக்கு செய்தித் தாள்களில் வருகிற எல்லா விவரங்களையும் ஒன்று விடாமல் படிக்க வேண்டும். இது துப்பறியும் தொழிலுக்கு மிகவும் அவசியம் என்று எண்ணுவாள். அரசியல்வாதி களின் பேச்சிலிருந்து, மாதா கோயில் அறிவிப்பு வரை..

வைரம் கடத்துபவர்கள் என்றால், ரமோட்ஸ்வே வரிசையாக அவர்கள் பெயர்களை ஒப்பிப்பாள்.

அவளுக்குப் புரியாததெல்லாம் ஒன்றுதான்.. இந்த மக்கள், தாங்கள் வாழும் ஊரிலும் நகரத்திலும் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே எப்படி வாழ்கிறார்கள் என்பதுதான் அது!

மட்கோனி மாலை நான்கு மணி சுமாருக்கு, தன்னுடைய கம்பெனி பெயர் எழுதப்பட்ட நீல நிற காரில் வந்தார். வேலை செய்யும் உடையிலேயே வந்திருந்தாலும், அவரது உடை நன்றாகத் துவைக்கப்பட்டு, கசங்கல் இல்லாமல், அழகாக இஸ்திரி செய்யப்பட்டிருந்தது.

தன்னுடைய சின்ன வண்டியை, வீட்டருகில் நிறுத்தி இருந்தாள் ரமோட்ஸ்வே. அங்கே, அவரை அழைத்துச் சென்றாள். மட்கோனி, தன்னுடைய வண்டியிலிருந்து பெரிய வண்டி தூக்கி நிறுத்தும் கருவியை எடுத்து, உருட்டிச் சென்றார்.

"நான் உங்களுக்கு தேநீர் கொண்டு வருகிறேன். அதைக் குடித்துக் கொண்டே வண்டியைப் பார்க்கலாம்.."

ரமோட்ஸ்வே இதை சொல்லி விட்டு, தேநீர் கலக்க வர, சமையலறை ஜன்னல் வழியே அவள் பார்த்தபோது அவர் என்ஜினின் பாகங்களை எடுத்து தட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். பின், டிரைவர் ஸீட்டில் உட்கார்ந்து என்ஜினை முடுக்கினார். அது சற்று உறுமி விட்டு பின் நின்றது. என்ஜினிலிருந்து கம்பிகளும் குழாய்களும் தொங்கிக் கொண்டிருக்கும் ஒரு பெரிய பாகத்தை வெளியே எடுத்தார்.

"இதுதான் வண்டியின் இதயம்போல இருக்கிறது.. பாவம்.. இத்தனை நாள் உழைத்து விட்டு, இப்போது பரிதாபமாகக் காணப்படுகிறது" - ரமோட்ஸ்வே எண்ணினாள்.

மட்கோனி, அவருடைய வேனுக்கும் ரமோட்ஸ்வேயின் காருக்குமாக அலைந்து கொண்டிருந்தார். மூன்று கோப்பை தேநீர் குடித்தாயிற்று. வெயில் சுட்டெரித்தது. ரமோட்ஸ்வே, காய்களை அடுப்பில் வேக வைத்து விட்டு, பின்பு ஜன்னல் மேல் வைத்திருந்த சிறிய செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றினாள். மாலை நேரம் நெருங்கிக் கொண்டிருந் தது. ஆகாயம் முழுவதும் பொன்னிறமாக மாறியிருந்தது. பறவைகளின் ஒலியும், பூச்சிகளின் கிறீச்சிடும் சத்தமும் நிறைந்த இதுபோன்ற மாலை நேரம் அவளுக்குப் பிடித்தமான ஒன்று. அந்த மங்கலான ஒளியில் மாடுகள் வீடு திரும்பிய பிறகு, குடிசைகளின் வாசலில் இரவு சமைப்பதற்கு விறகு அடுப்பு எரிய ஆரம்பிக்கும்..

ரமோட்ஸ்வே, மட்கோனி வேலை செய்ய இன்னும் கொஞ்சம் வெளிச்சம் தேவையா என்று பார்க்க வெளியே வந்தாள். அவர், இவளது வெள்ளை கார் அருகே நின்ற படி, கையை துணியில் துடைத்துக் கொண்டிருந்தார்.

"இப்போது எல்லாம் சரியாகி விட்டது. என்ஜினை படு ஜோராக்கி விட்டேன். அது இப்போது, தேனீ மாதிரி ரீங்காரமாக இருக்கிறது. பழைய சத்தமே இல்லை."

ரமோட்ஸ்வே, உற்சாகமாகக் கை தட்டினாள்.

"இது ஒன்றுக்கும் உதவாத வண்டி என்று நான் நினைத்தேன்.."

அவர் சிரித்தார்.

"நான்தான் சொன்னேனே.. கிழட்டு வண்டியைக் கூட சரி செய்ய முடியும் என்று.."

அவர், அவளைத் தொடர்ந்தார். ரமோட்ஸ்வே கோப்பைகளில் சிக்கன் சூப் எடுத்து வர, இருவரும் வெராந்தாவின் போகன்வில்லா செடிக்குக் கீழ் அவளுக்குப் பிடித்தமான இடத்துக்கு சென்று

அமர்ந்தனர். சற்று தொலைவில் யார் வீட்டிலிருந்தோ இனிமையான பழைய சங்கீதம் காற்றில் மிதந்து வந்தது.

சூரியன் மறைந்து இருள் சூழ்ந்தது. இருட்டில் உட்கார்ந்தபடி, இரவு சத்தங்களை அனுபவித்தபடி இருவரும்.. தூரத்தில் ஒரு நாய் குரைத்தது. ஒரு கார் சீற்றத்துடன் கிளம்பியது. சூடான புழுதிக் காற்று, முள் மர வாசனையுடன் வீசியது.

அவர், அவளை அந்த இருட்டில் பார்த்தார். அவள் தான் அவருக்கு சகலமும் என மறுபடி தோன்றியது. ஒரு தாய், ஆப்பிரிக்கா, அறிவு, அன்பு, புரிந்து கொள்ளும் தன்மை, பூசணிக்காய், சாப்பிடும் நல்ல விஷயங்கள், கோழிகள், இளம் கன்றுகளின் வாசம், முடிவில்லாத முட்புதர், எல்லையற்று விரிந்து கிடக்கும் வானம், போட்ஸ்வானா, அவரது வீடு.. ஏன், அவரே கூட அவளுக்குள் அடங்கி இருப்பதாக உணர்ந்தார்..

இதெல்லாம் அவரது எண்ணங்கள். அவள் மனதில் இருப்பதை யார் அறிவார்கள்.. எப்போது அவர் தன் உள்ளத்தில் இருப்பதைக் கூற முயற்சித்தாலும் வார்த்தை களால் வர்ணிக்க முடியாது என்றே தோன்றுகிறது அவருக்கு.

ஒரு மெக்கானிக் கவிஞனாக முடியுமா?

அதனால், அவர் இதைத்தான் கூறினார்..

"நான், உன்னுடைய வண்டியை சரிசெய்ததற்கு மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். யாராவது, 'இதை சரி செய்ய முடியாது' என்று பொய் சொல்லலாம். அப்படிப் பட்ட மனிதர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள்.."

"தெரியும். ஆனால், நீங்கள் அப்படிப்பட்டவர் இல்லை.."

அவர் ஒன்றும் பதில் பேசவில்லை. சில சமயங்களில் நாம் கண்டிப்பாகப் பேச வேண்டும். இல்லை

என்றால் அதற்காக ஆயுள் முழுக்க வருந்தும்படி நேரிடும். ஒவ்வொரு முறையும் தன் மனதில் உள்ளதைக் கூற வரும்போதும், தயக்கத்தில் அந்த எண்ணத்தை கை விட்டு விடுவார். ஏற்கெனவே அவர் ஒரு முறை மணந்து கொள்ளும்படி கேட்டு, அது தோல்வியில் முடிந்ததே.. போதாதா? அது முதல் அவருக்கு மனிதர்களை விடவும் கார்கள் மீது நம்பிக்கை அதிகமாகி விட்டது. இருந்தாலும்.. இன்னும் ஒரு முறை கேட்டால்தான் என்ன..

அவள், 'சூப்'பை கரண்டியால் கலக்கிக் கொண்டிருந் தாள்.

"எனக்கு இப்படி, இங்கே உன்னோடு இருப்பது மிகவும் சந்தோஷமாக இருக்கிறது.."

அவள், அவர் பக்கம் திரும்பினாள்.

"என்ன சொன்னீர்கள்?"

"என்னை மணம் செய்து கொள் ரமோட்ஸ்வே.. நான் வெறும் மட்கோனி.. அவ்வளவுதான். என்னை மணந்து, என்னை சந்தோஷமாக வைத்துக் கொள்ளேன்.."

வார்த்தைகளை முடிக்கும்போதே, உணர்ச்சிப் பெருக்கில் அவருக்குத் தொண்டை கம்மியது..

அவரையே பார்த்த ரமோட்ஸ்வே சொன்னாள்..

"செய்து கொள்கிறேன். நிச்சயமாக!"

**- நிறைவுற்றது**